# சங்க இலக்கியத்தில் சொர்க்கமும் நரகமும்

அழகப்பா பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**கரு. சமத்துவம்,** எம்.ஏ., எம்.ஃபில்., டி.ஜி.டி.,

(பதிவு எண் : **664**)

நெறியாளர்

முனைவர். **தே. சொக்கலிங்கம்,** எம்.ஏ., பி.ஓ.எல்., பிஎச்.டி.,

தமிழ்த்துறைத் தலைவர் (ஓய்வு)

அழகப்பா பல்கலைக்கழகம்,

காரைக்குடி - 3.









தமிழ்த்துறை

**அழகப்பா பல்கலைக்கழகம்,**

காரைக்குடி - 3.

செப்டம்பர் - 2007

**முனைவர் தே.சொக்கலிங்கம்,** எம்.ஏ.,பி.ஓ.எல்.,பிஎச்.டி.,
தமிழ்த்துறைத் தலைவர் (ஓய்வு).,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

---

நாள் : 13.09-07

## ஆய்வு நெறியாளர் சான்றிதழ்

**சங்க இலக்கியத்தில் சொர்க்கமும் நரகமும்** என்னும் தலைப்பில் திருமதி.**கரு.சமத்துவம்** அவர்கள் செய்துள்ள இவ் ஆய்வு காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இந்த ஆய்வின் மீது அவருக்கு வேறு எந்தப் பட்டமும் அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

(தே.சொக்கலிங்கம்)
நெறியாளர்

13/9/07

துறைத்தலைவர்
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

**கரு.சமத்துவம்,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

---

நாள் : 13.09.07

## ஆய்வாளர் சான்றிதழ்

**சங்க இலக்கியத்தில் சொர்க்கமும் நரகமும்** என்ற தலைப்பில் முனைவர் பட்டத்திற்காகச் செய்யப்பெற்ற இந்த ஆய்வு என் முயற்சியில் உருவானதாகும். இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ் ஆய்வேடு அளிக்கப்பெறவில்லை என உறுதியளிக்கிறேன்.

**(கரு.சமத்துவம்)**
ஆய்வாளர்

உறுதிக் கையொப்பம்

**(தே.சொக்கலிங்கம்)**
தமிழ்த்துறைத் தலைவர் (ஓய்வு).,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

# நன்றியுரை

**சங்க இலக்கியத்தில் சொர்க்கமும் நரகமும்** என்னும் தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ள எனக்கு அனுமதியளித்த **அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும், தமிழ்த்துறைக்கும்** நன்றி கூறக் கடப்பாடுடையேன்.

'செய்ந்நன்றி கொன்றோர்க்கு உய்வில்லை' எனவே ஆய்வினைச் செவ்வனே செய்தற்குப் பல்லாற்றானும் நெறிப்படுத்திய தமிழ்த்துறைத் தலைவரும் (ஓய்வு) எனது நெறியாளருமான பேராசிரியப் பெருந்தகை **முனைவர்.தே.சொக்கலிங்கம்** அவர்களுக்கு என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ்த்துறைத் தலைவராக இருந்து தற்பொழுது பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் தேர்வுக்கட்டுப்பாட்டு அதிகாரியாகப் பணிபுரிந்து வரும் **முனைவர்.இரா.பாலசுப்பிரமணியன்** அவர்களுக்கு என் நன்றி.

என் ஆய்விற்குப் பலவாறு உதவிய தமிழ்த் துறைத்தலைவர் பேராசிரியர் **முனைவர்.மு.பாண்டி** அவர்களுக்கும் தமிழ்நாடு வேளாண்மைத் துறை இணை இயக்குநர் **முனைவர்.கு.சண்முகசுந்தரம்** அவர்களுக்கும் மனமார்ந்த நன்றிகள்.

தமிழ்த்துறையின் இணைப் பேராசிரியர்களான **முனைவர். சே.செந்தமிழ்ப்பாவை, முனைவர்.சு.இராசாராம், முனைவர்.இரா.தாமோதரன்** ஆகியோர்க்கும் ஆய்விற்கு நூல்கள் கொடுத்து உதவிய விரிவுரையாளர் **திரு.மு.நடேசன்** அவர்களுக்கும், விரிவுரையாளர் **முனைவர்.மு.சுதா** அவர்களுக்கும் நன்றி.

எனது பேராசிரியர்களான முனைவர்.மு.பழனிஇராகுலதாசன், முனைவர்.சபா.அருணாச்சலம் ஆகியோருக்கும் நன்றிகள் பல.

ஆய்வினை விரைந்து முடிக்கத்தூண்டிய நண்பர்களான மு.பஞ்சவர்ணம், தி.ரமா, இரா.விமலா, க.அமுதா, சி.சிதம்பரம், பா.தியாகராஜன், இரா.ரேணுகாகாந்தி, சோ.முத்தமிழ்செல்வன், பசு.செல்வமீனா, கவிதா, த.கண்ணன், இர.தாமரைச்செல்வி, இ.மேகலா, மு.பாலு, சி.பூங்கொடி, ஜெ.பிருந்தாஸ்ரீ, முனைவர் வெ.சத்திய நாராயணன், வே.முத்தமிழ், கு.புஷ்பலதா, இரா.ரேகா, கி.லெட்சுமிபிரபா ஆகியோருக்கு என் நெஞ்சார்ந்த நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

என்னைப் படிக்க வைத்து தமிழ் உலகிற்கு அறிமுகப்படுத்திப் பெருமை தேடித்தந்த என் பெற்றோருக்கும், சகோதரருக்கும், தோல்வி கண்டு துவண்டு போகாதிருக்கும்படி என்னை ஊக்கப்படுத்திய கணவருக்கும், அமிழ்தினும் மேலான என் அன்பிற்கினிய மகனுக்கும் நட்பு உள்ளம் கொண்ட உறவாக உலாவரும் ஜெ.ஜீவிதாவிற்கும், மா.ஜெயராஜ் அவர்களுக்கும் மற்றுமுள்ள உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் நன்றி செலுத்தக் கடப்பாடுடையேன்.

ஆய்வினைச் செம்மையாக அச்சிட்டுத் தந்த சரவணா கணினி அச்சக நிறுவனத்தாருக்கும், சிறப்பாகக் கட்டமைப்புச் செய்த ரவி அச்சகத்தார்க்கும் மனமார்ந்த நன்றிகள்.

'விரிப்பின் அகலும் தொகுப்பின் எஞ்சும்' என்பதால் ஆய்வேடு வெளிவரத் துணைபுரிந்த அனைத்து உள்ளங்களுக்கும் என் அன்புசார் நன்றிகளைத் தெரிவிக்கிறேன்.

- கரு.சமத்துவம்

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| அகம். | - அகநானூறு |
| ஆ.நி. | - ஆசிரிய நிகண்டு |
| இ.க. | - இறையனார் களவியல் |
| உ.ஆ | - உரையாசிரியர் |
| கலி. | - கலித்தொகை |
| குறுந். | - குறுந்தொகை |
| திருமு. | - திருமுருகாற்றுப்படை |
| தொல்.சொல்.வினை | - தொல்காப்பியம் சொல்லதிகாரம் வினையியல் |
| தொல்.பொருள்.களவு | - தொல்காப்பியம் பொருளதிகாரம் களவியல் |
| தொல்.புறத் | - தொல்காப்பியம் புறத்திணையியல் |
| தொ.ஆ | - தொகுப்பாசிரியர் |
| நற். | - நற்றிணை |
| நூ. | - நூற்பா |
| ப. | - பக்கம் |
| பக். | - பக்கங்கள் |
| ப.ஆ | - பதிப்பாசிரியர் |
| பட். | - பட்டினப்பாலை |
| பதிற். | - பதிற்றுப்பத்து |
| பரி. | - பரிபாடல் |
| பா.எண் | - பாடல் எண் |
| புறம். | - புறநானூறு |
| பெரும். | - பெரும்பாணாற்றுப்படை |
| மது. | - மதுரைக்காஞ்சி |
| மேலது | - மேலே சுட்டிய நூல் |
| வ.எண் | - வரிசை எண் |

# பொருளடக்கம்

# முன்னுரை

## ஆய்வுப் பொருள்

தமிழரின் தொன்மைச் சிறப்பை விளக்குவன சங்க இலக்கியங்கள். அவை எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் என்பன. பல பாடல்களைத் தொகுத்து ஒரு தொகுதியாக்கி உள்ளனர். அவற்றுள் கற்பனை உலகங்களைப் பற்றியும், மக்கள் கொண்டிருந்த நம்பிக்கையினையும் புலவர்கள் பலபடப் பேசியுள்ளனர். பிற உலகங்களான துறக்கமும் நிரயமும் ஆய்வுப் பொருளாகத் தெரிவுசெய்யப் பெற்றுள்ளன. **சங்க இலக்கியத்தில் சொர்க்கமும் நரகமும்** என்பது ஆய்வுப் பொருள்.

## ஆய்வு நோக்கம்

சங்க இலக்கியத்தில் சொர்க்கம், நரகம் பற்றிய கருத்துகளும் கோட்பாடுகளும் யாது என்பதை ஆராய்வது இவ் ஆய்வின் நோக்கம். சங்க இலக்கியங்களில் நம்பிக்கைகள் பற்றியும், சடங்குகள் குறித்தும், பழக்கவழக்கங்கள் பற்றியும் பல விதமான ஆய்வுகள் மேற்கொள்ளப்பெற்றுள்ளன. இருப்பினும், துறக்க நிரயம் பற்றிய ஆய்வுகள் இதுவரை வெளிவரவில்லை. சங்க இலக்கியத்தில் நரகம் குறித்த செய்திகள் குறைவாக இருப்பினும் துறக்கத்திற்கு எதிரான நிரயத்தையும் ஆராய்வது ஆய்வினை முழுமை பெறச் செய்கிறது. சங்க காலத்தில் மக்களை நல்வழிப்படுத்த புலவர்கள் கையாண்ட பாடு பொருளில் துறக்க நிரயமும் குறிப்பிடத்தக்கன. சங்க இலக்கியத்தில் துறக்க நிரயம் பெற்ற சிறப்பியல்பினை எடுத்துரைப்பது ஆய்வின் நோக்கமாகும். இதுகாறும் இத்தகைய ஆய்வு மேற்கொள்ளப்பட வில்லை.

### *சான்றாதாரங்கள்*

இந்த ஆய்வுக்குச் சங்க இலக்கியங்களே முதன்மைச் சான்றுகள். மேலும் திருக்குறள், பெ.மாதய்யனின் வரலாற்று நோக்கில் சங்க இலக்கிய பழமரபுக்கதைகளும் தொன்மங்களும், க.நெடுஞ்செழியனின் தமிழ் இலக்கியத்தில் உலகாய்தம், கி.லெட்சுமணனின் இந்திய தத்துவ ஞானம் முதலானவை துணைச் சான்றுகளாகின்றன. அறிவு விரிவிற்காகவும் ஆய்வு ஆழத்திற்காகவும் சங்க இலக்கியம் தொடர்பான திறனாய்வு நூல்களும், ஆய்வேடுகளும் ஆதாரங்களாகக் கொள்ளப்பெற்றன.

### *ஆய்வுச் சிக்கல்*

துறக்கம் குறித்த சொல்லாட்சிகளை வகைப்படுத்துதலில் சிக்கல் ஏற்பட்டது. ஆய்வுத் தலைப்பில் ஆளப்பெற்றுள்ள சொர்க்கம், நரகம் என்ற சொல்லாட்சிகள் சங்க இலக்கியத்தில் சுட்டப்பெறாமை சிக்கலாக அமைந்தது. '**துறக்கம், நிரயம்**' என்ற தமிழ்ச் சொற்களே 'சொர்க்கம் நரகம்' என்று மக்களிடையே பயின்று பிற்றை இலக்கியங்களிலும் இடம்பெறலாயின. பேச்சு வழக்கில் இருந்த சொல்லாட்சிகளை ஆய்வுத் தலைப்பாகக் கொண்டதில் சிக்கல் ஏற்பட்டது. புலவர்களை நாடு வாரியாகத் தொகுத்துரைக்கும் போது வெண் பூதன், பிரமனார், காவிட்டனார், சிறுவெண்டேரையார், பரூஉ மோவாய்ப்பதுமன், மோசிகீரனார் முதலியபுலவர்களின் நாடுகளை வரையறுக்க இயலாமை சிக்கலாயிற்று. ஐயூர் முடவனார், பரணர் ஆகியயோர் எந்த நாட்டைச் சேர்ந்தவர்கள் என்பதிலும் சிக்கல் ஏற்பட்டது.

துறக்கவுலகம் எது? என்பதையும், சங்க இலக்கியம் சுட்டும் துறக்கம், வீடுபேற்றைக் குறிப்பதா? என்பதையும், துறக்கம் சென்றோர்க்குப் பிறவி உண்டா? இல்லையா? என்பன போன்ற சிக்கல்கள்

ஆராயப்பெற்றுள்ளன. தேவருலகம் துறக்கத்தைக் குறிப்பதெனின் அங்குச் சென்றோர்க்குப் பிறவி இல்லையா? பிறவி உண்டெனில், பாலைக் கௌதமனார் விரும்பிய துறக்கம் எவ்வகையினைச் சேர்ந்தது? வாராவுலகம், வாராசேட்புலம் ஆகிய சொற்களே பிறவா நிலைத் துறக்கத்தை அளிக்கவல்லனவெனின் புலவர்கள், ஏன் தேவருலகம் சென்றதாக மன்னர்களைப் பாடினர்? என்பன முதலான வினாக்கள் ஆய்வில் சிக்கலை உருவாக்கின. சங்கப் பாக்களின் உரைவிளக்கங்கள் பிற்கால வீடுபேற்றுச் சிந்தனையுடன் பொருத்தி எழுதப் பெற்றுள்ளதால் வாழ்வின் முடிவினை விளக்குவதில் சிக்கல் உண்டாயிற்று.

சமயத்தோடு தொடர்புடைய சொர்க்க நரகக் கோட்பாடுகளைச் சமய இலக்கியங்களுடன் பொருத்திப் பார்க்காமல் சங்க இலக்கியங்களைக் கொண்டு ஆராய்ந்தால் சங்கப்பாடல்கள் கூறியது கூறலாக அமைந்தன. இருப்பினும், சங்க இலக்கியத்தினை மட்டும் தனித்து ஆராய வேண்டும் என்பதற்காகவும், சமய இலக்கியங்கள் விரிந்த பரப்புடையன என்பதற்காகவும் அங்ஙனம் செய்யப்பெற்றது.

### *ஆய்வு அணுகுமுறை*

சங்க இலக்கியம் முழுமையையும் ஆய்வாளர் பயின்று, ஆய்வுக்குரிய தரவுகளைத் திரட்டி விளக்கவியல் அடிப்படையில் இந்த ஆய்வு அணுகப் பெற்றுள்ளது. மூன்று நாட்டுப் புலவர்களின் கருத்தையும் ஒப்பியமாக்கிப் பார்ப்பதில் ஒப்பியல் அணுகுமுறையும் ஆய்வில் இடம்பெறுகின்றது. சமயச் சார்பற்ற சங்க இலக்கியம் என்ற இலக்கிய வளத்துக்கு மாறாகச் சங்கப் புலவர்களிடையே இலைமறை காயாக சமய ஒட்டமும் சமய நினைப்பும் இருப்பதையும் இவ்ஆய்வு அணுகுகிறது.

## ஆய்வின் கருதுகோள்

சங்க காலத் தமிழரிடையே நல்லது செய்தால் சொர்க்கம் கிடைக்கும் என்ற நம்பிக்கை இருந்தது. பிறர் நலம் பேணாது தன்னலம் கருதித் தக்காரை வைத்து வேள்வி செய்வது துறக்கத்திற்கு வழி கோலும் என்பது பாலைக் கௌதமனார் வாழ்க்கையினால் தெரிகின்றது. சங்க இலக்கியம் சுட்டும் துறக்கம் செல்லும் நெறி மக்களைப் பண்படுத்தும் நோக்கில் பாடப் பெற்றனவா? என்பது துறக்கம் பற்றிய எடுகோளாகும். அதுபோல அல்லது செய்யின் நரகம் கிட்டும் என்பது வழக்கு. களவொழுக்கத்துக்கு இடையூறு செய்பவர்களை நரகம் புகுமாறு சங்கப் புலவர்கள் பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது. அவரவர் செய்வினையால் நரகம் அமையாது வசைமொழியில் நரகம் பற்றிய குறிப்பு இடம் பெறுவதும் நினைக்கத்தக்கது. இது நரகம் பற்றிய கருதுகோள். இவற்றைக் கருதுகோளாகக் கொண்டு இந்த ஆய்வு அமைந்துள்ளது.

## ஆய்வுப் பகுப்பு

இவ் ஆய்வின் முதல் இயல் மரபுவழியான முன்னுரையாகவும், சான்றுகளை விளக்குவதாகவும் அமைந்துள்ளது.

இரண்டாமியல் **சொர்க்கம் நரகம் பற்றிய விவரணங்களும் விவரிப்புகளும்** அடங்கியதாகும். சொர்க்கம் என்றால் என்ன? நரகம் என்றால் என்ன? என்பதைச் சங்க இலக்கியப் பாக்களைக் கொண்டு விளக்கியும் விரித்தும் இவ்வியல் பேசுகிறது. சொர்க்கம், நரகம் குறித்த சங்க இலக்கியச் சொல்லாட்சிகள் இவ்வியலில் வகைப்படுத்தப் பெற்றுள்ளன.

மூன்றாமியல் **சங்க இலக்கியத்தில் சொர்க்க நரகக் கோட்பாடுகள்** என்பதாகும். இதில் சேர, சோழ, பாண்டிய நாட்டுப் புலவர்களாலும், கொங்கு நாட்டுப் புலவர்களாலும் சொர்க்கம் அதற்கெதிரான நரகம் பற்றிய கோட்பாடுகள் எங்ஙனம் பாடப்பெற்றுள்ளன என்பது குறிக்கப்பெற்றுள்ளது. அதனைத் தொடர்ந்து மூன்று நாட்டுப் புலவர்களின் கருத்தும் ஒப்பியமாக்கி முடிவுகள் தரப்பெற்றுள்ளன. புலவர் பெயர் தெரியாத பரிபாடல் திரட்டில் அமைந்த இரண்டு பாடல்களும், நாடு வரையறுக்க இயலாத புலவர்களால் பாடப்பெற்ற ஆறு பாடல்களும் (புறம். 50,362,357,359, குறுந்.83,101) இவ்வியலில் இடம் பெற்றுள்ளன. இவ்வியலே ஆய்வுத் தலைப்பின் முழுமையையும் ஆய்வின் உள்ளடக்கத்தையும் தெளிவுபடுத்துகின்றது.

நான்காமியலாகச் **சொர்க்கம் நரகம் அடையும் நெறி** இடம் பெற்றுள்ளது. சங்கத் தமிழர் துறக்கத்தை அடைதற்குப் பின்பற்றிய நெறிகளாக,

| | |
|---|---|
| 1) வீரம் | 2) வடக்கிருத்தல் |
| 3) கொடை | 4) தவம் |
| 5) வேள்வி செய்தல் | 6) ஆண்மக்கட்பேறு |
| 7) கணவனொடு இறத்தல் | 8) நல்வினையறம் |
| 9)புகழ் | 10) இறைமை |

ஆகியவற்றைப் பின்பற்றியுள்ளமை சங்கப் பாக்களைக் கொண்டு ஆராயப் பெற்றுள்ளது. அது போல நரகத்தை அடைந்தமைக்கான நெறிகளும் அடையாமலிருக்கும் வழிமுறையும் சங்க நூல்கள் வழி அறியப்படுகின்றன. மக்களை நல்வழிப்படுத்தும் நோக்கில் இந்நெறிகள் சங்க கால மக்களிடையே புகுத்தப்பெற்றன. இவற்றுள் 'உடன்

கட்டையேறுதல்' பெண்டிருக்கென்று தனித்துச் சுட்டப் பெறும் நெறியாகும். இவ்வியல் சங்ககாலச் சமுதாயச் சூழலை நன்கு விளக்கிக் காட்டுகிறது.

ஐந்தாமியல் **வாழ்வின் முடிவு.** மனிதன் இறந்தவுடன் நிகழக்கூடிய மாற்றம் குறித்து இவ்வியல் பேசுகிறது. 'இம்மைமாறி மறுமையாகினும்' என்று அம்மூவனார் கூறுவது உயிர் யாக்கை விடுத்துப் போதலை உறுதிப்படுத்துகின்றது. இங்கு அறம், பொருள், இன்பம் ஆகிய முப்பொருள், நாற்பொருளாக மாற்றம் பெற்றமை விளக்கப் பெற்றுள்ளது. தொல்காப்பியமும் சங்க இலக்கியமும் துறக்கம் பற்றிக் கூறும் சிந்தனைகளும், துறக்கத்திற்குச் சென்றோர்க்குப் பிறவி நிலை, பிறவாநிலை ஆகிய இருதிறப்பட்ட நிலைகள் உண்டென்பதும் இவ்வியலில் சுட்டப்பெறுகின்றன. முடிவுக் காலத்தில் மனிதனுக்கு வானுலகில் கிடைக்கும் வரவேற்பினையும் இவ்வியல் புலப்படுத்துகிறது.

ஆறாமியல் **சொர்க்க நரகம் அடைந்தோர்** என்பது. சங்க இலக்கியத்தில் இறந்தவர்களைப் பாடும்போது அவர்கள் மேலோருலகம் சேர்ந்ததாகவும், தேவருலகம் எய்தியதாகவும், அரும்பெறலுலகம் அடைந்ததாகவும் சங்கப் புலவர்கள் பாடியுள்ளனர். சாதிமத பேதமின்றி அனைவரும் துறக்கம் அடைந்துள்ளமையினைச் சங்கப்பாக்கள் தெளிவுபடுத்துகின்றன. சேர, சோழர்களைப் போன்று பாண்டியர்கள் துறக்கம் சென்றமைக்கான குறிப்பு பாக்களில் இடம்பெற்றில. ஆனால் மதுரைக்காஞ்சி உரையில் நச்சினார்க்கினியர், பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி வீடுபேறு எய்தியதாகக் குறித்துள்ளமை குறிப்பிடத்தக்கது. வடக்கிருந்த கோப்பெருஞ்சோழன் துறக்கம் சென்றிருப்பானா? என்பதையும் இவ்வியல் விளக்கிச் செல்கிறது.

ஏழாமியலாக இடம்பெறுவது **முடிவுரை.** இதில் சொர்க்க நரகம் பற்றிய சங்க இலக்கியக் கருத்துகள் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன.

இறுதியாக இடம்பெறுவன துணைநூற்பட்டியல், பின்னிணைப்பு ஆகியவை. பின்னிணைப்பில் 1.சொர்க்க நரகம் குறித்த சங்க இலக்கியக் கலைச்சொற்கள் 2. நாடு வாரியாகப் புலவர்களின் பாடல்கள், 3.சொர்க்க நரகம் அடையும் நெறி ஆகியவை அட்டவணைப்படுத்தப்பட்டுள்ளன. வைகுந்த வரவேற்பு குறித்த கட்டுரையும் இடம்பெற்றுள்ளது.

*இயல் - 2*



# சொர்க்கம் நரகம் விவரணங்களும் விவரிப்புகளும்

# சொர்க்கம் நரகம்-விவரணங்களும் விவரிப்புகளும்

பண்டைய இலக்கியங்கள் தமிழர்தம் நாகரிகத்தையும் பண்பாட்டையும் விளக்குவன. அத்துடன் மக்களிடம் பழக்கத்திலிருந்த நம்பிக்கைகளை இணைத்துப் பாடுவதும் சங்கப் புலவர்களிடையே காணலாகின்றது. இம்மை மறுமை, நல்வினை தீவினை பற்றிய நம்பிக்கைகள் மக்களுக்கு அறக்கருத்துக்களை உணர்த்தும் வகையிலமைந்தவை. துறக்கமும் நிரயமும் ஆகிய மறுமை வாழ்க்கை, பிற்காலத்தில் சமயத்தோடு தொடர்புபடுத்தப்பெற்றது. சங்க காலத்திலிருந்த சொர்க்க நரகம் பற்றிய வரையறைகளையும் விளக்கங்களையும் எடுத்துரைப்பது இவ்வியலின் நோக்கம்.

## பழந்தமிழர் வாழ்வியலும் நம்பிக்கையும்

தொடக்க காலத்தில் இனக்குழுக்களாக வாழ்ந்து வந்த மக்கள் காலப்போக்கில் தங்களுக்கென்று தனித்தனி நம்பிக்கைகளையும் சடங்கு முறைகளையும் வகுத்துக்கொண்டனர். பிறப்பு முதல் இறப்பு வரை பல்வேறு நம்பிக்கைகள் மக்களிடம் தொன்று தொட்டு இருந்து வந்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.

> சமூகத்தின் தேவைகள், குறிக்கோள்கள் போன்றவற்றின் அடிப்படையில் நம்பிக்கைகள் தோன்றுவன எனலாம். மனிதனின் தன்னல உணர்வும் சமுதாய உணர்வுமே நம்பிக்கைகளை வளர்த்து வருகின்றன எனவும் கொள்ளலாம். அவை காலங்காலமாகத் தொடர்ந்து பயின்றுவரக் காண்கிறோம். இவ்வாறு பயின்றுவரும் நம்பிக்கைகளிலிருந்து மக்களின் பண்பாடுகள் வெளிப்படுகின்றன[1]

வாழ்க்கையின் இறுதிக் காலத்தில் உயிர், மெய் பற்றிய எண்ணம் ஏற்படுவதியற்கை. அங்கு யாக்கை நிலையாமை பற்றிய பாடல்கள் தோன்றலாயின. உயிர் எவ்விடம் போயிற்று என்ற சிந்தனை மேலுலகம், கீழுலகம் போன்ற கற்பனை உலகங்களை மக்களின் மனத்தில் பதியச் செய்தன. மக்களை நன்னெறியில் வாழுமாறு நெறிப்படுத்த சங்கப் புலவர்களுக்கு இக்கற்பனை உலகங்கள் கருவியாக அமைந்தன.




> அவரவர் செய்த நன்மை தீமைகளின் பலன்களை அவரவரே அனுபவித்தல் வேண்டும். அதிக புண்ணியம் செய்த ஓர் ஆன்மா தனது புண்ணியத்தின் ஒரு பகுதியை அதிக பாவம் செய்த ஆன்மாவுக்குக் கொடுத்து அவ்வான்மாவை அப்பாவபலன்களை அடைவதிலிருந்து நீக்க இயலாது.[2]

மக்களிடமிருக்கும் பிற நம்பிக்கைகள் அவர்களின் இம்மை வாழ்வியலோடு தொடர்புடையவை. துறக்கம் நிரயம் குறித்த நம்பிக்கை வாழ்வின் முடிவோடு மறுமை வாழ்வோடு தொடர்புடையது, உடம்பிலுள்ள உயிர் அனைவருக்கும் பொதுவாயினும் ஒவ்வொருவரின் மறுமை வாழ்வும் அவரவர் தம் சமுதாயச் சூழலுக்கேற்ப வேறுபடும்.

> சங்ககாலம் நிலவுடைமையாக மாறுகின்ற நிலையைச் சங்கப் பாடல்கள் தெளிவாய்க் காட்டுகின்றன. இனக்குழுச் சமுதாய எச்சங்களைத் தாங்கிய சீறூர் மன்னரின் வன்புலச் சமுதாய வாழ்வையும் வேந்தர் சமுதாயத்தின்

நிலவுடைமைத் தன்மையையும் புதிய
உற்பத்தி உறவு முறைகளையும் சங்கப்பாடல்கள்
வெளிப்படுத்துகின்றன. இவ்வுற்பத்தி
உறவுமுறைகளைப் பாதுகாக்கும் அரசு
அந்தணர் மேம்பாடு, ஆரியக் கூறுகளை
ஏற்கும் தெய்வங்கள் ஆகியவற்றை
இப்பாடல்கள் நிலவுடைமைச் சமூகக்
கூறுகளாய் வெளிப்படுத்துகின்றன. இச்சூழலில்
நிலவுடைமை அமைப்பைப் பாதுகாக்கும்
சிந்தனைகள் முன்வைக்கப்பெற்றன.
அவற்றுள் சுவர்க்கம் பற்றிய சிந்தனையும்
ஒன்று. இச்சிந்தனை அகம், புறம் எனும்
இருவகை இலக்கியங்களிலும்
வெகுவாய்ப் பேசப்படுகின்றது[3]

என்ற கருத்து சங்ககால மக்களின் வாழ்க்கைச் சூழலை விவரிக்கின்றது.

**சொர்க்கம் வரையறை**

நிலவுலகை விட்டு வேறு எங்கோ செல்லுதல் அல்லது உடலைவிட்டு உயிர் நீங்குதல் 'இறத்தல்' எனப்படும். இறத்தல் என்னும் சொல்லுக்குக் 'கடத்தல்' அல்லது 'ஓரிடத்தை விட்டு வேறோர் இடத்திற்குப் போதல்' என்று பொருள். அங்ஙனம் இவ்வுலக வாழ்வை நீத்த நிலையில் உயிரானது துறக்கத்தையோ நிரயத்தையோ அடைவதாக மக்கள் கருதுகின்றனர்.

துறக்கம் - விட்ட நிலை ; உள்ளத்தின் நிலை.
ஈதல் அறம், தீவினை விட்டு ஈட்டல் பொருள் ;

எஞ்ஞான்றும் காதல் இருவர் கருத்தொருமித்து
ஆதரவுபட்டதே இன்பம் ; பரனை நினைத்த
இம்மூன்றும் விட்டதே பேரின்பவீடு என்ற நம்
ஔவை மூதாட்டியார் அருளிய செய்யுட்
பொருளை உற்றுக் காண்க. குடும்பத்
தொல்லையைத் துறந்த உள்ளப்பாங்கே
துறக்கம் என்றான் தமிழன்[4]

என்று சொர்க்கத்திற்கு விளக்கமுரைப்பர். தாம் வாழும் காலத்தில் நல்லறம் புரிந்து புகழைத் தேடிக்கொண்டவர்களுக்குத் துறக்கத்தில் இடமுண்டு என்று மக்கள் உறுதியாக நம்பினர். அவரவர்களின் வாழ்க்கைத் துய்ப்பிற்கேற்ப மறுமையுலகமானது அமையும். அபிதான சிந்தாமணி,

புண்ணியம் செய்தவர்கள் இறந்தபின் அடைவதாக
நம்பப்படும் இன்பம் நிறைந்த மேலுலகம்[5]

என்றும், நர்மதாவின் தமிழ் அகராதி,

இது புவலோகத்துக்கு மேல் உள்ளது. இதற்கு
அமராவதியெனப் பெயர். இது எண்பத்தைந்து
நூறாயிரம் யோசனை பொருந்தியது. இதற்கரசன்
இந்திரன். இவன் தேவி இந்திராணி. இவனைத்
தேவரும் இருடிகளும் தேவஸ்திரிகளும்
சேவித்திருப்பர். இதில் அக்னிட்டோம முதலிய
யாகங்களைப் புரிந்தவர்களும் அவ்விடத்துள்ள
போகங்களைப் புசித்திருப்பர்[6]

என்றும் துறக்கத்திற்கு விளக்கமுரைக்கின்றன. துறக்கவுலகம் இன்பங்களின் உறைவிடம் என்பது இதனால் தெளிவாகின்றது. பிறருக்குக் கேடு விளைவிக்காத மனம் கொண்டோர் இறந்த பிறகு துறக்கம் பெறுவர். புண்ணியம் புரிந்தவர்கள் அதன் பயன் நுகரத் துறக்கம் செல்வர். உயிர்க்கு உறுதுணையாகிய அறம் செய்வது புண்ணியச் செயலாகும். நீரறம் செய்வதை வலியுறுத்திப் பாண்டியன் நெடுஞ்செழியனுக்குக் குடபுலவியனார் பாடிய பாடல் (புறம்.18) இதற்குச் சான்றாக அமையும்.

***சொர்க்கம் - சொல்லாட்சி***

'துற' என்ற வேர்ச் சொல்லினடியாகப் பிறந்தது 'துறக்கம்'. இம்மை வாழ்வினைத் துறந்து அதன் பயனை அடைவதற்குத் 'துறக்கம்' என்று பெயர். 'துறக்கம்' காலப்போக்கில் சுவர்க்கம் - சொர்க்கமாயிற்று. சுவர்க்கம் பற்றிக் கூறப்போந்த பாரதிதாசன்,

> இது துறக்கம் என்ற தூய தமிழ்க் காரணப்
> பெயர்ச் சொல்லின் சிதைவு. அவ்வாறு வடவர்
> எடுத்தாண்டார்கள் நம் பழந்தமிழ் இலக்கியத்தினின்று[7]

என்று குறிப்பிடுவர். இதனால் 'துறக்கம்' தமிழ்ச் சொல் என்பதும் 'சுவர்க்கம்' வடசொல் என்பதும் தெளிவாகின்றது. சங்க இலக்கியத்தில் 'சுவர்க்கம்' என்ற சொல்லாட்சி இடம்பெற்றிலது. சங்கம் மருவிய கால இலக்கியங்களில் (சிறுபஞ்.34.3.64, ஏலாதி.76,3, சிலப்.3) இச்சொல்லாட்சி குறிக்கப்பெற்றுள்ளது. சங்க காலத்திலிருந்த 'துறக்கம்' என்ற சொல் ஆரியர்களின் தாக்கத்தால் 'சுவர்க்கம்' என்று பேச்சு வழக்கில் தோன்றிப் பிற்றை இலக்கியங்களிலும் அத்தொடர் ஆளுமைபெற்றது.

பல்வேறு நிலைகளில் வெவ்வேறு கால கட்டங்களில் பல்வேறு புலவர்களால் பாடப்பெற்றது சங்க இலக்கியம். ஆகையால் சொர்க்கத்தினைக் குறிக்கப் பல சொற்கள் கையாளப்பெற்றுள்ளன. தனித்தனியாகப் பாடப்பெற்ற பின்னை இலக்கியங்களில் இச்சொல்லாட்சிகள் மிகுதியாகக் காணப்பெறவில்லை. தேவலோகம் என்பதற்கு,

அமரர் கற்பம், அழுப்புகம், ஆனுலகு,
உம்பருலகம், உயர்நிலை, உவணை, கற்பம்,
கோ, சுரரிடம், சுவர்க்கம், சுவவு, தானம், துறக்கம்,
நாகம், பதவி, பவனம், புத்தேள் நாடு,
பொன்னாடு, மேலுலகம், வானுலகம், விசும்பு,
விண்ணுலகு, விமானம், வியனுலகு[8]

என்று இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப்பெயரகராதி பொருளுரைக்கின்றது. பல சொற்கள் சங்க இலக்கியத்தினின்று வேறுபட்டிருப்பதையும், அவற்றுள் வடசொற்கலப்பு மிகுந்திருப்பதையும் இதனால் அறியமுடிகின்றது. சங்க இலக்கியத்திலுள்ள துறக்கம் குறித்த பல்வேறு கலைச் சொற்கள் பின்வருமாறு ;

1. அந்தரத்து அரும்பெறல் அமிழ்தம்
2. அரிது செல்லுலகம்
3. அரும்பெறலுலகம்
4. ஆண்டு
5. ஆனிலை உலகம்
6. ஆன்றோர் உலகம்
7. உயருலகு

8. உயர்நிலையுலகம்

9. உக்கரை

10. உயர்ந்த தேயத்து விழுமியோர்

11. உயர்ந்தோர் நாடு

12. உம்பர்

13. சிறந்தோர் உலகம்

14.செல்வுழிச் செல்க

15.செல்லும் உலகம்

16. சேட்புலம்

17. தேவருலகம்

18. தொய்யாவுலகம்

19. மறுமை

20. மறுமையுலகம்

21. மாவிசும்பு

22. மேலோருலகம்

23. மேலோர் உறையுள்

24. பசும்பொன்னுலகம்

25. புத்தேளுலகம்

26. புத்தேள் நாடு

27. பெரும் பெயர் உலகம்

28. பொலம்பூங்காவின் நன்னாட்டோர்

29. நாகம்

30. நெடியோன் கோயில்

31. வாராவுலகம்

32. வாரா சேட்புலம்

33. வானவ மகளிர்

34. விசும்பின் வலவனேவா வானவூர்தி

35. தவலில் உலகம்

என்பனவாகும். ஒரு பொருள் குறித்த பல சொற்களைக் கையாண்டு அப்பொருளின் சிறப்பினை வெளிப்படுத்துவது புலவர்களின் தனித்தன்மை. இங்ஙனம் சுவர்க்கத்தைக் குறிப்பதற்குத் 'துறக்கம்' என்ற சொல்லோடு பல்வேறு காரணப் பெயர்களையும் சுட்டிக்காட்டிப் புலவர்கள் தம் புலமைத் திறத்தை வெளிப்படுத்தியுள்ளனர்.

> பொதுவாக மொழி வரலாற்றில் ஒரு பொருட் பன்மொழிகள் பெருகுவதற்கு அடிப்படையான காரணம் உண்டு. குறிப்பிட்ட சமூகத்தில் எந்த ஒரு கருத்து, பண்பாடு வலியுறுத்தப்படுகின்றதோ அல்லது மையப்படுத்தப்படுகின்றதோ அக்கருத்து, பண்பாடு, பண்பாட்டுக் கூறுகள் பற்றிய ஒரு பொருட் பன்மொழிகள் பல்கிப் பெருகும். இந்நிலையில் சுவர்க்கம் குறித்த இச்சொற்களின் எண்ணிக்கை மிகுதியே இச்சிந்தனை சங்கப் பண்பாட்டில் எந்த அளவுக்கு ஆளுமை செலுத்தியது என்பதைக் காட்டும்.[9]

துறக்கச் சிந்தனையில் நம்பிக்கை மிகுதியாக இருந்தமையால் அப்பொருள் குறித்த சொற்கள் மக்களிடையே பெருகின. மேலும் நல்லறம் புரிதலை மக்கள் நெஞ்சில் நிலைநிறுத்தவும் நல்வினை

செய்தலின் இன்றியமையாமையினை எடுத்துரைக்கவும் துறக்கம் பற்றிய பல்வேறு கலைச் சொற்களைச் சங்கப் புலவர்கள் எடுத்தியம்பியுள்ளனர்.

**சொர்க்கம் - ஆட்சி பெறும் இடங்கள்**

சங்க இலக்கியத்தில் 'துறக்கம்' என்ற சொல்லாட்சி சேரநாட்டுப் புலவர்களால் ஆளப்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. சோழநாட்டுப் புலவர்களாகிய மாமூலனாரும் (அகம்.233:7), கடியலூர் உருத்திரங் கண்ணனாரும் (பெரும்.388, பட்.104) துறக்கத்தைப் பாடியுள்ளனர். பாண்டியநாட்டுப் புலவர்களில் நல்லந்துவனார், (கலி.118:3:139:34, 143:45), கடுவனிளவெயினனார் (பரி.5:69), நல்வழுதியார் (பரி.12:84), நல்லெழுநியார் (பரி.13:13), இளம்பெருவழுதியார் (பரி.15:17), ஆகியோர் 'துறக்கம்' என்ற சொல்லாட்சியை எடுத்தாண்டுள்ளனர். பரிபாடல் திரட்டிலும் (1:47), துறக்கம் இடம் பெற்றுள்ளது

உயிர் யாக்கையினைத் துறந்து செல்லும் இடத்திற்குத் 'துறக்கம்' என்று பெயர். சங்க இலக்கியப் பாடல்களும் உடம்பினின்று உயிர் தனியாகப் பிரிந்து வினைப் பயனைத் துய்ப்பதற்குச் செல்லும் இடமாகத் துறக்கத்தினை வரையறுக்கின்றன. பெரும்பாணாற்றுப்படையிலுள்ள **பெறற்கருந் தொல்சீர்த் துறக்கம்** (பெரும்.388) என்பதற்கு,

> தன்னைப் பெறுதற்கரிய தொன்மையான சீர்த்த
> இயல்புகளை ஏதுவாகவுடைய துறக்கம் என்க.
> அருந்தொல்சீர் உடையாரன்றிப் பிறரால்
> பெறற்கருமை குறித்தவாறாம். அருஞ்சீர்
> எல்லார்க்கும் ஆகாமை கருதி[10]

என்று விளக்கமுரைப்பர். துறக்கம் என்பதற்கு இன்பங்களின் இருப்பிடம் என்று பொருளமையுமாறும் சங்கச் செய்யுட்கள் அமைந்துள்ளன.

பெரும்பாணாற்றுப்படையும் பட்டினப்பாலையும் இதற்குச் சான்றுகளாகின்றன.

### அந்தரத்து அரும்பெறல் அமிழ்தம்

'அமிழ்தம்' என்ற சொல்லிற்கு இனிமை என்று பொருள். சங்க இலக்கியப் பாடல்கள், தலைவியின் இனிய நலனிற்கு 'அமிழ்தம்' என்ற சொல்லைக் குறிப்பிடும். இவை தவிர தேவருலக அமிழ்தத்தைக் குறிப்பிடும் இடங்களும் சங்க இலக்கியத்தில் உண்டு. இச்சொல்லாட்சியை அங்கு வாழ்வோருக்குரிய உணவாகக் கருதிச் சங்கப் புலவர்கள் பாடியுள்ளனர். இதற்கு,

அந்தரத்து அரும் பெறல் அமிழ்தம் அன்ன

(புறம்.392:19-20)

என்று ஔவையாரும்,

அரும்பெறல் அமிழ்தம் ஆர்பதம் ஆக (குறுந்.83:1)

என்று வெண்பூதனும்,

இந்திரர் அமிழ்தம் இயைவதாயினும் (புறம்.182:1-2)

என்று கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதியும்,

உயர்நிலை யுலகம் அமிழ்தொடு பெறினும் (மது.197)

என்று மாங்குடி மருதனாரும் பாடியிருப்பவை சான்றுகளாகின்றன. ஔவையாரால் சுட்டப்பெறும் 'அந்தரம்' என்ற சொல் சொர்க்கத்தைக் குறிப்பதாகிறது.

### அரிது செல்லுலகமும் அரும்பெறலுலகமும்

அரிது செல்லுலகம், அரும் பெறல் உலகம் என்ற இரண்டு சொல்லாட்சிகளும் ஒரே பொருளைத் தருவன. பெறுதற்கு - செல்லுதற்கு அரிய உலகம் என்பது இதன் பொருள். அரிது செல்லுலகிற் சென்றனன்

(புறம்.260:21) என்பது வடமோதங்கிழாரின் கூற்று. இதற்கு,

அறமும் புகழும் உடையார்க்கல்லது செல்லுதல்
அரிதாகலின் மேலுலகம் அரிது செல்லுலகு
எனப்பட்டது[12].

என்றும்,

அரிதாகச் செல்லப்படும் தேவருலகம்[13]

என்றும் பொருளுரைப்பர். அனைவராலும் செல்லுதல் இயலாது என்பதால் துறக்கத்திற்கு அரிது செல்லுலகம், அரும்பெறலுலகம் என்ற பெயர்கள் உண்டாயின. அனைத்தையும் துறந்து பற்றற்ற நிலையிற் செல்லுதல் அரிதாகலின் அரும்பெறல் உலகம் என்றாயிற்று.

## ஆண்டு

'ஆண்டு' என்ற சொல் 'அவ்வுலகத்தைக்' குறிப்பதாகப் புலவர்களால் ஆளப்பெற்றுள்ளது. 'ஆண்டு' என்பது அவ்வுலகத்தையும் 'ஈண்டு' என்பது இவ்வுலகத்தையும் குறிப்பதாக, 'ஆண்டுச் செய் நுகர்ச்சி ஈண்டும் கூடலின் (புறம்.38) என்ற அடி இடம் பெற்றுள்ளது. ஆண்டு நீ பெயர்ந்த பின்னும் (புறம்.359), 'ஆண்டு வாழ்வோரே' (புறம்.26) என்ற தொடர்கள் மேலுலகத்திற்குச் சென்றோரைக் குறிப்பனவாகும். 'அவ்வுலகம்' என்றால் இறந்த பின் செல்லக்கூடிய துறக்கம் நிரயம் ஆகிய இரண்டையும் குறிப்பதாயினும், துறக்கமாகிய மேலுலகத்தைக் குறிப்பதாகப் புலவர்கள் எடுத்தாண்டுள்ளனர். 'ஆண்டு வாழ்வோர்' என்பதற்கு, அத்துறக்கத்து வாழ்வோர்[14] என்று பொருளுரைப்பர். வேறு வேறு புலவர்களால் பாடப்பெற்றிருப்பினும் இச்சொல்லாட்சி 'துறக்கம்' என்ற பொருளைத் தருவதாக அமைந்துள்ளது. ஈண்டுச் செய் நல்வினை

யாண்டுச் சென்றுணீஇயர் (புறம்.749:19) என்ற தொடரும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

### ஆனிலை உலகம்

இச்சொல்லாட்சியைக் 'காரிகிழார்' (புறம்.6) தவிர,வேறு எவரும் குறித்திலர். 'மேலது ஆனிலையுலகத் தானும்' (புறம்.6:6-7) என்ற பாடலடி துறக்கத்திற்கும் மேலுள்ள உலகத்தைக் குறிப்பதாகும்.

> 'மேலது' துறக்கத்தின் மேலுமென்பார் அதற்கு
> மேலதாகிய 'ஆனிலை உலகத்தானு' மென்றார்[15]

என்ற விளக்கத்தினை நோக்கும் போது, துறக்கத்திற்கும் மேலே ஓர் உலகம் இருப்பது புலனாகின்றது. இவ்வுலகத்தை வீடுபேறாகக் கருதுவர் உரையாசிரியர்.

### உக்கரை

சங்க இலக்கியத்தில் குறிக்கப்பெற்ற துறக்கத்திற்குரிய சொல்லாட்சிகளுள் 'உக்கரை' குறிப்பிடத்தக்கது. இச்சொல்லாட்சி இடம்பெறும் பாடல் மூவேந்தருக்கும் அறிவுரை கூறும் முகத்தான் பிரமனாரால் பாடப்பெற்றது (புறம்.357). இக்கரை, உக்கரை, என்ற சொற்களைத் தனித்து நோக்கின் பொருளில்லை.

> அறவினை யன்றே விழுத்துணை யத்துணைப்
> புணைகை விட்டோர்க் கரிதே துணையழத்
> தொக்குயிர் வெளவுங் காலை
> இக்கரை நின்றிவந் துக்கரை கொளலே
>
> (புறம்.357:6-9)

என்பதில் 'இக்கரை' என்ற சொல் இவ்வுலகத்தையும் 'உக்கரை' என்ற சொல் மேலுலகத்தையும் குறிப்பிடுகின்றன. 'அக்கரை' என்று கூறாது 'உக்கரை' என்று சுட்டியிருப்பது குறிப்பிடத்தக்கது. ஆனால் உ.வே.சாமிநாதய்யர்,

உக்கரை அக்கரை - வீட்டுலகம்[16]

என்று உரையெழுதுவர். 'ஆனிலை உலகம்' போன்று 'உக்கரையும்' பிறவாநிலையைக் குறிப்பதாகவும் இடைப்பட்டதோர் உலகத்தைக் குறிப்பதாகவும் கருத இடமுண்டு.

**உயர்நிலையுலகம்**

இச்சொற்றொடர் உயர்ந்த நிலையிலிருக்கும் உலகம் என்று விரியும். தேவர்கள் உறைவதாகக் கருதப்படும் உலகம் உயரிய நிலையிலமைந்தது. ஆகையால் தேவருலகமாகிய மேலோருலகத்திற்கு 'உயர்நிலையுலகம்' என்று பெயருண்டாயிற்று. நிலவுலக வாழ்வைத் துறந்து உயரிய நிலைக்கு உயிர் செல்வதனை உயர்நிலையுலகம் செல்வதாகக் குறிப்பர். இதற்கு,

இன்பமும் துன்பமும் விரவிய
இந்நிலவுலகிலும் இன்பமே
நிலவும் மேலுலகினை 'உயர்நிலையுலகம் எனவும்[17]

என்று உரையெழுதுவர். மேலும்,

உயர்ந்த நிலைமையையுடைய சுவர்க்கம்[18]

என்றும்,

உயர்ந்த நிலையையுடைய தேவருலகு எனினுமாம்[19]

என்றும் விளக்குவர். ஐங்குறுநூற்றில் "விசும்பின் உயர்நிலையுலகத்து அருந்ததி" (ஐங்.422:3:4) என்ற தொடரை ஆண்டுள்ளார் பேயனார். இதற்கு,

உயர்நிலையுலகம் என்றது
வானத்தையுணர்த்தியது. அருந்ததி
தோன்றும் இடம் வான் ஆகலின்[20]

என்று உரையெழுதுவர். வானத்திலிருப்பதனால் 'உயர்நிலையுலகம்' என்ற பெயர் ஏற்பட்டது. இச்சொல்லாட்சியினை, தும்பி சொகினனார் (புறம்.249), சாத்தந்தையார் (புறம்.287), மோசி கீரனார் (புறம்.50), காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் (பதிற்.52:24), கபிலர் (பதிற்.70,குறுந்.361), பெருங்குன்றூர் கிழார் (பதிற்.89), நல்லந்துவனார் (கலி.139), பேயனார் (ஐங்.442), மாங்குடி மருதனார் (மது.197,471) ஆகிய புலவர்கள் எடுத்தாண்டுள்ளனர். மூன்று நாட்டுப் புலவர்களாலும் இச்சொல்லாட்சி ஆளப்பெற்றது சிறப்புமிக்கது. 'உயர்நிலையுலகம்', துறக்கத்தைக் காட்டிலும் மிகுதியான புலவர்களால் பாடப்பெற்ற சிறப்புடையது.

உயர்நிலையுலகம் பாடிய புலவர்களில் நல்லந்துவனார் 'உயருலகு' என்ற சொல்லாட்சிகளையும் சுட்டியுள்ளார்.

அன்புறு கிளவியாள் அருளிவந்தளித்தலின்
துன்பத்திற் துணையாய் மடல்இனி இவட்பெற
இன்பத்துள் இடம்பட லென்றரங்கினள் அன்புற்
றடங்கருந் தோற்றத் தருந்தவ முயன்றோர் தம்
உடம்பொழித் துயருலகு இனிது பெற்றாங்கே

(கலி.138:27-31)

என்பது அப்பாட்டு. இதற்கு உரையெழுதிய நச்சினார்க்கினியர் உயருலகு என்பதற்குச் சுவர்க்கம்[21] என்று பொருள் வரைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

**உயர்ந்தோரும் உம்பரும்**

உயர்நிலையுலகம் போன்று உயர்ந்தோர் உலகம் என்ற சொல்லாட்சியும் சங்க இலக்கியத்தில் பயின்று வந்துள்ளது. தேவருலகத்திலிருப்போர்க்கு உயர்ந்தோர் என்று பெயர். உயர்ந்தோர் வாழக்கூடிய இடம் உயர்ந்தோர் உலகம் என்றும் உயர்ந்தோர் நாடு என்றும் சங்கப் புலவர்களால் சுட்டப்பெறுகிறது. உயர்ந்தோர் என்பதற்குத் துறக்கவுலகு சென்றுள்ள சான்றோர்[22] என்று பொருளுரைப்பர். இதனால் உயர்ந்தோர் என்ற சொல் தேவர்களை மட்டும் குறிப்பதன்று என்பது தெளிவாகிறது. இதனை, 'உயர்ந்த தேஎத்து விழுமியோர் வரினும்' (மது.200) என்ற பாடலடியால் அறியமுடிகின்றது. மேலும்

'உயர்ந்தோருலகத்துப் பெயர்ந்தன னாகலின்'

(புறம்.17:20)

'உடம்பொடுஞ் சென்மார் உயர்ந்தோர் நாட்டே'

(புறம்.362:22)

என்ற பாடலடிகளும் மேலுலகம் சென்றோரின் உறைவிடத்தைக் குறிப்பனவாகும். 'உம்பர்' என்ற சொல்லாட்சியும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. 'உம்பர்' என்பதற்கு மேலது என்று பொருள். "மேனிலையுலகம்"[23] என்றும் பொருளுரைப்பர். 'ஈனும் உம்பரும் பெறலருங்குரைத்தே' (ஐங்.401:5) என்ற அடி இங்கு குறிப்பிடத்தக்கது.

### சிறந்தோர் உலகம்

சான்றோர் வாழக்கூடிய இடத்தைக் குறிப்பதாக இச்சொல்லாட்சி வழங்கப்பெறுகிறது.

அறம்பெரி தாற்றி யதன்பயன் கொண்மார்
சிறந்தோ ருலகம் படருநர் போல (பரி.19:10-11)

என்பதால் அறம் பெரிதாகச் செய்தவர்கள் செல்லும் உலகம் சிறந்தோர் உலகமாயிற்று.

### செல்லும் உலகம்

உடம்பினின்றும் நீங்கிய உயிர்செல்லும் இடத்தினை இன்னதென்று சுட்டாது,

'செல்லும் உலகத்துச் செல்வம் வேண்டினும்'
(புறம்.12:13)

மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த
நீள்கழன் மறவர் செல்வுழிச் செல்கென
வாள்போழ்ந் தடக்கலு முய்ந்தனர் மாதோ
(புறம்.93:9-11)

என்றும் குறித்துள்ளனர். செல்கின்ற இடத்தினை நரகமாகக் கருதவும் இடமுண்டு. இருப்பினும் பாடலின் பொருளை நோக்கும் போது இங்குச் சுட்டப்பெறும் உலகம் 'துறக்கவுலகம்' என்பது புலனாகின்றது

### தேவருலகமும் புத்தேள் உலகமும்

தேவர்களைப் 'புத்தேளிர்' என்றும் அழைப்பர். ஆகவே தேவருலகமும் புத்தேளிர் உலகமும் ஒன்று என்பது புலனாகின்றது. 'தேவருலகம் எய்தினனாதலின்' (புறம்.228:82) என்று ஐயூர் முடவனாரும்,

மாந்தரஞ் சேர லிரும்பொறை யோம்பிய நாடே

புத்தேளுலகத் தற்றெனக் கேட்டு வந்து (புறம்.22)

என்று குறுங்கோழியூர் கிழாரும்,

புத்தேளுலகம் கவினிக் காண்வர

மிக்குப் புகழ் எய்திய பெரும்பெயர் மதுரை

(மது.699)

என்று மாங்குடி மருதனாரும்,

அரிது பெறு சிறப்பின் புத்தேள் நாடும் (குறுந்.101:2)

என்று பரூஉ மோவாய்ப் பதுமனும்,

இனிது எனப்படூஉம் புத்தேள் நாடே (குறுந்.288:5)

என்று கபிலரும் பாடியுள்ளனர். புத்தேள் நாடு - தேவருலகம்[24] என்று உரைவரைவர். இதனால் புத்தேள் நாடும் தேவருலகமும் ஒன்று என்பது தெளிவாகிறது.

கபிலரும், மாங்குடி மருதனாரும் உயர்நிலையுலகம் என்ற சொல்லாட்சியையும் எடுத்தாண்டுள்ளனர். இன்பத்தினை நுகரும் பொருட்டுச் செல்வதனால் துறக்கத்திற்கு இப்பெயர்கள் ஏற்படலாயின.

### தொய்யாவுலகம்

கோப்பெருஞ்சோழனால் இச்சொல்லாட்சி குறிக்கப்பெற்றுள்ளது. (புறம்.214). தொய்வில்லாத உலகம் மேலுலகமாகும். அதாவது இன்பமே நிலவும் மேலுலகமாகும். வேறெந்தப் புலவர்களாலும் இச்சொல்லாட்சி சுட்டப்பெறவில்லை.

**மறுமையுலகம்**

இம்மையுலகினின்றும் உயிர் நீங்கிச் சென்று வாழும் உலகிற்கு 'மறுமையுலகம்' என்று பெயர்.

இம்மை உலகத்து இசையொடும் விளங்கி
மறுமை உலகமும் மறுஇன்று எய்துப (அகம்.66:1-2)

என்பது செல்லூர்க் கோசிகன் கண்ணனார் பாட்டு. மறுமையுலகம் என்பது துறக்கம் நிரயம் ஆகிய இரண்டினையும் குறிப்பதாகும் இதற்கு,

உயிர் இவ்வுடம்பின் நீங்கிச் சென்று
வினைப்பயன் அனுபவிக்கும் உலகம்[25]

என்று பொருளுரைப்பர். வினை என்பது நல்வினை, தீவினை ஆகிய இரண்டையும் குறிப்பதாயினும் அகநானூற்றுப பாடல் (66) நல்வினைப் பயன் துய்ப்பதான துறக்கவுலகினையே குறிப்பிடுகின்றது. மறுமையுலகம் என்பது சங்கப் புலவர்களால் துறக்கவுலகமாகிய மேலுலகத்தைச் சுட்டுவதாகவே பாடப்பெற்றுள்ளது.

**மறுமை**

இம்மையில் செய்யும் நன்மை தீமைக்கேற்ப மறுமை அமையும். மறுமைக்கும் மறுமையுலகிற்கும் வேறுபாடுண்டு. மீண்டும் நிலவுலகில் பிறப்பதனை **மறுமை** என்றும் மேலுலகம்-துறக்கவுலகம் செல்வதனை **மறுமையுலகம்** என்றும் குறிப்பர். மறுபிறப்புக் கோட்பாடு சங்க இலக்கியத்தில் குறுந்தொகை (49:3), புறநானூறு (141:4), கலித்தொகை (14:15:103:63), அகநானூறு ஆகியவற்றில் இடம் பெற்றுள்ளது. இம்மை வாழ்வினைப் போன்று மறுமை வாழ்வும் இன்ப துன்பங்கள் நிறைந்தது. இதனை,

செம்மையி னிகந் தொரீஇப் பொருள் செய்வார்க்கப் பொரு

ளிம்மையும் மறுமையும் பகையாவ தறியாயோ (கலி.141:4-5)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. நடுவுநிலையின்றி ஈட்டப்பட்ட பொருள் மட்டுமல்லாது மறுமையிலும் மறுமை வாழ்விலும் துன்பங்கள் தொடரும் என்பது தெளிவாகின்றது. ஆய் அண்டிரனைக் குறித்து உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடிய,

இம்மைச் செய்தது மறுமைக் காமெனும் (புறம்.134:21)

என்ற பாடலடி ஈண்டு சிந்திக்கத்தக்கது. மறுமையுலகமாகிய மேலோருலகம் இன்பம் நிறைந்ததாகையால் மறுமை, மறுமையுலகம் ஆகிய இரண்டும் வேறுவேறு என்பது புலனாகிறது.

மறுமை வாழ்வு குறித்து மறுதலையான சிந்தனைப் போக்கும் சங்ககாலத்தில் இருந்தமையினை 'மறுபிறப்பில்லெனும் மடவோருஞ் சேரார் நின்னிழல்' (பரி.5:73-74) என்ற பாடலடியால் அறியப்பெறுகின்றது. இதற்கு,

இவ்வாறு மறுபிறப்பில் நம்பிக்கை இல்லாத
சூழல் நிலவியதை கி.பி.4,5ஆம்
நூற்றாண்டுகளைச் சார்ந்த பரிபாடலும் காட்டுவது
தமிழ் இலக்கியங்களில் பொருள் முதல் வாதச்
சிந்தனைப்போக்கு அந்நூற்றாண்டுகளிலும்
நிலவியமைக்குச் சான்றாகின்றது[26]

என்று காரணம் கூறுவது பொருத்தமாகின்றது. மறுமை என்ற சொல்லாட்சி துறக்கச் சிந்தனையோடு தொடர்புடையதாயிருப்பினும் இரண்டும் வேறுவேறு என்ற எண்ணமும் சங்கப்புலவர்களிடம் இருந்தமை குறிப்பிடத்தக்கது.

**மாவிசும்பு**

பெரிய வானம் என்ற பொருளுடையது 'மாவிசும்பு' என்ற தொடர். மதுரைக் காஞ்சியில் 'மாவிசும்பு' வழங்கும் பெரியோர் போல என்று மாங்குடி மருதனார் குறித்திருப்பது துறக்கத்தைக் குறிக்கிறது. விசும்பின் உயர்நிலையுலகத்து அருந்ததி' (ஐங்.442:3-4) என்ற பாடலடி இங்கு ஒப்புநோக்கத்தக்கது. இ தனால் விசும்பின் உள்ள தே துறக்கம் என்பது தெளிவாகின்றது. பாடலுக்கேற்ப 'விசும்பு' என்ற சொல் துறக்கத்தைக் குறிக்கவல்லது.

> தேவருலக முதலியவற்றைத் தன்னிடத்தே
> யுடைமையின், அங்கண்மால் விசும்பென்றார்[27]

என்று உரையெழுதுவார்.

விசும்பு பல திறத்தவாதலின் நச்சினார்க்கினியர் சில இடங்களில் ஆகாயமென்றும், பாடுபொருளுக்கேற்பத் தேவருலகமென்றும் வேறுபடுத்தியுள்ளார்.

> அகல் விசும்பின் ஆர்ப்பு இமிழப் (மது.182)

என்பதற்கு, ஒலிப்ப என்பது பொருள் இதற்கு,

> விசும்பெனவே ஆகுபெயராய்த்
> தேவருலகை உணர்த்திற்று[28]

என்று உரையெழுதுவர்.

**மேலோருலகம்**

மேலோருலகம் என்றது, உயர்ந்தோருலகத்தோடு நெருங்கிய தொடர்புடையது. மேலோருலகம் எய்தின னாகலின் (புறம்.229:21) என்று கூடலூர் கிழாரும் குட்டுவன் கீரனாரும் பாடியுள்ளனர். இங்குச்

சுட்டப்பெறும் மேலோருலகம், தேவருலகத்தோடு தொடர்புடையது. இதனைப் போன்று மேலோர் உறையுள் என்ற சொல்லாட்சியும் குறிப்பிடத்தக்கது.

மாலை மாலை யடியுறை யியைநர்

மேலோ ருரையுளும் வேண்டுநர் யாஅர் (பரி.17:7-8)

என்று தேவருலகத்தில் வாழ்வதனைக் கேட்கின்றார். தேவருலகம் தேவர்களுக்கு மட்டும் உரிமையுடையதன்று. துறக்கம் சென்றோர் அனைவருக்கும் உரிமையுடையது.

**பசும்பொன்னுலகம்**

இச்சொல்லாட்சி பசிய பொன்னாலாகிய உலகத்தைக் குறிக்கிறது. நிலவுலகமா? வானுலகமா? என்ற குறிப்பு இச்சொல்லாட்சியில் வெளிப்படையாகத் தெரிந்திலது இருப்பினும்,

பசும்பொ னுலகமும் மண்ணும் பாழ்பட

விசும்பி லூழி யூழூழ் செல்லக் (பரி.2:3-4)

என்ற கீரந்தையார் பாடலில் வரும் பசும் பொன்னுலகம் என்பது மேலுலகத்தைக் குறிப்பிடுகிறது.

**பெரும் பெயர் உலகம்**

அரும் பெறல் உலகம் போன்று பெரும்பெயர் உலகமும் துறக்கத்தைச் சுட்டுவதாகும். பெரும்பெயர் உலகம் பெறீஇயரோ அன்னை (குறுந்.83:2) என்ற அடிக்குப் பெரிய புகழுடைய உலகம் என்றது சுவர்க்கத்தை[29] என்று பொருள் எழுதுவர். வெண்பூதனைத் தவிர வேறு எவரும் இச்சொல்லாட்சியைக் குறித்திலர். இவர் ஒரே பாடலில் அரும்பெறல் அமிழ்தம் என்றும், பெரும் பெயர் உலகம்

என்றும் குறிப்பிட்டிருப்பது துறக்கத்தின் சொல்லாட்சிப் பெருக்கத்திற்கு வழிகோலுகிறது.

**நெடியோன் கோயில்**

நெடியோன் கோயிலுக்குள் ஆய் அண்டிரன் சென்றதாகப் பாடுகின்றார் ஏணிச்சேரி முடமோசியார் (புறம்.241). நெடியோன் கோயில் என்ற சொல்லாட்சியினை இப்புலவரே எடுத்தாண்டுள்ளார். நெடியோன் என்பதற்கு,

நெட்டையானவன், திரிவிக்கிரமனாகிய திருமால்,

பெரியோன், துளசி (மலை), மூக்கிரட்டை (மலை)[30]

என்று பொருள் தருகிறது தமிழ் லெக்ஸிகன். இதனை நோக்கும் போது புலவர் குறிப்பிடும் 'நெடியோன் கோயில்' திருமாலின் வைகுந்தத்தைக் குறிப்பது புலனாகின்றது.

பொலம்பூங் காவின் நன்னாட்டோரும் (புறம்.28:12) என்று ஆவூர் மூலங்கிழாரும், 'நாகத் தன்ன பாகார் மண்டிலம்' (புறம்) என்று ஔவையாரும் பாடியிருப்பவை தேவருலகத்தைக் குறிப்பனவாகும். நாகம் என்பதற்கு, இன்பமே நிலவும் தேவருலகம்[31] என்று பொருளுரைப்பர்.

**வானவமகளிர்**

வானகத்தில் உள்ள பெண்டிரைப் பற்றியும் சில குறிப்புகள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன.

நீனிற விசும்பி லமர்ந்தன ராடும்

நெஞ்சு நடுக்குறூஉக் கொண்டி மகளிர் (மது.581-583)

என்பதில் தெய்வ மகளிரைக் கொண்டி மகளிர்க்கு உவமையாக்கியுள்ளார்

மாங்குடி மருதனார். தெய்வ மகளிரைப் போரில் வீரமரணம் எய்தியோர் மணந்து இன்புறுவர் என்ற செய்தியினை,

மாசின் மகளிர் மன்ற னன்றும்
உயர்நிலை யுலகத்து நுகர்பவதனால் (புறம்.287:11-12)

என்ற சாத்தந்தையார் பாடல் தெளிவுபடுத்துகின்றது. இங்குக் குறிக்கப்பெற்ற மாசின் மகளிர் குற்றமற்ற தேவ மகளிராவார். உயர்நிலையுலகத்தில் நுகர்வர் என்பதால் அங்குள்ள மகளிரையே இச்சொல்லாட்சி இயம்புகின்றது.

***வாரா உலகமும் வாரா சேட்புலமும்***

மீண்டும் திரும்பி வர இயலாத நெடுந்தொலைவிற்குச் சென்றமையை இச்சொல்லாட்சிகள் புலப்படுத்துகின்றன. பரணருடைய சொல்லாட்சித் திறன்களுள் வாராவுலகமும் ஒன்று (புறம்.341:15)

இதனை,

துறக்கவுலகு வாராவுலகெனப்பட்டது. எதிர்காலத்தை
வாராக் காலம் என்பதுபோல[32]

என்றும்,

வாராவுலகம் வீரசுவர்க்கம்[32]

என்றும் விளக்குவர். கபிலரும் பரணரைப் போன்று இச்சொல்லாட்சியையும் எடுத்தாண்டுள்ளார். வாரா சேட்புலம் படர்ந்ததாகப் பாரியைக் குறிக்கின்றார் கபிலர் (பதிற்.61). இங்ஙனம் வாராவுலகம் என்றில்லாது சேட்புலம் சென்றதாகச் சுட்டுகிறார் மாமூலனார். (அகம்.61.3). நெடுந்தொலைவு என்ற பொருளுடைய தாயினும் துறக்கம் சென்றதையே இப்பாடல் குறிக்கிறது.

**தவலில் உலகம்**

பரணர் கையாண்ட சொல்லாட்சிகளில் தவலில் உலகம் என்பதுபிற புலவர்களால் சுட்டப்பெறாத சிறப்புடையது. 'தவலில் உலகத்து உறை இயரோ தோழி' (அகம்.178:16) என்று தோழி தலைவியை வாழ்த்துகிறாள். இதற்கு,

> தவலில் உலகம் கெடுதலில்லாதஇன்பத்தையுடைய
> மறுமையுலகம் (இவ்வுலகிலே தணவாக் காதலுடன்
> கூடி இல்லறம் இனிது நடாத்தி, நன்மகப்பெற்று
> வாழ்ந்தோர், மறுமையிலும் பிரிவின்றி இன்பம்
> துய்ப்பர்) என்னும் கருத்தினளாதலின்
> என்றும் தவலிலுலகத்து உறைஇயர் என்று
> கூறினாளென்க[34]

என்று உரை விளக்கம் செய்வர். துறக்கம் என்று சுட்டாது மறுமையுலகம் என்று உரை வரைந்திருப்பது சிந்திக்கத்தக்கது. இருப்பினும் இருவரும் துறக்கம் சேர்ந்து இன்புறுவதையே இங்குத் தோழி மொழிவதாகக் கருதமுடிகின்றது.

**விசும்பின் வலவனேவா வானவூர்தி**

வானவூர்தி விசும்பில் செல்லக்கூடியதாயினும் மனிதனால் இயங்கக்கூடியது. ஆனால் வலவனேவாத வானவூர்தியில் செல்ல வேண்டுமென்று சோழன் நலங்கிள்ளியை வாழ்த்துகின்றார் உறையூர் முதுகண்ணன் சாத்தனார்.

> புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
> வலவனேவா வானவூர்தி
> எய்துப................... (புறம்.27:7-9)

என்பது அப்பாட்டு. துறக்கவுலகிற்குச் செல்லும் வழியை இதனால் அறியமுடிகின்றது. இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி சொர்க்கத்திற்குரிய பெயர்களுள் ஒன்றாக விமானத்தைக் குறிப்பிட்டிருப்பது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது

இங்ஙனம் பல்வேறு காரணப் பெயர்களுடன் துறக்கவுலகமானது பழந்தமிழரிடம் கற்பனை செய்யப்பட்டிருந்தது. இக்கற்பனை உலகத்தின் சொல்லாட்சிப் பெருக்கத்திற்கு,

> இத்துடன் இப்பெயரீட்டிற்கான சமூகக் காரணமும் உண்டு.சுவர்க்கம், உயர்ந்தோர் உலகம் எனப்பட்டதற்கான காரணத்தைச் சங்க காலச் சமூக அமைப்பு விளக்குவதாய் உள்ளது. சங்ககாலம் நிலவுடைமையாக மாறுகின்ற காலக்கட்டம் என்பதால் வருண வேறுபாடுகள் ஆளுமை செலுத்தத் துவங்கிய நிலையைக் காணமுடிகின்றது அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் எனும் நால்வகை வருணமும் செல்வாக்குப் பெற்றிருந்ததைச் சங்கப் பாடல்கள் காட்டுகின்றன. சங்கப் பாடல்களில் அரசர், அந்தணர், தேவர், ஞானிகள், வீரர் ஆகியோர் உயர்ந்தோர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளனர்.
> வணிகர், வேளாளர் ஆகியோர் உயர்ந்தோர் எனக் குறிப்பிடப்படவில்லை என்றாலும் இவர்களின் செல்வாக்கைச் சங்கப்பாடல்களில் காணமுடிகின்றது.[35]

என்று காரணம் கூறுவர். இச்சொற்களின் பொருளை நோக்கும் போது அவை தேவருலகத்தைக் குறிப்பனவாகவே பெரும்பாலும் அமைந்திருக்கின்றன.

**நரகம் வரையறை**

நல்வினை துறக்கத்தைத் தரவல்லது என்பதற்கு மாறாகத் தீவினை நரகத்தைத் தரும் என்ற கருத்தும் மக்களிடம் இருந்தது.

> எல்லைப்புறத்தில் இருக்கும் நகரத்தை உள்ளும் வெளியும் அரண்செய்து காப்பது போல் ஒருவன் தன்னைக் காத்துக் கொள்க. கண நேரத்தையும் வீணாக்க வேண்டாம். ஒவ்வொரு நிமிடத்தையும் நல்வழியிலே பயன்படுத்தாமல் நிமிடங்களை வீணாகக் கழித்தவர்கள் நிரயத்தில் விழும்போது வருந்துவர்[36]

என்று நரகத்தின் இயல்பினை விளக்கியுரைப்பர். ஒரு மனிதன் தான் வாழ்கின்ற காலத்தில் மனத்தாலும் செயலாலும் பிறர்க்குத் தீங்கு செய்வானானால் இறந்த பிறகு அவனடையக் கூடிய துன்ப உலகத்திற்கு 'நரகம்' என்று பெயர். இதனை,

> நரகம் - துன்பமயமானது ; பாவம் செய்தவர்கள் இறந்தபின் சென்று சேர்வதாகக் கருதப்படுகின்ற துன்பங்களும் கொடுமைகளும் நிறைந்த உலகம்[37]

என்று நர்மதாவின் தமிழ் அகராதியும்

> பாபிலோனியர், ஈபுரூக்கள், கிரேக்கர் போன்ற தொல்மரபுடைய மக்களும் புத்தர்கள், கிறித்தவர், இசுலாமியர் இந்துக்கள் போன்ற சமய மக்களும்

குறிப்பிடும் நரகம் பற்றிய பெயர்கள், திரும்பிவர இயலாத நிலம், கொடுமை நிறைந்த இடம், காணமுடியாத நிலம், மறைப்புண்டிலங்கும் இடம் என்றும் பொருள் கொண்டனவாகவே உள்ளன[38]

என்று வாழ்வியற் களஞ்சியமும் வரையறுக்கின்றன. உயிர்கள் தீவினைப் பயனை அனுபவிக்கும் இடம் நரகம் என்றழைக்கப்படுகின்றது. துறக்கவுலகம் மாந்தரனைவருக்கும் பொதுவாதல் போன்று நரகலோகமும் மானிட சமுதாயத்தினருக்குப் பொதுவானதாகும். பிறருக்குத் துன்பம் தரும் இன்னாத செயல்களைச் செய்பவர்கள் வினைப்பயனால் துன்பங்களடங்கிய உலகமாகிய நிரயத்துக்கு உரியவராகக் கருதப்படுவர். அவர்களை நிரயத்தார் என்பது பழந்தமிழர் வழக்கு.

நரகம் பற்றிய விளக்கங்களைக் காணுங்கால், ஒழுங்கமைந்த சமுதாயத்தில் - மக்கள் நீதியொடும் அன்பொடும் அறத்தொடும் பாவங்கள் புரியாமல் வாழ வேண்டும் என்பதனை வலியுறுத்துவதற்காகவே நரகம் பற்றிய கருத்துத் தோற்றுவிக்கப்பட்டிருத்தல் வேண்டும் என்பது தோன்றுகிறது[39]

**நரகம் சொல்லாட்சி**

சுவர்க்கத்தினைப் போன்று நரகம் என்ற சொல்லாட்சியும் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றில. நரகம் என்பதற்கு இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி,

அந்தகாரம், அழல், அளறு, அள்ளல், ஆர்வம்,

இருணிலம், இருள், ஊழல், கீழுலகம், கும்பி,

சுவப்பிரம், செந்து, திமிரம், தீ, துவாந்தம்,

நராலை, நிரயம், பவர்க்கம், பாதாளம், புலவு,

பூதி, வீழ்கதி[40]

என்ற சொற்களை எடுத்துரைக்கிறது. இவற்றுள் நரகத்தைக் குறிக்க நிரயம் என்ற சொல் சங்க இலக்கியத்தில் எடுத்தாளப்பெற்றுள்ளது. பிற சொற்கள் பிற்றை இலக்கியங்களில் (அளறு-திருக்.255,835,919, திரிக.24, தீயுழி, திருக்.168,243, இருள்-திருக்.352) இடம் பெற்றுள்ளன. சங்க இலக்கியத் தொன்மக் களஞ்சியம்,

நிரையம், தீயுழி, இருள் சேர்ந்த இன்னா உலகம்,

அளறு, ஆரிருள், இருள் - இவை நரகம்

என்பதையே குறிப்பன[41]

என்று விளக்கியுரைக்கின்றது. இவற்றுள் நிரையம் என்ற சொல்லாட்சியை, 'நிரயப் பெண்டிர் இன்னா கூறுவ' (அகம்,95:12) என்று ஓரோ ட கத்துக் கந்தரத்தனாரும் 'நிரைய ஒள்வாள் இளையர் பெருமகன்' (குறுந்.258:6) 'வரையா நிரையத்துச் செலீஇயரோ அன்னை' (குறுந்.292:6) என்று பரணரும், 'வரையா நயவினர் நிரையம் பேணார்' (நற்.329:1) என்று சொகுத்தனாரும், 'நிரைகளி றொழுகிய நிரைய வெள்ளம்' (பதிற்.15:4), நிரைய மொரீஇய வேட்கைப் புரையோர் (பதிற்.15:30) என்று குமட்டூர் கண்ணனாரும் பாடியுள்ளார். 'நிறையம்' என்ற சொல், 'நிறைய நெஞ்சத்தன்னைக் குய்த்தாண்டு' (நற்.236:5) என்று நம்பி குட்டுவனாரால் பாடப்பெற்ற சிறப்புடையது. 'நிரயம் கொள்பவரோ டொன்றாது' (புறம்.5:6) என்று நரிவெரூஉத்தலையாரும்,

'நிரயத்தன்னவென் வறன்களைந் தன்றே' (புறம்.376:5) என்று புறத்திணை நன்னாகனாரும், 'நிரயம்' பாடியுள்ளனர். இங்ஙனம் 'நிரையம்' என்பதில் எழுத்து வேறுபாடிருப்பினும் சொல்லாட்சி வேறுபாடு சங்க இலக்கியத்தில் இல்லை. சங்க இலக்கிய நரகச் சிந்தனையை,

நிரயம் நம்பிக்கைத் தொன்மத்தின் பாற்பட்டது.
நரகம் என்ற சொல்லாட்சி காணப்பெறவில்லை.
மரணத்திற்குப் பின் மனிதர் நிலையை விளக்கிக்
கூறி நம்பிக்கை உடையவரை நன்னெறிப்படுத்தும்
நோக்கம் உடையன நிரையம் பற்றிய செய்திகள்[42]

என்று விளக்குவர். மீளுதற்கு அரியதும் பொறுத்தற்கரியதுமான துன்பமுடையது நரகம். ஆசிரிய நிகண்டு,

................................ நரகலோகம்
பவனம் ஓடு பாதலம், கீழுலகு ஆம், பிலம்,
பாதாளலோகம், அன்றிப்
பகரில் வீழுங்கதியும் ஆம் என்று மலையமுனி
பண்புடன் இயம்பினாரே (ஆ.நி.154:6-8)

என்று நரகத்திற்கான சொற்களைப் பாகுபடுத்துகின்றது. இதனை வாழ்வியற் களஞ்சியம்,

தமிழ் நிகண்டுகள் நிரயம், நிரையம், பவர்க்கம்,
கும்பி, புலவு, ஊழ்த்தல், அவரம், அள்ளல்,
அளறு, அதோகதி, பாவம், துவாந்தம், அருஞ்சிறை,
இருள், நரகு, பாதாளம், இருள்நிலம், எரி,
திமிரம், இரௌரவம், தீ, சுவப்பிரம், ஊழல், பூதி
முதலிய பலசொற்களை நரகத்தினை உணர்த்தும்

பெயர்களாகக் குறிப்பிட்டுள்ளன. அவ்வாறே, நரகத்திற்கு மாறாகிய மோட்சத்தினையும் பல்வேறு பெயர்களால் குறிப்பிட்டுள்ளன. இப்பெயர்களில் பல காரணப் பெயராகவும் உருவக வகையாகவும் பிற வகையாகவும் அமைந்துள்ளனவாகும்[43]

என்று விளக்குவதனால் அறியமுடிகின்றது. சங்க இலக்கியத்தில் நரகம் குறித்த செய்தி மிகுதியாக இடம் பெறாமை குறிப்பிடத்தக்கது. இன்னது செய்க என்று எடுத்துரைத்த புலவர்கள், இன்னது செய்ய வேண்டாம் என்று அறிவுறுத்துவதில் விருப்பம் கொண்டிலர்.

### நரகம் வகைப்பாடு

இன்பத்தைத் தரும் சொர்க்கத்தின் வகைப்பாடு பற்றியோ துன்பத்தைக் கொடுக்கும் நரகத்தின் வகைப்பாடு குறித்தோ சங்க இலக்கியத்தில் குறிப்புகள் இல்லை. வீரப்போர் புரிந்துஇறந்தோர் உயர்நிலையுலகத்து மகளிரை மணந்து இன்புறுவர் என்ற குறிப்பு சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றது. இருப்பினும் துறக்கத்தின் இன்பமனைத்தையும் நுகர்வர் ;

உடலை விட்டுப் பிரிந்த உயிர் பல கொடுமையான தடைகளைக் கடந்து செல்ல வேண்டும் என்ற கருத்து பண்டைக்கால மக்களிடையே நிலவி வந்திருப்பதை நாட்டுப்புறப் பாடல்களும் வீரயுகக் கதைகளும் புலப்படுத்துகின்றன[44].

நரகம் செல்வதற்குரிய தடைகளைப் பற்றிய குறிப்பு சங்க இலக்கியத்தில் இல்லை. இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி,

அள்ளல் இரௌரவம் கும்பீபாகம் கூடசாலம்
செந்துத் தானம் பூதி மாபூதி[45]

என ஏழாகவும்,

கோரம் கீழ்க்கோரம் அதிகோரம்
கோரதரம் கோரரூபம் தரளதரம் பயாநகம்
காளராத்திரி பயோற்கடம் சண்டம்
மகாசண்டம் கண்டகோலாலம் சண்டதரம்
சரோருகம் சலசவதி வீமம் வீமவீடணம்
கரளம் விகரளம் குலிசம் முக்கோணம்
ஐந்து கோணம் தீர்க்கதரம் பரிவர்த்துளம்
மகாரௌரவம் அதிதமம் அதிசீதம் அதிவெப்பம்[46]

என்று இருபத்தெட்டாகவும் வகைப்படுத்துகின்றது. தமிழ்லெக்ஸிகன்,

நரகம், மாநரகம், இராசநரகம், இராசராசேச்சுர
நரகம் என நால்வகையாகவும் (சிவ.போ.பா.2,3)
இரௌரவம், துவாந்தம், சீதம்,. வெப்பம், சந்தாபம்
பதுமம், மாபதுமம், காலசூத்திரம்
என எண்வகையாகவும் (சிவ.போ,.பா.23),
தமப்பிரபை, இமப்பிரபை,
தூமப்பிரவை, வாலுகப் பிரபை, சாகரப்பிரபை
இரத்தப் பிரபை, அழற்பிரபை என ஏழு
வகையாகவும் (சீவக.2817,உரை) நூல்களிற்

கூறப்படுவனவும் உயிர்கள் தீவினைப்
பயனை அனுபவிக்கும் இடமுமான உலகம்[47]

என்று வரையறுக்கின்றது. வகைப்பாட்டின் பெயர்களில் வேறுபாடுள்ளதன்றி வகைகளில் மாற்றம் இல்லை.

இது உலகத்தில் பாவஞ்செய்தவர் அடையும்
இடம். இது புராணங்கள் தோறும் பலவிதப்படும்
இது தொகையால் இருபத்தெட்டு ; வகையால்
நூற்று நாற்பது. விரியால் இருபத்தெட்டுக்
கோடியாம்[48]

என்பது அபிதான சிந்தாமணியின் வகைப்பாடு. இங்ஙனம் நரகத்தினைப்பற்றி அகராதிகள் செய்யும் வகைப்பாடு புராணங்களில் விரிவாகப் பேசப்படுகின்றது. இங்குக் குறிக்கப்பெற்றுள்ள ஒவ்வொரு வகையிலும் அவரவர் வினைக்கேற்ப ஒவ்வொரு விதமான துன்பம் அடையப்பெறுவர்.

## ஆய்வு முடிவுகள்

* பழந்தமிழரின் நம்பிக்கைகளுள் துறக்கமும் நிரயமும் மறுமை வாழ்வோடு தொடர்புடையன. நல்வினை செய்தார்க்குத் துறக்கமும், தீவினை புரிந்தார்க்கு நிரயமும் கிட்டும்.

* இம்மை வாழ்வினைத் துறந்து அதன் நற்பயனை அடைவதற்குத் துறக்கம் என்று பெயர். இம்மையறம் மறுமையில் துறக்கப்பேற்றினை வழங்கும் என்பதற்குக் குடபுலவியனார் பாடல் (புறம்.18) சான்றாகின்றது.

* ‘துறக்கம்’ என்ற தமிழ்ச்சொல்லே சுவர்க்கமாக மாற்றம் பெற்றது. சங்க காலத்தில் இச்சொல் பேச்சு வழக்கில் இருந்திருக்கக் கூடும். சங்கம் மருவிய கால இலக்கியங்களில் ‘சுவர்க்கம்’ இடம் பெற்றுள்ளது.

* ஒரு பொருள் குறித்த பல சொற்கள் தோன்றும் மரபிற்கிணங்க, துறக்கத்தைக் குறிக்கப் பல்வேறு சொற்கள் சங்க இலக்கியத்தில் பயின்றுவந்துள்ளன.

* மறுமை வாழ்வு துறக்கத்தோடு தொடர்புடையதாயிருப்பினும், மறுமை என்பது மறுபிறப்பையும், மறுமையுலகம் என்பது துறக்கத்தையும் குறிப்பிடுகின்றன.

* சேர நாட்டுப் புலவர்களிடம் பல திறத்தனவாகத்துறக்கச் சிந்தனை காணப்பெறினும் ‘துறக்கம்’ என்ற சொல்லாட்சி இடம் பெறாதது சிந்தித்தற்குரியது.

* துறக்கம், தேவருலகத்தோடு நெருங்கிய தொடர்புடையதாகச் சங்கப்பாடல்களில் புனையப்பெற்றுள்ளது. தேவரமிழ்தம் பற்றிய செய்திகளும் சங்க இலக்கியத்தில் ஆளப்பெற்றுள்ளன. அமிழ்தம் என்பது சொர்க்கத்தைக் குறிக்காவிடினும் ‘அந்தரத்து அமிழ்தம்’ என்பது தேவருலக உணவினைக் குறிக்கிறது. பாடுபொருளுக் கேற்ப ‘அமிழ்தம்’ என்ற சொற்றொடர் சொர்க்கத்தை இயம்புகிறது.

* தேவர்கள் வாழுமிடமாக இருப்பினும் துறக்கப் பேறுடையோர் அனைவருக்கும் தேவருலகத்தில் இடமுண்டு என்பதைச் சங்கப்பாடல்கள் வழி அறியமுடிகின்றது.

* ஒரு புலவரே பல்வேறு கலைச்சொற்களைப் பயன்படுத்தியிருப்பது குறிப்பிடத்தக்கது. கபிலர், பரணர், மாங்குடி மருதனார் ஆகியோர் இதற்குச் சான்றாவர்.

* இறந்தோர் நெடியோன் கோயிலுக்குச் செல்வர் என்பதும், அங்கு வானவ மகளிரை மணந்து இன்புறுவர் என்பதும் சங்கப் பாக்களால் புலனாகின்றது.

* விசும்பிலுள்ளதே உயர்நிலையுலகமென்றும், நல்வினை செய்வோர் அவ்வுலகம் செல்வர் என்றும் அச்சான்றோருக்கு விழா எடுத்துச் சிறப்புச் செய்யும் மரபு உண்டென்றும் சங்கப் புலவர்கள் பாடிச் சென்றுள்ளனர்.

* துறக்கச் சொல்லாட்சிகளுள் உயர்நிலையுலகம் சேர சோழ பாண்டிய நாட்டுப் புலவர்களால் எடுத்தாளப்பெற்றது. 'துறக்கம்' சொல்லாட்சி பாண்டியநாட்டுப் புலவர்களால் மிகுதியாகப் பாடப்பெற்ற சிறப்புக்குரியது.

* உயிர்கள் இம்மை வாழ்வில் செய்த தீவினைப் பயனை அனுபவிக்கும் இடம் நரகம் என்றழைக்கப்படுகின்றது. தவறு செய்தார் யாராக இருப்பினும் நரகம் பெறுவது திண்ணம். இதற்கு நன்னன் என்ற குறுநில மன்னன் சான்றாகின்றான்.

* 'நரகம்' என்ற சொல் சங்க இலக்கியத்தில் இல்லை. நரகத்தைக் குறிக்க 'நிரயம்' என்ற சொல்லாட்சி குறிக்கப்பெற்றுள்ளது.

* நரகத்தைக் குறிக்கும் பல சொற்கள் அகராதிகளில் சுட்டப்பெறினும் நிரயம், நிரையம், நிறையம் என்ற சொற்கள் மட்டுமே சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன.

* மக்களை நல்வழிப்படுத்தும் பொருட்டுச் சங்கப்பாடல்களில் நிரயம் ஆளுமைபெற்றது (புறம்.5). நிரயத் துன்பம் கொடூரமானது என்ற சிந்தனை புறத்திணை நன்னாகனார் பாடலால் (புறம்.376) புலனாகின்றது.

* சங்க இலக்கியம் துறக்கம், நிரயம் ஆகியவை பற்றி வகைப்பாடு செய்யவில்லை ; தீவினைக்கேற்ற நரகத் துன்பத்தினை அகராதிகள் வகைப்படுத்துகின்றன. வகைப்படுத்தும் பெயர்கள் வேறுபட்டிருப்பினும் அவை குறிப்பிடும் துன்பத்தில் மாறுபாடில்லை என்பது அகராதிகளால் புலனாகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. செ.பழனிச்சாமி (1989), **புறநானூற்றில் தமிழர் பண்பாடு**, வாணி பதிப்பகம், 402, அழகேசன் சாலை, கோவை, ப.102.

2. கி.லெட்சுமணன் (2000), **இந்திய தத்துவ ஞானம்**, பழனியப்பா பிரதர்ஸ், ப.420.

3. பெ.மாதய்யன் (2001), **வரலாற்று நோக்கில் சங்க இலக்கிய பழமரபுக் கதைகளும் தொன்மங்களும்**, தமிழ்ப்பல்கலைக் கழகம்,தஞ்சாவூர், ப.142.

4. பாரதிதாசன், **வந்தவர் மொழியா? செந்தமிழ்ச் செல்வமா?** பூம்புகார் பிரசுரம், 63, பிராட்வே, சென்னை, ப.90.

5. ஆசிரியர் குழு, நர்மதாவின் தமிழ் அகராதி, ப.389.

6. ஆ. சிங்காரவேலு முதலியார் (1810), **அபிதான சிந்தாமணி** வைசெயந்தி அச்சுயந்திர சாலை, ப.446.

7. பாரதிதாசன், **வந்தவர் மொழியா? செந்தமிழ்ச் செல்வமா?** பூம்புகார் பிரசுரம், 63, பிராட்வே, சென்னை, ப.90.

8. பி.இராமநாதன், **இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி (தொகுதி-2)**, இன்ஸ்டிடியூட் ஆப் சவுத் இண்டியன் ஸ்டடீஸ், நல்லதம்பி தெரு, எல்லீஸ் ரோடு, சென்னை, ப.504.

9. பெ.மாதய்யன் (2001), **வரலாற்று நோக்கில் சங்க இலக்கிய பழமரபுக் கதைகளும் தொன்மங்களும்**, தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர், ப.142.

10. ரா.இராகவையங்கார் (1949), **பெரும்பாணாற்றுப்படை ஆராய்ச்சியும் உரையும்,** பாண்டியன் அச்சகம், சிதம்பரம், பக்.80,81.

11. மு.சண்முகம் பிள்ளை (1994), **குறுந்தொகை மூலமும் உரையும்,** தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர்,ப.81

12. ஔவை .சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), **புறநானூறு மூலமும் உரையும் (பகுதி-2)**, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, ப.120.

13. உ.வே.சாமிநாதய்யர் (1971), **புறநானூறு மூலமும் பழைய உரையும்,** டாக்டர்.உ.வே.சாமிநாதய்யர் நூல் நிலையம், திருவான்மியூர், சென்னை, ப.435.

14. மேலது, ப.71

15. ஔவை .சு.துரைசாமிப்பிள்ளை, **புறநானூறு மூலமும் உரையும் (பகுதி-1)**, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, ப.18.

16. உ.வே.சாமிநாதய்யர் (1971), **புறநானூறு மூலமும் பழைய உரையும்,** டாக்டர்.உ.வே.சாமிநாதய்யர் நூல் நிலையம், திருவான்மியூர், சென்னை, ப.531

17. ஔவை .சு.துரைசாமிப்பிள்ளை, **புறநானூறு மூலமும் உரையும்,** சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, ப.175.

18. சு.அருளம்பலவனார், **பதிற்றுப்பத்து ஆராய்ச்சியுரை,** (இரண்டாம் பாகம்), அ.சிவானந்தநாதன் வெளியீடு, காரை நகர், யாழ்ப்பாணம், ப.449.

19. மேலது, ப.476.

20. பொ.வே.சோமசுந்தரனார் (1959), **ஐங்குறுநூறு மூலமும் உரையும்**, சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், சென்னை, ப.610.

21. நச்சினார்க்கினியர் (1938), **கலித்தொகை மூலமும் உரையும்**, சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், சென்னை, ப.428

22. ஔவை .சு.துரைசாமிப்பிள்ளை, **புறநானூறு மூலமும் உரையும் (பகுதி-2)**, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, ப.328.

23. பொ.வே.சோமசுந்தரனார் (1959), **ஐங்குறுநூறு மூலமும் உரையும்**, சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், சென்னை, ப.565.

24. உ.வே.சாமிநாதய்யர் (1947), **குறுந்தொகை மூலமும் பழைய உரையும்,** கபீர் அச்சுக்கூடம், சென்னை, ப.592.

25. அ.மாணிக்கனார் (1999), **அகநானூறு மூலமும் உரையும், முதல் பகுதி (1:120)**, வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, ப.343.

26. பெ.மாதய்யன் (2001), **வரலாற்று நோக்கில் சங்க இலக்கிய பழமரபுக் கதைகளும் தொன்மங்களும்**, தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர், ப.156.

27. நச்சினார்க்கினியர் (உ.ஆ), **பத்துப்பாட்டு மூலமும் உரையும்**, கபீர் அச்சுக்கூடம், சென்னை, ப.277.

28. மேலது,ப.258.

29. உ.வே.சாமிநாதய்யர் (உ.ஆ), **குறுந்தொகை மூலமும் பழைய உரையும்,** கபீர் அச்சுக்கூடம், சென்னை,ப.190.

30. .......... (1963) TAMIL LEXICON (Vol.IV.PART-I), Madras University

31. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, **புறநானூறு மூலமும் உரையும் (பகுதி-2)**, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, ப.341.

32. மேலது, ப.282.

33. உ.வே.சாமிநாதய்யர், (உ.ஆ), **புறநானூறு மூலமும் பழைய உரையும்**, உ.வே.சாமிநாதய்யர் நூல் நிலையம், சென்னை, ப.518.

34. ந.மு.வேங்கடசாமி நாட்டார் & வேங்கடாசலம் பிள்ளை (உ.ஆ.1946)), **அகநானூறு மணிமிடை பவளம்**, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, ப.363.

35. பெ.மாதய்யன் (2001), **வரலாற்று நோக்கில் சங்க இலக்கிய பழமரபுக் கதைகளும் தொன்மங்களும்**, தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர், ப.363.

36. ப.ராமசுவாமி (தமிழாக்கம்), தம்மபதம்,

37. ஆசிரியர் குழு, நர்மதாவின் தமிழ் அகராதி, ப.482.

38. அ.மா.பரிமணம். (மு.ப.1991), **வாழ்வியற் களஞ்சியம் (தொகுதி 11)**, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், ப.236.

39. மேலது, ப.236.

40. இராமநாதன், **இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப்பெயரகராதி (தொகுதி.2)**, இன்ஸ்டிடியூட் ஆப் சவுத் இன்டியன் ஸ்டடீஸ், நல்லதம்பி தெரு., எல்லீஸ் ரோடு, சென்னை, ப.507.

41. வே. அண்ணாமலை (தொ.ஆ), **சங்க இலக்கியத் தொன்மக் களஞ்சியம் (தொகுதி-1)**, மெய்யப்பன் தமிழாய்வகம், 53, புதுத்தெரு, சிதம்பரம், ப.260.

42. மேலது, ப.260.

43. ...............(மு.ப.1991), வாழ்வியற் களஞ்சியம் (தொகுதி-11), தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்,ப.237.

44. The myths tell of a dangerous Journey of the soul, with ubstacles to be passed ....... such elements are standard features of world folklore and heroic legend. - Joseph campbell (1956) **THE HERO WITH THOUSAND FACES,** New work, Meridian books, P.366.

45. இராமநாதன், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப்பெயரகராதி (தொகுதி-2), இன்ஸ்டிடியூட் ஆப் சவுத் இன்டியன் ஸ்டடீஸ், நல்லதம்பி தெரு, எல்லீஸ் ரோடு, சென்னை, ப.508

46. மேலது, ப.508.

47. ...............(1963), TAMIL LEXICON (Vol.IV Part), Madras University, P.2162.

48. ஆ.சிங்காரவேலு முதலியார் (1910), அபிதான சிந்தாமணி, வைசெயந்தி அச்சுயந்திர சாலை, ப.583.

# சங்க இலக்கியத்தில் சொர்க்க நரகக் கோட்பாடு

சங்க காலத்தில் வேந்தர்களும், குறுநில மன்னர்களும் தமிழகத்தை ஆண்டு வந்தனர். அவர்களைப் புகழ்ந்தும் இடித்துரைத்தும் அறிவுறுத்தியும் பாடிப்பரிசில் பெறுவதை நோக்கமாகக் கொண்டவர்கள் சங்கப் புலவர்கள். வாழ்வியல் நெறிகளைக் கூறப்போந்த புலவர்கள் துறக்கம், நிரயம் ஆகிய மறுமை வாழ்வியலையும் பாடுபொருளாகக் கொண்டனர். பாடுபொருள் ஒன்றாயினும் பாடுநெறி ஒவ்வொரு புலவருக்கும் மாறுபடும் தகைமையின. சங்க இலக்கியத்தில் சொர்க்கம், அதற்கெதிரான நரகம் பற்றிய கோட்பாடுகள் சேர, சோழ, பாண்டிய நாட்டுப் புலவர்களாலும், கொங்குநாட்டுப் புலவர்களாலும் பாடப்பெற்றிருப்பதை ஒப்பியமாக்கிக் காண்பது இவ்வியலின் நோக்கம்.

## புலவர்களும் அவர்தம் நாடுகளும்

வெவ்வேறு கால கட்டத்தில் வாழ்ந்த புலவர்கள் பழந்தமிழகத்தின் பல்வேறு நாடுகளில் வாழ்ந்தவர்களாவர். சங்கப் புலவர்கள் தம் நாட்டைச் சேர்ந்தவர்களை மட்டும் பாடாது பிற நாட்டு வேந்தர்களையும், குறுநில மன்னர்களையும், மக்களையும் பாடியுள்ளமை அவர்தம் பரந்த மனப்பாங்கை வெளிப்படுத்துகின்றது.

### 1. சேரநாட்டுப் புலவர்கள்

1. கழாத்தலையார்
2. காக்கைப்பாடினியார் நச்செள்ளையார்
3. குட்டுவன் கீரனார்
4. குமட்டூர் கண்ணனார்
5. கூடலூர் கிழார்

6. நம்பி குட்டுவனார்

7. நரிவெரூஉத்தலையார்

8. பாலைக்கௌதமனார்

9. பெருங்குன்றூர்கிழார்

## 2. சோழநாட்டுப் புலவர்கள்

1. ஆலூர் மூலங்கிழார்

2. ஆலத்தூர் கிழார்

3. ஐயூர் முடவனார்

4. உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்

5. உறையூர் முதுகண்ணன் சாத்தனார்

6. ஓரோடகத்துக் கந்தரத்தனார்*

7. கடியலூர் உருத்திரங்கண்ணனார்

8. காரிகிழார்*

9. குறுங்கோழியூர் கிழார்

10. கோப்பெருஞ்சோழன்

11. சாத்தந்தையார்

12. செல்லூர்க்கோசிகன் கண்ணனார்

13. தாயங்கண்ணனார்

14. தும்பிசொகினனார்*

15. புல்லாற்றூர் எயிற்றியனார்

16. புறத்திணை நன்னாகனார்

17. மாமூலனார்*

18. வடமோதங்கிழார்*

* குறியிடப்பெற்ற புலவர்கள் தொண்டைநாட்டைச் சேர்ந்தவர்களாவர்.

சோழநாட்டின் ஆட்சிக்குட்பட்ட பகுதியாதலால் தொண்டைநாட்டுப் புலவர்கள் சோழநாட்டில் சேர்க்கப்பட்டனர்.

### 3. பாண்டியநாட்டுப் புலவர்கள்

1. இளம்பெருவழுதியார்
2. கபிலர்
3. கடலுள்மாய்ந்த இளம்பெருவழுதி
4. கடுவனிளவெயினனார்
5. கீரந்தையார்
6. குடபுலவியனார்
7. நக்கீரர்
8. நப்பண்ணனார்
9. நல்லந்துவனார்
10. நல்லழுசியார்
11. நல்லெழுநியார்
12. நல்வழுதியார்
13. பேயனார்
14. மதுரை மருதங்கிழார் மகனார் சொகுத்தனார்
15. மாங்குடி மருதனார்
16. மாறோக்கத் து நப்பசலையார்.

### 4. கொங்கு நாட்டுப் புலவர்கள்

1. பரணர்
2. ஔவையார்

## 5.நாடு வரையறுக்கவியலாப் புலவர்கள்

1. காவிட்டனார்
2. சிறுவெண்டேரையார்
3. பரூஉ மோவாய்ப்பதுமன்
4. பிரமனார்
5. மோசிகீரனார்
6. வெண்பூதன்

## சேரநாட்டுப் புலவர்களின் துறக்கக் கோட்பாடு

சேரநாட்டுப் புலவர்களில் கழாத்தலையார், காக்கைப்பாடினியார் நச்செள்ளையார், குட்டுவன்கீரனார், கூடலூர் கிழார், பெருங்குன்றூர் கிழார் ஆகியோர் துறக்கம் குறித்துப் பாடியுள்ளனர்.

### கழாத்தலையார்

சேரன் குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் போர்ப்புறத்துப் பொருது வீழ்ந்தாரைக் கண்ட கழாத்தலையார் அவ்விருவரும் அரும்பெறலுலகம் சென்றதாகப் பாடுகின்றார் (புறம்.62).

பல நூறாக அடுக்கப்பட்ட பதினெண்பாடை
மாக்களாகிய படைத்தொகுதி இடமில்லையாம்படி
தொக்க அகன்ற இடத்தையுடைய பாடிவீட்டின்கண்
போர்க்களம் தமதாக்கிக் கொள்ளுதற்கு உரியோர்
ஒருவரின்றிக் கண்டார்க்கு அச்சம் வர உடனே
மடிந்தது பூசல் ; அவர் பெண்டிரும் பச்சையிலை
தின்னாராய்க் குளிர்ந்த நீரின்கண் மூழ்காராய்

அவர் மார்பகத்தைக் கூடி அக்களத்தின் கண்ணே
உடன் கிடந்தார் ; வாடாத கற்பகத்தின் தாரினையும்
இமையாத கண்ணினையும் நாற்றமாகிய
உணவையுமுடைய தேவர்களும் மிகப்பெறுதற்கரிய
உலகம் நிரம்ப விருந்து பெற்றார் ; அதனாற்
பொலிக நுங்கள் புகழ்[1]

என்பது அப்பாடலின் பொருள். வீரப் போர் புரிந்து துறக்கம் சேர்ந்தமை இங்குச்சுட்டப்பெற்றுள்ளது. கழாத்தலையார் சேரநாட்டுப் புலவராயினும் இருபெரு வேந்தர்களின் போர்த் திறனையும் ஒருங்கு பாராட்டிப் போந்தமையும் இருவேந்தரும் துறக்கம் சென்றதாகப் பாடியுள்ளமையும் அவரது புலமைத் திறத்தைத் காட்டுகின்றது. தொல்காப்பியத்திலுள்ள,

வாள்வாய்ந்த இருபெரு வேந்தர் தாமும் சுற்றமும்
ஒருவரும் ஒழியாத் தொகைநிலை

என்னும் தும்பைத் திணையின் துறைக்குச் சான்று காட்டுவர். சேர, சோழ வேந்தரின் பெண்டிரும் துறக்கம் சென்றதை,

பன்னூ றடுக்கிய வேறுபடு பைஞ்ஞிலம்
இடங்கொட வீண்டிய வியன்கட் பாசறைக்
களங்கொளற் குரியோ ரின்றித் தெறுவர
உடன்வீழ்ந் தன்றா லமரே பெண்டிரும்
பாசடகு மிசையார் பனிநீர் மூழ்கார்
மார்பகம் பொருந்தி யாங்கமைந் தனரே

(புறம்.62:10-15)

என்ற பாடலடிகள் தெளிவுறுத்துகின்றன. உடன்கட்டை ஏறும் பழக்கம் இருந்தமையினைக் கழாத்தலையார் தன் பாடலில் வெளிப்படுத்தியுள்ளார்.

**கூடலூரர் கிழார்**

சேர நாட்டைச் சேர்ந்த பொறை நாட்டில் வாழ்ந்த கூடலூர் கிழார் கோச்சேரமான் யானைக்கண் சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையின் இறுதி நாளையெண்ணி வருந்திப் பாடிய பாடல் மேலோருலகம் பற்றிய குறிப்பினை உரைக்கின்றது (புறம்.229). பகைவரைப் பிணித்துக்கொள்ளும் வலிமையும் நச்சியோர்க்கு அளந்து கொடுத்தலறியாத வண்மையையுமுடைய நீலமலைபோலும் மாயோன் என்று மாந்தரஞ்சேரல் இரும்பொறையினைப் புகழ்ந்துரைக்கின்றார்.

ஒருமீன் விழுந்தன்றால் விசும்பி னானே
அதுகண் டியாமும் பிறரும் பல்வே றிரவலர்
பறையிசை யருவி நன்னாட்டுப் பொருநன்
நோயில னாயி னன்றுமற் றில்லென
அழிந்த நெஞ்ச மடியுளம் பரப்ப
அஞ்சின மெழுநாள் வந்தன் றின்றே (புறம்:229:12-17)

என்று மன்னன் இறப்பதற்கு ஏழு நாள்களுக்கு முன்பே வானில் தீநிமித்தம் தோன்றியதாகப் பாடும் கூடலூர் கிழாரது வானியல் புலமை போற்றத்தக்கது. ஒள்ளிய வளையையுடைய மகளிர்க்குத் துணையானதை மறந்து அவன் மேலோருலகம் சென்றதாகப் பாடுகின்றார். விண்மீன் எரிந்து வீழ்ந்தால் நாட்டிற்குக் கேடு நிகழும் என்ற நம்பிக்கை கூடலூர் கிழாரது பாடலால் தெளிவாகின்றது.

## குட்டுவன் கீரனார்

ஆய் அண்டிரன் இறந்த போது அவன் இறப்பிற்காகச் செயலற்று இரங்கிப் பாடிய குட்டுவன் கீரனார் அந்நாட்டுப் புலவர்களின் செயலை எண்ணிக் கலங்கிப் பாடுகின்றார் (புறம்.240). இப்பாடலுக்கு,

> ஆய் அண்டிரன் இறந்ததும் உரிமை மகளிர்
> உடனுயிர் விடுத்ததும் கண்கலங்கியதொருபுறம்
> நிற்க, கற்று வல்ல புலவர் பலரும் வேறுநாடு
> செல்வது கண்டு மிகவும் மனங்கலங்கினார்
> அக்கலக்கத்திடை இவ்வினிய பாட்டையும் பாடினார்[3]

என்று விளக்கமுரைப்பர். அண்டிரன் தேவருலகத்தையடைய, பொந்தாகிய தான் வாழுமிடத்துப் போழ்ந்தாற் போலும் வாயலகையுடைய பேராந்தை சுட்டுக்குவியென்று செத்தோரை அழைப்பது போலக் கூவும் கள்ளியையுடைய பாழிடமாகிய புறங்காட்டுள் ஒரு புடையிலே தங்கி ஒள்ளிய தீச்சுட அவனது உடம்பு மாய்ந்துவிட்டது என்ற குறிப்பு அவன் மேலோருலகம் சேர்ந்தமையினைத் தெரிவிக்கின்றது. புலவர்கள் வேறுநாடு செல்வதாகப் பாடியிருப்பது அவனது வள்ளன்மைக்குச் சான்றாகின்றது. மேலும் ஆய் அண்டிரனின் உரிமை மகளிர் உடன்கட்டை ஏறியமையைப் பாடியிருப்பதும் குறிப்பிடத்தக்கது. சங்க காலத்தில் பெண்டிர் உடன்கட்டை ஏறியதற்கான காரணத்தைக்,

> கைம்மைத் துயரிலிருந்து தப்புதல்,
> சமுதாய இகழ்ச்சியிலிருந்து விடுபடுதல்,
> கணவனுடன் சுவர்க்கம் புகும் நம்பிக்கை
> ஆகியவற்றின் உந்துதால் மகளிர் உடன்கட்டை

ஏறியதை இலக்கியச் சான்றுகள்

புலப்படுத்துவதை மேலே கண்டோம்[4]

என்று தம் ஆய்வில் குறிப்பர். சேர நாட்டில் இருந்த இப்பழக்கம் சோழ நாட்டில் அருகிக் காணப்பட்டிருக்க வேண்டும். ஆகையால் தான் ஆய் அண்டிரன் இறந்ததைப் பாடிய உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் அவன் உரிமை மகளிரும் உடன் இறந்ததைப் பாடவில்லை.

***காக்கைப்பாடினியார் நச்செள்ளையார்***

ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்ட காக்கைப் பாடினியாரது பதிற்றுப்பத்துப் பாடல்கள் (பதிற்.25:4) உயர்நிலையுலகம் பற்றிக் குறிப்பிடுகின்றன. ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் வீரச்சிறப்பு இங்குப்பேசப்படுகின்றது. இச்சேரலாதனின் படை வலிமை பகைவர் பலரும் உயிர் நீத்துத் துறக்கம் செல்லத் துணையாகின்றது என்றும் இவனது தடக்கையானது இரப்போர்க்குக் கவிதல் அன்றிப் பிறர் எவரிடமும் இரத்தற்பொருட்டு மலர்தலையறியாது என்று சான்றோர் கூறக் கேட்டிருப்பதாகவும் பாடுகின்றார் புலவர். பகைவரும் துறக்கம் போந்தமை இங்குச் சுட்டப்பெறுகின்றது (பதிற்.52).

உயர்நிலையுலகம் குறித்து எதிர்மறையாகப் பாடும் மரபும் காக்கைப்பாடினியார் பாடலில் இடம்பெற்றுள்ளமை (பதிற். 54) குறிப்பிடத்தக்கது. துறக்கவுலகம் சேராது அரச வாழ்க்கையில் நிலைபெற்று நின்று நெடுங்காலம் வாழ்வாயாக என்று வாழ்த்துகின்றார். இதனை,

..............................................................யெனைய தூஉம்

உயர்நிலை யுலகத்துச் செல்லா திவணின்

நிருநில மருங்கி னெடிது மன்னியரோ (பதிற்.54:9-11)

என்ற அடிகள் தெளிவுறுத்தும். சேரலாதனுக்குத் துறக்கப் பேறு கிட்டும் என்பது புலவரது எண்ணம். அச்சிந்தனை புலவரை இவ்வாறு பாடச் செய்கிறது.

> சேரலாதன் படையாண்மையில் சிறந்து
> விளங்கியதைப் போன்றே கொடையாண்மையிலும்
> சிறப்புற்று விளங்கினான். நாட்டின் வருவாயைப்
> பெருக்கி செவ்விய முறையில் அவற்றை வகுத்து
> ஆட்சியைத் திறம்பட நடத்தினான்[5]

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் மீது காக்கைப் பாடினியாருக்கிருந்த அன்பும் மதிப்பும் நாட்டுப்பற்றும் துறக்கம் குறித்த எண்ணத் திண்மையும் இப்பாடல்களால் புலனாகின்றன.

### பெருங்குன்றூர் கிழார்

காக்கைப் பாடினியாரைப் போன்று பெருங்குன்றூர்கிழாரும் மன்னனை வாழ்த்திப்பாடும் மரபில் துறக்கச் சிந்தனையை வெளிப்படுத்தியுள்ளார். இவரால் பாடப்பெற்றவர் குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை (பதிற் 89).

> ................................................ நின்கோல் செம்மையின்
> நாளி னாளி னாடுதொழு தேத்த
> உயர்நிலை யுலகத் துயர்ந்தோர் பரவ (பதிற்.89:9-11)

என்பது பாட்டு. இங்குக் குறிக்கப்பெறும் உயர்நிலையுலகத்து உயர்ந்தோர் எனப்படுபவர் தேவருலத்தில் வாழ்பவராவார். நினது அரசியல் முறை செம்மையாக நடத்தலால், நாள்தோறும் நாட்டவரெல்லாம் நின்னைத் தொழுது பரவுவதாலும், உயர்ந்த நிலைமையினையுடைத்தாகிய

தேவருலக வாழ்வுக்குரிய ஒழுக்கத்தாலுயர்ந்த சான்றோர் பரவி வாழ்த்துதலாலும், நீ மேற்கொண்டு புரியும் அரசுமுறை பிழையாமல் போரில் வெற்றியால் மேம்பட்டு வாழ்வாயாக என்று வாழ்த்துகின்றார் பெருங்குன்றூர்கிழார்.

ஒழுக்கத்தாலுயர்ந்தோர் மட்டுமே தேவருலக வாழ்வுக்குரியவர்கள் என்பதால் அத்தகைய சிறப்புடையவன் குடக்கோ இளஞ்சேரலிரும் பொறை என்பது தெள்ளிதின் புலனாகின்றது.

**பாலைக் கௌதமனார்**

பிற புலவர்கள் தம்மால் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனைத் துறக்கம் செல்லுமாறு வாழ்த்த, புலவரே துறக்கம் சென்ற பெருமைக்குரியவர் பாலைக் கௌதமனார். பதிற்றுப்பத்தின் மூன்றாம் பத்துப் பாடல்களைப் பாடிப் பத்தாம் பாடலின் இறுதியில் தம் மனைவியோடு துறக்கம் சென்றாதாகப் பதிகம் குறிப்பிடுகிறது. இதனை,

> பாடிப்பெற்ற பரிசில்; 'நீர் வேண்டியது கொண்மின்'
> என, 'யானும் என் பார்ப்பனியும் சுவர்க்கம் புகல்
> வேண்டும்' என, பார்ப்பாரிற் பெரியோரைக்
> கேட்டு, ஒன்பது பெருவேள்வி வேட்பிக்கப் பத்தாம்
> பெருவேள்வியில் பார்ப்பானையும் பார்ப்பினியையும்
> காணாராயினார்[6]

என்ற பதிகக்குறிப்பு தெளிவுறுத்தும். பிற புலவர்களைப் போன்று இங்குப் பாட்டுடைத் தலைவனுக்கு "உயர்நிலையுலகச் சிந்தனை" குறிக்கப்பெறவில்லை. பத்துப்பெரும் வேள்விகளை மன்னன் செய்விக்க, பாலைக்கௌதமனார் அம்மன்னனைப் புகழ்ந்துரைக்க, வேள்வியின்

இறுதியில் புலவருக்கும் அவர் மனைவிக்கும் துறக்கம் வழங்கப் பெற்றது.

மற்றவர்களெல்லாம் பல்யானைச்
செல்கெழு குட்டுவனது வீரத்தைப் பாராட்டிப்
புகழும் போது, அவனது படைஎடுப்பால்
எதிரி நாடுகள் எத்தகைய சேதமுற்றது
என்பதையும் மக்கள் எவ்வாறு கண்ணீர்
வடித்து அவலமுற்றனர் என்பதையுமே
தமது பாடல்களில் எடுத்துக்காட்டிப் போரில்
அவனுக்கு வெறுப்புண்டாகச் செய்கின்றார்
பாலைக் கௌதமனார்.[7]

புலவரது எண்ணம் ஈடேறியமைக்கான குறிப்பு அவர்பாடிய பதிற்றுப்பத்துப் பாக்களில் வெளிப்படையாகக் கிடைத்தில.

**சேரநாட்டுப் புலவர்களும் அவர்தம் சொல்லாட்சித் திறனும்**

| வ. எண் | புலவர் பெயர் | துறக்கம் குறித்த சொல்லாட்சி | பா. எண் |
|---|---|---|---|
| 1. | கழாத்தலையார் | அரும்பெறலுலகம் | புறம். 62 |
| 2. | காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் | உயர்நிலை யுலகம் | புறம்.52,54 |
| 3. | குட்டுவன் கீரனார் | மேலோருலகம் | புறம்.240 |
| 4. | கூடலூர் கிழார் | மேலோருலகம் | புறம்.229 |
| 5. | பாலைக் கௌதமனார் | – | பதிற். 3-ஆம் பத்து |
| 6. | பெருங்குன்றூர் கிழார் | உயர்நிலையுலகத்து உயர்ந்தோர் | பதிற். 89 |

சேரநாட்டுப் புலவர்களிடம் 'துறக்கம்' என்ற சொல்லாட்சி இடம்பெறாமை சிந்திக்கத்தக்கது. மன்னன் இறந்தபோது அவன் தேவருலகம் சென்றதாகவும், மன்னன் இருக்கும்போது தேவருலகப் புகழ்பெற்று வாழுமாறும், தேவருலகம் செல்லாது நிலவுலகில் நீடு வாழுமாறும் சேரநாட்டுப் புலவர்கள் பல்வேறு நிலைகளில் பாடியுள்ளனர். 'துறக்கம்' பற்றிய சேரநாட்டுப் புலவர்களின் எண்ணத்தினை,

1. மேலோருலகம் சென்றமைக்கு இரங்குதல்
2. தேவர்களும் வாழ்த்துமாறு புகழ்பெறச் சொல்லுதல்
3. உயர்நிலையுலகம் செல்லாது நிலவுலகத்திலிருக்குமாறு வாழ்த்துதல்
4. வீரமரணம் எய்தியோர் யாராயினும் துறக்கம் பெறுதல்
5. கணவனுடன் மனைவியும் உடன்கட்டை ஏறித் துறக்கம் அடைதல்.
6. வேள்வி செய்து துறக்கம் சேர்தல்

ஆகிய நிலைகளில் பகுக்க இயலும். சேரநாட்டுப் புலவர்களிடம் அவரவர்களுக்கென்று தனித்தனிக் கோட்பாடுகள் இருந்ததை அவர்தம் பாடல்கள் உணர்த்துகின்றன.

## சோழ நாட்டுப் புலவர்களின் துறக்கக் கோட்டுபாடு

சோழநாட்டுப் புலவர்களில் ஆலத்தூர் கிழார், ஓரோடகத்துக் கந்தரத்தனார், புறத்திணை நன்னாகனார் ஆகியோர் நீங்கலாக ஏனைய புலவர்கள் துறக்கம் குறித்துப் பாடியுள்ளனர்.

### ஆவூர் மூலங்கிழார்

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை ஆவூர் மூலங்கிழார் பாடிய பாடல் (புறம்.38) தேவருலகத்தினை இழிவாகப்

பேசுகிறது. இனிய பொற்பூப் பொருந்திய கற்பகச் சோலையையுடைய விண்ணுலகத்தவரும் தாம் செய்த நல்வினையின் பயனாகிய இன்பத்தை மட்டுமே அங்குப் பெறுதற்குரியர்; செல்வமுடையோர் வறியோர்க்கு வழங்குதலும், வறியோர் செல்வமுடையாரிடம் சென்றிரத்தலும் தேவருலகத்தில் இல்லை. நீ வேண்டியது வழங்குபவனாதலால் தேவருலக இன்பமே இங்கிருத்தலின், பகைவர் தேயத்திருந்த போதும் நின் நாட்டை நினைப்பர் பரிசிலர் என்று கிள்ளிவளவனைப் புகழ்ந்து பாடுகின்றார்.

பொலம்பூங் காவி னன்னாட் டோரும்
செய்வினை மருங்கின் எய்த லல்லதை
உடையோ ரீதலு மில்லோ ரிரத்தலும்
கடவதன்மையிற் கையற வுடைத்தென
ஆண்டுச்செய் நுகர்ச்சி யீண்டுங் கூடலின்
நின்னா டுள்ளுவர் பரிசிலர்
ஒன்னார் தேஎத்து நின்னுடைத் தெனவே

(புறம்.38:11-17)

என்பது அப்பாட்டு. நல்வினைப் பயன் இன்பத்தை மட்டுமே பெறக்கூடிய தேவருலகத்தைக் காட்டிலும் கிள்ளிவளவனது நாடு இன்பம் தரக்கூடிய சிறப்புடையது என்பதால் புலவரது நாட்டுப்பற்று புலனாகின்றது. பொலம்பூங்காவின் நன்னாட்டோர், ஆண்டு என்ற இரண்டு சொல்லாட்சிகள் ஒரு பாடலில் பயின்று வர இப்பாடல் அமைந்துள்ளது.

**ஐயூர் முடவனார்**

இவரைச் சோழநாட்டுப் புலவரென்றும்[8], பாண்டியநாட்டுப் புலவரென்றும்[9] இருவிதமாகக் கருதுவர். இங்குச் சோழநாட்டுப் புலவர்

வரிசையில் அவரது துறக்கக் கோட்பாடு விளக்கப் பெறுகிறது. சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் இறந்ததை எண்ணி அவனுடைய புகழுடம்பினை வியந்து அவன் தேவருலகம் சென்றதாகப் பாடுகின்றார் (புறம். 228). இவ்வேந்தனை ஆலூர் மூலங்கிழார் உயிர் வாழ்ந்த போது புகழ்ந்து பாட, ஐயூர் முடவனார் உயிர் துறந்த போது புகழ்ந்துரைக்கின்றார்.

இருநிலம் திகிரியாகவும் மாமேரு மண்ணாகவும் கொண்டு குள முற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனுக்குத் தாழி செய்ய இயலுமா? என்று குயவனைப் பார்த்துக் கேட்கின்றார் புலவர். அவனுடைய புகழுடம்பிற்கு இணைய தாழி செய்தல் யாராலும் இயலாது என்பது' புலவரத எண்ணம். அச்சிந்தனை பாடலாக உருவெடுக்கின்றது.

சேண்விளங்கு சிறப்பிற் செம்பியர் மருகன்
கொடி நுடங்கு யானை நெடுமா வளவன்
தேவருலக மெய்தின னாதலின்
அன்னோற் கவிக்குங் கண்ணகன்றாழி
வனைதல் வேட்டனையாயி னெனையதூஉம்
இருநிலந் திகிரியாப் பெருமலை
மண்ணா வனைத லொல்லுமோ நினக்கே (புறம்.228:9-15)

என்பது அப்பாட்டு. புலவர்கள் மன்னர்களிடம் பெற்ற சிறப்பு இறந்த பிறகும் அவர்களைப் புகழ்ந்து பாடச் செய்கிறது. தாழியிற் புதைக்கும் மரபு சங்க காலத்தில் இருந்தமை இப்பாடலால் அறியலாகின்றது. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனுடைய நாடு தேவருலகினும் சிறந்தது என்றும், அவன் தேவருலகம் சென்றதாகவும் இருவேறு விதமாகத் தேவருலகம் புனையப்பெற்றுள்ளது.

**உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்**

துறக்கம் பற்றி இரண்டு பாடல்கள் (புறம்:134,241) ஏணிச்சேரி முடமோசியாரால் பாடப்பெற்றவை. இவ்விரு பாடல்களும் ஆய் அண்டிரனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டவை. மறுமைப் பயன் கருதிக் கொடுப்போரை 'அறவிலை வணிகன்' என்றும் ஆய் அண்டிரன் வள்ளன்மை உடையவனாயினும் 'அறவிலை வணிகன் அல்லன்' என்றும் பாடுகின்றார் (புறம். 134).

> மறுமைப்பயன் அறப்பயனாதலின், இம்மையில்
> நலம் செய்து மறுமையில் இன்பம் கருதுவோரை,
> 'அறவிலை வணிகர்' என்றார்[10]

மறுமைப்பயன்கருதிச் செய்யவில்லையாயினும் ஆய் அண்டிரனுக்குத்துறக்கம் கிடைத்ததைத் தம் மனக்கண்ணால் கண்டதாகப் பாடுகின்றார் முடமோசியார் (புறம். 241).

> திண்டே ரிரவலர்க் கீத்த தண்டார்
> அண்டிரன் வரூ மென்ன வொண்டொடி
> வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுட்
> போர்ப்புறு முரசங் கறங்க
> ஆர்ப்பெழுந் தன்றால் விசும்பி னானே (புறம்.241)

என்று ஆய் அண்டிரனுக்கு வானுலகத்தில் கிடைத்த வரவேற்பைப் புகழ்ந்து பாடுவர்.

> ஒரு புலவன் தான் கருதிய குறிப்பை உயர்த்துச்
> சொல்வது தற்குறிப்பேற்றம்; அண்டிரனைத்
> தேவருலகத்து வேந்தன் எதிர்கொண்டு வரவேற்பன்

என்பது மோசியார் குறிப்பு; இதனை இந்திரன் கோயிலுள் ஆங்கு வரும் அண்டிரனை வரவேற்றற் பொருட்டு முரசு முழங்குகிறது என உயர்த்திக் கூறுதலால் தற்குறிப்பேற்றமாயிற்று[11]

என்பர். இங்கு 'நெடியோன்' என்பதற்கு ஔவை. சு.துரைசாமிப் பிள்ளை 'இந்திரன்' என்று பொருள் வரைந்துள்ளார். ஆனால் 'நெடியோன்' என்பதற்குத் 'திருமால்' என்றும் பொருளுண்டு. ஆகவே ஆய் அண்டிரன், நெடியோன் கோயிலாகிய 'திருவைகுந்தம்' சென்றதாகக் கருத இடமுண்டு. இலை மறை காயாகப் புலவரின் சமய ஒட்டத்தினை அறிய இயலுகின்றது. வானுலக வரவேற்புக் குறித்துப் பாடிய பெருமை முடமோசியாருக்கு உரியது. இவ்வுலக வாழ்வினைப் புகழ்ந்து பாடியது போன்று மேலுலக வாழ்வினையும் போற்றிப் பாடியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

### உறையூர் முதுகண்ணன் சாத்தனார்

சோழன் நலங்கிள்ளியை உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பாடிய முதுமொழிக் காஞ்சிப் பாடல் (புறம்.27) புலவர் பாடும் புகழுடையார் விண்ணுலகெய்துவர் என்பதை விளக்குகிறது. 'சேற்றில் வளரும் தாமரை பூத்த ஒள்ளிய நிறமுடைய நூறு இதழ்களைக் கொண்ட மலரின் நிரையைக் கண்டாற் போன்ற ஏற்றத்தாழ்வில்லாத, சிறந்த குடியில் பிறந்து மகிழ்வோடு வாழ்ந்தாரை எண்ணும் போது புகழும் பாட்டும் உடையோர் சிலர். தாமரையின் இலையையொப்பப் பயன்படாது மாய்ந்தவர் பலர்; புலவரால் பாடப்பெறும் புகழுடையார் தாம் செய்யும் நல்வினையை முடித்துப் பாகனால் செலுத்தப்படாத ஊர்தியைப் பொருந்துவரென்று அறிவுடையோர் சொல்லக் கேட்டுளேன்' என்பது அப்பாடலின் கருத்து.

இங்குப் புலவருக்கு மதிப்பளித்துப் போற்ற வேண்டும் என்ற செய்தி மறைமுகமாகச் சுட்டப்பெறுகிறது. புலவர்கள் தம் வறுமையைப் போக்கவும், சமூக மதிப்புப் பெறவும் மன்னர்களின் துறக்கச் சிந்தனையை வலியுறுத்திப் பாடியுள்ளமை இப்பாடலால் தெளிவாகின்றது.

புலவர்பாடும் புகழுடையோர் வலவனேவா
வானவூர்தியேறித் துறக்கம் செல்வரென்பதும்,
திங்கள் உலகில் உயிர்கள் பிறத்தலும் இறத்தலும்
வளர்தலும் தேய்தலும் அறியா மடவோரும்
அறியக்காட்டுமென்பதும் அறமும் பொருளும்
இன்பமும் செய்தல் அறத்தின் பயனென்பதும்,
நாடகமேயுலகம் என்பதும் இவருடைய
புலமைப் பண்பை நன்கு விளக்குகின் றன.[12]

புலவர், வலவனேவா வானவூர்தி பெறுவர் என்று பாடியுள்ளாரன்றி எவரும் வானவூர்தியில் சென்றதாகப் பாடவில்லை. இதற்குச் சிலப்பதிகாரக் கண்ணகி சான்றாக அமைவது குறிப்பிடத்தக்கது.

**கடியலூர் உருத்திரங் கண்ணனார்**

பத்துப்பாட்டு நூல்களுள் பெரும்பாணாற்றுப்படையும், பட்டினப்பாலையும் கடியலூர் உருத்திரங்கண்ணனாரால் பாடப்பெற்றவை. தொண்டைமான் இளந்திரையனைப் பாடிய பெரும்பாணாற்றுப் படையிலும், சோழன் கரிகால் பெருவளத்தானைப் பாடிய பட்டினப்பாலையிலும் இயற்கையழகினைப் புகழ்ந்துரைக்குமுகத்தான் துறக்கத்தினைப் பாடியுள்ளார்.

தொண்டைமான் இளந்திரையனிடம் பரிசில் பெற்ற பாணனொருவன் தம்மைப் போன்ற மற்றொரு பாணனை ஆற்றுப்படுத்துகின்றான். மன்னனைக் காண்பதற்கு முன் திருமால் உறையும் திருவெஃகா புகழ்ந்துரைக்கப்படுகின்றது.

சுறவுவா யமைத்த கரும்புசூழ் சுடர்நுத
னறவுபெயர்த் தமைத்த நல்லெழின் மழைக்கண்
மடவரன் மகளிரொடு பகல்விளையாடிப்
பெறற்கருந் தொல்சீர்த் துறக்க மேய்க்கும்
பொய்யா மரபிற் பூமலி பெருந்துறைச்

(பெரும்.385:389)

திருவெஃகாவின் பூம்பொழிலும் நீர்த்துறையும் துறக்கத்தைப் போன்ற இன்பம் தரக்கூடியது; அங்குத் துன்பமில்லை என்பதால் துறக்கமேய்க்கும் என்றார் புலவர். இதற்குத்,

துறை, நுகர் பொருள் குறைவின்மையின்
துறக்கம் ஏய்க்கும் என்றார்.[13]

என்று உரைவிளக்கம் செய்வர். தேவருலக இன்பம் திருவெஃகாவில் இருப்பதாகப் பாடியிருப்பது போன்று காவிரிப்பூம்பட்டினத்திலும் இருப்பதாகப் பாடியுள்ளமை போற்றத்தக்கது.

மாசுபோகப் புனல்படிந்து
மலவனாட்டியு முரவுத்திரை யுழக்கியும்
பாவை சூழ்ந்தும் பல்பொறி மருண்டும்
அகலாக் காதலொடு பகல் விளையாடிப்
பெறற்கருந் தொல்சீர்த் துறக்க மேய்க்கும்
பொய்யா மரபிற் பூமலி பெருந்துறை (பட்.100:105)

என்ற அடிகளில் பெரும்பாணாற்றுப்படை அடிகளை எடுத்தாண்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. பாடலடிகள் ஒன்றாக இருப்பினும் உரையில் வேறுபடுகின்றார் நச்சினார்க்கினியர்.

பெறுதற்கரிய பழைய தலைமையினையுடைய
சுவர்க்கத்தையொக்கும் நெடிய கால்களையுடைய
மாடத்திடத்தேயிருந்து[14]

என்று கொண்டு கூட்டிப் பொருளுரைப்பர். ஆனால் காவிரிப் பூம்பட்டினம் துறக்க உலகினைப் போன்றுள்ளது என்று பொருள் கொள்வது பொருத்தமானதாகும்.

பல்பொறி - செவிவாய் கண் மூக்கு மெய்
என்னும் ஐம்பொறி. எனவே கண்டு கேட்டு
உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புல
இன்பமும் நுகர்ந்து என்றவாறு. அப்புலன்கள்
தம் சுவைகாட்டி மருட்டுவனவாதலால்
அவற்றில் மருண்டு என்றார். அகலாக்காதல்
என்றது அக்காவிரித்துறை தரும்
இன்பத்தைச் சிறப்பித்தவாறு. இங்ஙனம்
ஐம்பொறியும் ஆரநுகரும் இன்பமுடைமையின்
காவிரித் துறையைப் 'பெறற்கரும் துறக்கம்
ஏய்க்கும்' என்றார்.[15]

கடியலூர் உருத்திரங்கண்ணனாரால் பாடப் பெற்ற இரு இடங்களும் ஒரே தன்மையிலமைந்தவை. வேறெந்தப் புலவரும் ஈரிடத்திலும் ஒரே கருத்தமைய துறக்கம் குறித்துப் பாடிலர்.

### காரிகிழார்

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரி கிழார் பாடிய பாடலில் (புறம்.6) அவனுக்கு அனைத்து உலகத்திலும் உருவும் புகழும் உண்டாகும்படி வாழ்த்துகின்றார். அவ்வுலகங்களுள் 'முப்புணர் அடுக்கு' என்பதையும் குறிப்பிடுகின்றார்.

> கீழது முப்புண ரடுக்கிய முறைமுதற்கட்டின்
> நீர்நிலை நிவப்பின் கீழும் மேலது
> ஆனிலை யுலகத் தானு மானாது
> உருவும் புகழுமாகி விரிசீர்த் (புறம்.6:5-8)

என்பன அப்பாடலடிகள். துறக்கம் பற்றிய வரையறையோ விளக்கமோ இடம் பெறாதிருப்பினும் 'முப்புணர் அடுக்கு' என்ற சொல்லாட்சி குறிப்பிடத்தக்கது. இதற்கு,

> கீழாதாகிய நிலமும் ஆகாயமும் சுவர்க்கமுமென
> மூன்றுங் கூடிய புணர்ச்சியாக அடுக்கப்பட்ட
> அடைவின்கண்[16]

என்று உரையெழுதுவர். 'ஆனிலையுலகம்' துறக்கத்திற்கும் மேற்பட்டது என்பது உரையாசிரியர்களின் கருத்து.

### குறுங்கோழியூர் கிழார்

சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறை பாதுகாத்த நாடு தேவருலகத்தை ஒக்குமென்று பிறர் சொல்லக்கேட்டுந்தானும் அதனைக் கண்ணுக்கு இனிதாகக் கண்டதாகக் குறுங்கோழியூர் கிழார் பாடுகின்றார். (புறம்.22) படைப்பெருமையால் பகைவர் உட்கும் மதிப்புடைமையின் இடங்காவாது பரந்து கிடக்கின்ற அகன்ற பாசறையுடையவன்; மாற்றரசர்

பணிந்து தந்த திறையால் தம்மை அடைந்தவருடைய சுற்றத்தை நிறைக்கும் உயர்ந்த கொல்லிமலைக்குத் தலைவன். அவன் மடிமையில்லாதவன்; ஆகையால் வேற்றுநாட்டின்கண் சென்றுவிடும் படையுடனே சோறுண்டாக நடப்பை என்பதால் அவன் பாதுகாத்த நாடு தேவருலகிற்கு ஒப்பாயிற்று.

> இச்சேரமான் மடிமையின்றி முயல்வதே
> பொருளாகவுடையன்; அதனால் நாடு சோறு
> வளம் மிக்கது; செல்வப் படைப்பும்
> மிகுந்துளது; இவனது காவல் நலம் கண்ட
> சான்றோர் 'மாந்தரஞ் சேரல் இரும்பொறை
> ஓம்பிய நாடு புத்தேளுலகத் தற்று' என
> மீக்கூறுகின்றனர். தன்னைப் பாடிய புலவர்
> பிறர்பாற் சென்று அவ்வரிசையினைப் (புகழ்)
> பாடாவாறு பெருங்கொடை நல்குவன்
> என்றும், இத்தகைய சிறப்பைக் கேட்டுத்
> தாம் வந்து கண்டு மகிழ்வுற்றதாகவும் கூறுகின்றார்.[17]

இங்கு மன்னனின் ஆட்சித் திறமை போற்றப்படுகின்றது. நல்லது செய்தார்க்கு இன்பம் தரக்கூடியது துறக்கவுலகம்; அனைவருக்கும் பசி, பிணி முதலியனவின்றி மாந்தரஞ் சேரலிரும் பொறையால் பாதுகாக்கப் பெற்ற நாடு சோழநாடு. ஆகவே இந்நாட்டைத் தேவருலகிற்கு ஒப்புமைப்படுத்துகின்றார் குறுங்கோழியார் கிழார்.

**கோப்பெருஞ்சோழனும் புல்லாற்றூர் எயிற்றியனாரும்**

மக்கள் மீது போர் தொடுக்க நின்ற கோப்பெருஞ்சோழனிடம், புல்லாற்றூர் எயிற்றியனார், போரில் வெற்றி பெற்று மறுமையுலகம்

எய்துவதனினும் போரைத் தவிர்த்து வானோருலகத்து மேலோருவப்ப அறம்புரிவதே கடன் என்றும் அதனைச் செய்க என்றும் கூறுகின்றார் (புறம்.213).

பரந்துபடு நல்லிசை யெய்தி மற்றுநீ
உயர்ந் தோருலக மெய்திப் பின்னும்
ஒழித்த தாய மவர்க்குரித் தன்றே (புறம்.213:9-11)

என்பதில் வீர மரணம் தேவருலகத்தைக் கொடுக்கவல்லது என்ற கருத்து சுட்டப்பெறுகின்றது. இருப்பினும் உனக்குப் பிறகு உன் தாயம் பிறர்க்குரியதாகிவிடும் என்பதால் போரைக் கைவிடுமாறும் மக்களுக்கு நல்லது செய்யினும் அரும் பெறலுலகத்தில் இடனுண்டு என்றும் அறிவுறுத்துகின்றார். இதனால் மனம் மாற்றமடைந்த கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்து உயிர்துறக்க விரும்பி மக்களுக்கு ஆற்றிய உரையாக அமைந்த பாடல் சிறப்புமிக்கது (புறம்.214). தொய்யாவுலகச் சிந்தனை இல்லார் இவ்வுலகப் புகழ் கருதியேனும் நல்வினை ஆற்ற வேண்டும் என்பது கோப்பெருஞ்சோழனின் எண்ணம். இறந்த பிறகு இன்பமோ வீடுபேறோ கிடைக்குமா? என்று மனம் தடுமாறுவோருக்கு உண்மையை உரைக்கும் முகமாக அமைந்தது இப்பாடல்.

நல்வினையால் பயனுண்டா என்றும் அதற்கு
வெறும் பரிசாகக் கிடைக்குமாவென்றும்
விண்ணுலகம் என்பது வெறும்
கற்பனையாக இருக்கலாமோவென்றும்
பலபிறவிகள் இல்லாது இப்பிறவியோடு
எல்லாம் முடிந்து போகலாமென்றும் இறப்பிற்குப்
பின் என்ன நேருமென்று உறுதியாகத்

தெரியவில்லையென்றும் மனம் தடுமாறுவார்
இவ்வுலகப் புகழ் கருதியேனும் நல்லன செய்தல்
வேண்டும் எனும் அரிய கருத்தைத் தருவது இப்பாடல்.[18]

நாட்டிற்கு மன்னனாக இருந்தபோதிலும் புலவரது அறிவுரையைக் கேட்டுக் கோப்பெருஞ்சோழன் வீரப்போர் புரிந்து துறக்கம் பெறுதலை விரும்பாமையும் நல்லது செய்தலை நோக்கமாகக் கொண்டமையும் இப்பாடலால் புலனாகின்றது. இதனால் சங்ககாலத்தில் புலவர்களுக்கு மன்னர்களிடம் இருந்த மதிப்புப் புலனாகின்றது.

**சாத்தந்தையார்**

சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளி கரந்தைப் போருடற்ற வேண்டிய சூழல் ஏற்பட்ட போது தான் தலைவனாக நின்று தானைவீரர்க்கு ஆற்றிய உரையினைச் சாத்தந்தையார் தாம் கேட்டதாகப் பாடுகின்றார். (புறம்.287). 'அன்பு தைப்பினும் வேல்வந்து பாயினும் களிறுகள் கோடு கொண்டு தாக்கினும் அஞ்சிப் பிறக்கிட்டு ஓடாமையே மறவர்க்குப் பீடு தருவதாம். அத்தகைய பீடுடையோருக்கு, வேந்தனால் மருதநிலத்து ஊர்கள் தரப்பெறுவது உண்மை. ஆயினும் அவர்கள் தண்ணடை பெறுவதிலும் போரில் உயிர் கொடுத்துப் புகழ்பெறுதலை மதிப்பாக எண்ணுவர். மேலும் அங்ஙனம் புகழ்பெற்றோர் மறுமையில் உயர்நிலையுலகம் சென்று அங்குள்ள உயர்நிலை மகளிரை மணந்து பேரின்பம் நுகர்வர்; அதனால் அவ்வின்பம் பெறுவது குறித்து நிரை கவர்ந்து குறும்பு செய்யும் வெட்சி வேந்தன் தானை வருவதனை இங்கு நின்றும் காண்பீராக' என்று அவனுடைய நீண்மொழியினை விளக்குவர் புலவர். தேவ மகளிரை மணந்தசெய்தியினை,

மாசின் மகளிர் மன்ற னன்றும்

உயர்நிலை யுலகத்து நுகர்ப வதனால் (புறம்.287:11-12)

என்ற பாடலடிகள் தெளிவுறுத்தும். இவ்வழக்கம் தொன்று தொட்டு இருந்து வந்ததென்பதனை,

> போர்க்களத்து உயிர் கொடுக்கும் மறவர்
> துறக்கவுலகடைந்து தேவ மகளிரை
> மணந்து இன்புறுவரென்பது பண்டையோர்
> கொள்கை, அதனால், 'உயர்நிலையுலகத்து நுகர்ப'
> என்றார்; பிறரும்; 'தம் மனைவியர்,
> தம் பிணந்தழீஇ நொந்து கலுழ்ந்திரங்கவும்
> புதுவது புனைந்த மகளிர்க்கு, வதுவை
> சூட்டிய வான் படர்ந்தனரே' (புறத்:1354)
> என்பது காண்க[19]

என்ற கூற்றால் அறியலாகின்றது. துறக்கவுலகில் பெறக் கூடிய இன்பத்தைக் குறித்திருப்பது புலவரின் நுண்மாண் நுழைபுலத்தினைக் காட்டுகிறது.

**செல்லூர்க் கோசிகன் கண்ணனார்**

இவர் பாடலில் (அகம்.66) மறுமையுலகின் பெருமை பேசப்படுகின்றது. பரத்தையிற் பிரிந்த தலைமகற்கு வாயிலாகப் புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லிய துறையிலமைந்தது இப்பாடல். மக்கட்பேறுடையோர்க்கு மறுமையுலகம் உண்டென்பதை விளக்கும் முகமாக இப்பாடலைப் பாடியுள்ளார் புலவர். தலைவி, தோழியிடம் பின்வருமாறு உரைக்கின்றாள்; 'தோழியே! நம் தலைவர் பரத்தை

ஒருத்தியுடன், மணங்கொள்ள விரும்பி இத்தெருவழியே வந்தார். அப்போது அவர் தம் மகன் தெருவில் ஓடிவர அவனைக் கண்டு தேரினின்று இறங்கினார். புதல்வனை 'வீட்டுக்குச் செல்' என்றார். ஆனால் மகன் உடன்படவில்லை. எனவே அவர்தம் மகனுடன் வீட்டுக்குள் வந்தார். நான் மகனை அடிக்கக் கோலுடன் சென்றேன். அவர், தம் மகனை அணைத்துக் கொண்டார். அப்போது அவர் மணம் செய்து கொள்ளும் பொருட்டாகப் பரத்தையர் இல்லத்தில் இசை எழுந்தது. அதைக் கேட்ட பின்பும், முன்நாள் நமக்கு அவர் செய்த சூளுரை வருத்திட மணத்தைக் கைவிட்டார் அல்லரோ! ஆகவே மகவைப் பெற்றவர் இவ்வுலகத்தில் புகழுடன் விளங்கி மறுமையுலகத்தையும் எய்துவர் என்பது மெய்யானது' என்று தலைவி கூறுகின்றாள். மறுமையுலகக் கோட்பாட்டில் புலவருக்கிருந்த நம்பிக்கையினை இப்பாடல் தெளிவுபடுத்துகின்றது.

***தாயங்கண்ணனார்***

பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்திய துறையிலமைந்த பாடலில் (அகம்.213) தலைவனின் பண்புநலன் பேசப்படுகிறது. தீயின் வெம்மை மிக்க அரிய காடுகள் செறிந்த நெடுந்தொலைவிற்கு நம்மைப் பிரிந்து போதலைத் தலைவர் துணிந்தாராயினும்,

வெல்போர் வானவன் கொல்லிக் குடவரை
வேயொழுக் கன்ன சாயிறைப் பணைத்தோட்
பெருங்கவின் சிதைய நீங்கி ஆன்றோர்
சென்றுதாம் நீடலோ இலரே (அகம்.213:15-19)

என்று தலைவியைத் தோழி ஆற்றுகின்றாள். தேவரமிழ்தம் கிடைத்தற்கரியது; அத்தகைய தேவருலகும், அமிழ்தமும் பெறுவதாயினும் அதற்காகக் காலம் கழிக்காது விரைந்து தலைவன் வந்து விடுவான் என்கிறார் தாயங்கண்ணனார். தேவரமிழ்தினும் தலைவி இனிமையுடையவள் என்று பாடியிருப்பது புலவரின் அகப்பாடல் திறனை வெளிப்படுத்துகிறது. சோழநாட்டுப் புலவராகிய தாயங்கண்ணனார் சேரநாட்டு மூங்கிலைத் தலைவியின் தோள்களுக்கு உவமித்துள்ளமை அவரது பன்னாட்டு அறிவைப் புலப்படுத்துகின்றது.

### தும்பி சொகினனார்

கணவனை இழந்த ஒருத்தியின் கைம்மை நோன்பு குறித்த பாடல் (புறம்.249) தும்பி சொகினனாரால் பாடப்பெற்றது.

கதிர்மூக் காரல் கீழ்ச்சேற் றொளிப்பக்
கணைக் கோட்டு வாளை மீநீர்ப்பிறழ
எரிப்பூம் பழன நெரித்துடன் வலைஞர்
அரிக்குரற் றடாரியின் யாமை மிளிரப்
பனைநுகும் பன்ன சினைமுதிர் வராலொ
டுறழ்வே லன்ன வெண்கயன் முகக்கும்
அகனாட் டண்ணல் புகாவே நெருநைப்
பகலிடம் கண்ணிப் பலரொடுங் கூடி
ஒருவழிப்பட்டன்று (புறம்.249:1-9)

என்பதில் அத்தலைவனது நாட்டுவளம் பேசப்படுகின்றது. அவன் உயிர் வாழ்ந்தபோது பலரும் உண்ணும் பரந்த இடமாயிருந்தது: அவன் தேவருலகம் சென்றதால் அவன் மனைவி தன் கண்ணீரால் ஆவின் சாணம் கொண்டு மெழுகும் சிறிய இடமாயிற்று என்று இரங்கிப்

பாடுகின்றார். உடன்கட்டையேறும் பெண்டிர் ஒருபுறமிருக்க, இங்குக் கைம்மை நோன்பு மேற்கொள்ளும் மனைவியின் நிலையும் மேலோருலகம் சென்றவனின் புகழும் கூறப்பெற்றுள்ளது.

***மாமூலனார்***

சோழ நாட்டுப் புலவரான மாமூலனார் அகநானூற்றில் துறக்கம் பற்றிப் பாடிய மூன்று பாடல்களும் (அகம். 55,61,233) பாலைத் திணையிலமைந்தவை. 'புணர்ந்துடன் போன தலைமகட்கு இரங்கிய தாய் தெருட்டும் அயலிலாட்டியர்க்கு உரைத்த துறையிலமைந்த பாடல் சேரலாதனின் வரலாற்றைக் குறிக்கிறது. கரிகால் வளவனொடு பெருஞ்சேரலாதன் போரிட்டுப் புறப்புண்ணிற்கு வருந்தி வடக்கிருந்து உயிர் துறந்தமையும் அவனோடு சான்றோர் பலரும் அரும்பெறல் உலகம் சென்றமையும் இதில் பாடப்பெற்றுள்ளன. (அகம்.55). சேரலாதன் வடக்கிருந்த செய்தி புறநானூற்றுப் பாடல்களிலும் (புறம்.65,66) இடம் பெற்றிருப்பினும் அவன் துறக்கம் சேர்ந்ததாக மாமூலனார் மட்டுமே குறிக்கிறார்.

வடக்கிருந்து துறக்கம் போந்தமைக்குச் சோழநாட்டுப் புலவரான மாமூலனார் கோப்பெருஞ்சோழனைச் சான்று காட்டாது புறப்புண்ணிற்காக நாணி வடக்கிருந்து உயிர் துறந்த சேரலாதனை எடுத்தாண்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. தான் பெற்ற பிள்ளைகளின் செயலுக்காக வருந்தி வடக்கிருந்த தன் நாட்டு மன்னனைக் காட்டிலும், நாட்டிற்காகப் போராடி மார்பில் தைத்த அம்பு முதுகில் ஊடுருவியதற்காக மானம் பொறாது வடக்கிருந்த சேரலாதனின் சிறப்புக் கருதி மாமூலனார் சேரலாதனைப் பாடியுள்ளார்.

இப்பாடலைப் போன்று, தலைமகன் பொருள்வயின் பிரிய, வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லிய துறையிலமைந்த பாடலிலும் (அகம்.61) பிறர்நலன் பொருட்டுப் போரிட்டு உயிர் துறந்தவன் தவமுடையோர் செல்லும் வாராசேட்புலம் சென்றதாகப் பாடுகின்றார். மாமூலனார் சேரநாட்டு வேந்தனைப் போற்றித் துறக்கம் பாடியமைக்கு மற்றொரு அகப்பாடல் (அகம். 233) சான்றாகின்றது.

மறப்படைக் குதிரை மாறா மைந்தின்
துறக்கம் எய்திய தொய்யா நல்லிசை
முதியர்ப் பேணிய உதியஞ் சேரல்
பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை இரும்பல்
கூளிச்சுற்றங் குழீஇயிருந் தாங்குக் (அகம். 233:6-10)

என்பதில் புறக்கிடாத வலிமையால் துறக்கம் சேர்ந்த புகழ்மிக்க முன்னோர்களுக்கு உதியஞ்சேரல் பெருஞ்சோறு படைத்தமை கூறப்பட்டுள்ளது. வீரப்போருடற்றித் துறக்கம் அடைந்தவர்களை மாமூலனார் தம் பாடல்களில் எடுத்தாண்டுள்ளமையால் அவர் துறக்கம் செல்லும் நெறியாக வீரத்தினைப் போற்றியமை புலனாகின்றது. தன் நாட்டு வேந்தர்களும் வீரர்களும் மக்களும் துறக்கம் சென்றதைப் பாடாது சேரநாட்டு வேந்தர்களைப் பாடியுள்ளமை சிறப்பிற்குரியது.

**வடமோதங்கிழார்**

நிரைமீட்டலின் போது பகைவர் அம்பு மார்பில் தைத்து இறந்த தலைமகன் அரிது செல்லுலகம் சென்றதாகப் பாடுகின்றார் புலவர் (புறம்.260). அவன் உயிர் வாழ்ந்த காலத்தில் பாணர்க்கும் புலவர்க்கும் நிலனும் பொருளும் வழங்கிப் புகழ்பெற்றவன்; ஆகையால் ஒரு பாணன் அவனை நாடி வர அதனைக் கண்ட மற்றொரு பாணன் அவன்

மேலுலகம் சென்றமையை மொழிகின்றான். இனி நீ அவன் நமக்கு விட்ட விளைநிலங்களைக் கைப்பற்றி உண்பாயாயினும், அன்றி அவனோடு கூடி இன்புற்றிருந்தவிடத்து அவனையன்றி உயிர் வாழ்தற்பொருட்டு இரக்கக்கடவோம் என்றெழுந்திருந்து வருத்தங் கொள்வாயாயினும் இரண்டும் நினது கையகத்துள்ளன என்று ஆற்றுப்படுத்துகின்றான். இறந்தவனின் உயிர் மேலுலகம் செல்ல அவனுடைய உடம்பு காட்டிலுள்ள சிற்றியாற்றின் அரிய கரையிடத்து காலுற நின்று நடுக்கத்தோடு காய்ந்த இலக்கத்தினைப் போன்று அம்பாற் சலித்து அவ்விடத்து வீழ்ந்தது. உயர்ந்த கீர்த்தி மிகவும் தோன்றிய அவனது பெயர், மென்மையமைந்த மயிலினது அழகிய மயிராகிய பீலியைச் சூட்ட பிறர் இடங்கொள்ளப்படாத சிறிய இடத்தில்புடவையாற் செய்யப்பட்ட பந்தர்க்கீழ் நட்டகல்லின் மேலுள்ளது என்று குறிப்பிடுகின்றார். இறந்தவனுக்கு எழுப்பப்பெற்ற நடுகல் அவனது புகழைப் பறைசாற்றுகின்றது.

## சோழ நாட்டுப் புலவர்களும் அவர்தம் சொல்லாட்சித் திறனும்

| வ. எண் | புலவர் பெயர் | துறக்கம் குறித்த சொல்லாட்சி | பா. எண் |
|---|---|---|---|
| 1. | ஆவூர் மூலங்கிழார் | 1) பொலம்பூங்காவின் நன்னாட்டோர். 2) ஆண்டு | புறம்.38 |
| 2. | உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் | 1. மறுமை<br>2. நெடியோன்கோயில் | புறம்.134<br>புறம்.241 |
| 3. | உறையூர் முதுகண்ணன் சாத்தனார் | விசும்பின் வலவனேவாவானவூர்தி | புறம்.27 |
| 4. | ஐயூர் முடவனார் | தேவருலகம் | புறம்.228 |
| 5. | கடியலூர் உருத்திரங் கண்ணனார் | துறக்கம் | பெரும்.388<br>பட்.104 |
| 6. | காரிகிழார் | 1.முப்புணர் அடுக்கு,<br>2.ஆனிலை உலகம் | புறம்.6 |
| 7. | குறுங்கோழியூர்கிழார் | புத்தேளுலகம் | புறம்.22 |
| 8. | கோப்பெருஞ்சோழன் | தொய்யாவுலகம் | புறம்.214 |
| 9. | சாத்தந்தையார் | உயர்நிலையுலகம் | புறம்.287 |
| 10. | செல்லூர்க் கோசிகன் கண்ணனார் | மறுமையுலகம் | அகம்.66 |
| 11. | தாயங்கண்ணனார் | அரும்பெறல் உலகம் | அகம்.213 |
| 12. | தும்பி சொகினனார் | உயர்நிலையுலகம் | புறம்.249 |
| 13. | புல்லாற்றூர் எயிற்றியனார் | அரும்பெறல் உலகம் | புறம்.213 |
| 14. | மாமூலனார் | 1.துறக்கம்<br>2.அரும்பெறல் உலகம் | அகம்.233<br>அகம்.55 |
| 15. | வடமோதங்கிழார் | அரிது செல்லுலகம் | புறம். 260 |

சோழநாட்டுப் புலவர்கள் சொல்லாட்சித் திறம் மிக்கவர்கள் என்பதனை மேற்குறித்த அட்டவணை விளக்குகிறது. இவர்கள் சேர நாட்டையும், சேரநாட்டு வேந்தர்களையும், பாண்டிய மன்னர்களையும், போற்றியும் புகழ்ந்தும் பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது.

1. இறந்தவர்களின் பெருமையினைப் பாடுதல்; அவர்தம் மனைவியர் கைம்மை நோன்பிருந்த காட்சியைப் புலப்படுத்துதல்.

2. இறந்தவனுடைய நடுகல்லினைச் சிறப்பித்துப் பாடி அவனிருக்குமிடத்தை வெளிப்படுத்துவதன் வாயிலாக நடுகல் வழிபாட்டை வலியுறுத்துதல்.

3. இறந்தவர்கள் தேவ மகளிரை மணந்து பேரின்பம் பெறுவதாகப் பாடுதல்.

4. சேர, சோழ வேந்தர்களின் நாட்டினையும், இயற்கை வளத்தினையும் தேவருலகத்துக்கு ஒப்பாகக் கூறுதல்.

5. அகப்பாடல்களில் துறக்கம் சேர்ந்தவர்களின் புறச்செய்திகளையும் அவர்தம் வரலாற்றையும் எடுத்தியம்புதல்:

6. விண்ணுலகை அடைந்தமையைச் சிறப்பித்தல்.

7. தேவரமிழ்தினும் தலைவியை இன்பச் சிறப்புடையவளாகப் படைத்தல்.

8. மக்கட்பேற்றினால் துறக்கம் அடைதல் போன்ற பல்வேறு நிலைகளில் சோழ நாட்டுப் புலவர்களின் கோட்பாட்டினை வரையறுக்க இயலும்.

## பாண்டிய நாட்டுப் புலவர்களின் துறக்கக் கோட்பாடு

பாண்டிய நாட்டுப் புலவர்களால் பாடப்பெற்ற துறக்கப் பாடல்களில் பரிபாடல் குறிப்பிடத்தக்கது. மிகுதியான புலவர்கள் பரிபாடலில் பாடியுள்ளனர். சொகுத்தனார் நீங்கலாக ஏனைய புலவர்கள் துறக்கம் பாடியுள்ளனர்.

### குடபுலவியனார்

பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு அறிவுறுத்துவதாகக் குடபுலவியனார் பாடிய பாடலில் (புறம்.18) துறக்கக் குறிப்பு அமைந்துள்ளது. மக்களைப் பாதுகாக்கும் மன்னன் இவ்வுலகில் மட்டுமன்றி மறுமையுலகினும் நற்பயனடைதல் வேண்டும் என்ற எண்ணம் புலவருக்கிருந்தமையினைச்,

செல்லும் உலகத்துச் செல்வம் வேண்டினும்
ஞாலங் காவலர் தோள்வலி முருக்கி
ஒருநீ யாகல் வேண்டினுஞ் சிறந்த
தகுதி கேளினி மிகுதி யாள
நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே

(புறம்.18:13-19)

என்ற பாடலடிகள் தெளிவுறுத்துகின்றன. உணவு கொடுத்தோர் உயிர் கொடுத்தோராவார். உணவை முதலாகவுடைத்து அவ்வுணவாலான உடம்பு; ஆதலின் உணவென்று சொல்லப்படுவது நிலத்தொடு கூடிய நீரினையாகும். அந்நீரையும் நிலத்தையும் ஒருவழிக் கூட்டினவர்கள் செல்லும் உலகத்துச் செல்வமும், உலகத்திற்குத் தலைவனாதலும், சிறந்த புகழ் பெறுதலும் ஆகிய மூன்றினையும் பெறுவர்; ஆகையால் நீர்நிலை

உண்டுபண்ணுமாறு பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு, அறிவுறுத்துகின்றார் குடபுலவியனார். புலவர் 'செல்லும் உலகம்' என்று பாடியிருப்பது மறுமையுலகத்தினைக் குறிக்கின்றது.

இருந்து ஆளும் உலகம் நிலவுலகமாதலால்
செல்லும் உலகம் மறுமையுலகமாயிற்று[20]

என்ற கூற்று ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது. அரசனுக்குக் கோபம் ஏற்படாதவாறு அறநெறிகளை எடுத்தியம்பும் திறன் சங்கப் புலவர்களுக்கிருந்தமை இப்பாடலால் புலனாகின்றது.

## கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி

பாண்டிய மன்னனாகிய இவன் இவ்வுலகம் நிலைத்திருக்கக் காரணம் யாதென மொழிகிறான்.

உண்டா லம்மவிவ் வுலக மிந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினு மினிதெனத்
தமிய ருண்டலு மிலரே முனிவிலர்
துஞ்சலும் இலர்பிறர் அஞ்சுவது அஞ்சிப்
பழியெனின் உயிரும் கொடுக்குவர் புகழெனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர் (புறம். 182)

என்பது பாட்டு. இந்திரர்க்குரிய அமிழ்தம் கிடைப்பதாயினும் அதனை இனிதாகக் கருதித் தனித்து உண்ண விரும்பாதவரும் இவ்வுலகில் வாழ்கின்றனர் என்பது இம்மன்னனின் எண்ணம். இதனால் பெறலருஞ் சிறப்புடையது தேவரமிழ்தம் என்ற கருத்துப் புலனாகின்றது.

தமக்கென முயலாத பிறர்க்கென முயலும்
பெரியோர் உளராதலால் இவ்வுலகம் உளது;
இன்றேல், இது மண்புக்கு மாயும் என்ற

கருத்தால், "த மக்கென வாழாப் பிறர்க்குரியாளர்,
இந்திரர் அமிழ்தம் கிடைப்பதாயினும் அதனைத்
தமித்திருந்துண்ணார்; யாரையும் வெறார்"[21]

இந்திரர் அமிழ்தத்தினும் பிறர்நலம் பேணும் பெருந்தகையாளரைப் போற்றுகின்றான் இளம்பெருவழுதி. தேவரமிழ்தம் பெறுவதற்கு இன்ன அறம் செய்க என்று வலியுறுத்துவது ஒருபுறமிருக்க, அவ்வமிழ்தம் கிடைப்பினும் யாரையும் வெறுத்துத் தமித்திருந்து உண்ணார் என்ற சிந்தனையும் சங்க காலத்தில் இருந்தது. சங்ககால மன்னர்களிடமும் தேவருலகச் சிந்தனை இருந்தமை இதனால் புலனாகிறது.

**கபிலர்**

செல்வக்கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாடிய இரண்டு பாடல்கள் துறக்கச் சிந்தனையிலமைந்தவை (பதிற்.61,71). புலாம் பாசறையில் அமைந்த பாடல் (61) பாரி இறந்த நிகழ்ச்சியைக் குறிப்பிடுகின்றது.

புலர்ந்த சாந்திற் புலரா வீகை
மலர்ந்த மார்பின் மாவண்பாரி
முழுவுமண் புலர விரவல ரினைய
வாரா சேட்புலம் படர்ந்தோ னளிக்கென (பதிற். 61:7-10)

என்பதில் 'வாராசேட்புலம்' குறிப்பிடப் பெற்றுள்ளது. பாட்டுடைத் தலைவனாகச் செல்வக்கடுங்கோ இருந்தபோதிலும் கபிலருக்குக் கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய பாரியைப் புகழாமல் இருக்க மனம் இடந்தரவில்லை. அவன் இறப்பிற்காக இரங்கிப் பாடுகின்றார்.

ஏழாம் பத்திலமைந்த இவரது மற்றொரு பாடல் (பதிற்.70) பறைக்குரல் அருவியிலமைந்தது.

தொலையாக் கொள்கை சுற்றம் சுற்ற
வேள்வியிற் கடவுளருத்தினை கேள்வி
உயர்நிலை யுலகத்தையரின் புறுத்தினை

(பதிற்.70:17-19)

என்பது பாட்டு. உயர்நிலையுலகத்தில் வாழ்பவர்களை இன்புறச் செய்ததாகச் செல்வக் கடுங்கோவை வாழ்த்துகின்றார் கபிலர். இங்குச் சுட்டப்பெறும் 'உயர்நிலையுலகத்து ஐயர்' என்பதற்கு,

அவருடைய ஒழுகலாற்றையும் போர்த்திறனையும்
புலவர் பாட, பாணர் இசைக்க, கூத்தர்
கூத்தியற்றக் கண்டும் கேட்டும் சிறப்பித்தலால்
அவர் இன்புறுவர் என்ற கருத்தால்,
"கேள்வியின் உயர்நிலையுலகத்தையர்
இன்புறுத்தினை" என்றார். இக்கொள்கை
பத்தாம் நூற்றாண்டிலும் இருந்து வந்தது
என்றற்குத் திருத்தக்கதேவர் எழுதிய
சீவக சிந்தாமணி சான்று பகர்கின்றது.[22]

என்று வீர மரணம் எய்திய சிறப்புடையோரைக் குறிப்பதாக விளக்[illegible] வர் இக்கருத்திற்கு முரணாக,

வேதத்தை ஓதினமையால் உயர்ந்த
நிலையையுடைய தேவருலகத்திலுள்ள
முனிவரை இன்புறச் செய்தாய்[23]

என்று கூறுவர். இக்கருத்தினை நோக்கும்போது தேவருலகத்தில் வாழ்வோருக்குப் பண்டைக் காலத்தில் விழா எடுத்தசெய்தி பெறலாகின்றது. தேவருலகத்தில் தேவர்கள் தவிர வீரமரணம் எய்துவோரும் வாழ்கின்றனராதலால் அனைவருக்குமாக அவ்விழா எடுக்கப்பட்டிருத்தல் வேண்டும்.

மேலும் குறிஞ்சித் திணையிலமைந்த குறுந்தொகைப் பாடல்களும் (குறுந். 288,361) கபிலரின் துறக்கச் சிந்தனைக்குச் சான்றாகின்றன.

கறிவளர் அடுக்கத்து ஆங்கண் முறிஅருந்து
குரங்கு ஒருங்கு இருக்கும் பெருங்கல்நாடன்
இனியன் ஆகலின் இனத்தின் இயன்ற
இன்னா மையினும் இனிதோ
இனிது எனப் படூஉம் புத்தேள்நாடே (குறுந்.288)

என்பதில் துறக்கவுலகம் 'புத்தேள் நாடாகச்' சித்தரிக்கப்பட்டுள்ளது. தலைமகனது வரவு உணர்ந்து 'நம்பெருமான் நமக்கு அன்பிலன் என்ற தோழிக்குத், 'தலைவன் எப்பொழுதும் நமக்கு இனியன் ; தலைவன் பிரிந்து துன்பம்தரினும், இனிது என்று போற்றியுரைக்கப்படும் தேவருலகம் இனிமையுடையதன்று' என்று கூறுகின்றாள் தலைவி.

புத்தேள் நாடு என்றும் ஒருபடித்தான இன்பம்
நல்குவது ; தலைவன் பிரிந்ததனால் வரும்
துன்பத்தின் பின் அவனுடன் கூடுகின்ற காலத்து
இன்பம் மிகுதியாம். ஆதலின் புத்தேள் நாட்டு
இன்பத்தினும் இனிது எனப்பட்டது[24]

அகத்தில் காதல் இன்பமே பெரிதாகப் பேசப்படுவதால் தேவருலக இன்பம் மதிக்கப்படவில்லை. கபிலரது மற்றொரு பாடல் (குறுந். 36)

தலைவனுடன் வரைவு மேற்கொள்ள இசைவளித்த அன்னைக்கு உயர்நிலையுலகம் கைம்மாறாகக் கிடைப்பினும் சிறிதாகும் என்று தலைவி தன் தாயைப் பெருமிதத்தோடு போற்றுகின்றாள்.

அம்ம வாழி தோழி அன்னைக்கு
உயர்நிலை உலகமும் சிறிதால் அவர்மலை
மலைப்பெய்த மணம்கமழ் உந்தியொடு
காலை வந்த முழுமுதற் காந்தள்
மெல்இலை குழைய முயங்கலும்
இல்உய்த்து நடுதலும் கடியா தோளே (குறுந். 361)

என்பது அப்பாட்டு. தேவருலகத்தை அவமதித்தலும் உயர்வாகப் போற்றலும் ஆகிய இருவேறு நிலைகளில் கபிலர் பாடியுள்ளமை இடத்திற்கேற்பத் துறக்கச் சிந்தனை மாற்றம் பெறுவதை வெளிப்படுத்துகின்றது.

### மாறோக்கத்து நப்பசலையார்

மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணனைப் பாடும் நப்பசலையார் அவன் முன்னோர் உயர்நிலையுலகம் சென்றமையினைக் குறித்துள்ளார். (புறம்.174)வரை முழைஞ்சில் வாழும் புலியையெழுதப்பட்ட இலாஞ்சனையையுடைய கோட்டையையும், விளங்குதலுடைய அணிகலத்தினையும், வண்டார்க்கப்பட்ட கண்ணியையும், பெரிய புகழினையுமுடைய நும் முன்னாகிய தந்தை, இவ்வுலகத்துச் செய்யப்பட்ட நல்லறத்தின் பயனைத் தெய்வலோகத்துப் போய் நுகரவேண்டிப் போனானாதலின், கவலையுற்ற மனத்தின் வருத்தம்கெட நீ வந்து தோன்றினாய் என்று பாடுகின்றார். கோடை வெப்பத்தைத் தணிக்கும் பெருமழை போல மலையமான் சோழிய ஏனாதி

திருக்கண்ணன் தோன்றியதாக உவமித்திருப்பது மன்னன் மீது புலவருக்கிருந்த ஈடுபாட்டைப் புலப்படுத்துகிறது.

**நக்கீரர்:**

பத்துப்பாட்டுள் திருமுருகாற்றுப் படையும் நெடுநல்வாடையும் இவரால் பாடப் பெற்றவை. இவற்றுள் துறக்கம் குறித்த சொல்லாட்சி இடம் பெறவில்லை; இருப்பினும் திருமுருகாற்றுப்படைக்கு,

வீடு பெறுதற்குச் சமைந்தானோர் இரவலனை
வீடு பெற்றானொருவன் முருகனிடத்தே
ஆற்றுப்படுத்த தென்று பொருள் கூறுக[25]

என்று துறைக்குறிப்பு வரைந்துள்ளமையால் வீட்டுநெறிக்கண் செல்ல அறிவுறுத்துவதாகத் திருமுருகாற்றுப்படையினைக் கருத முடிகின்றது.

இருணிற முந்நீர் வளைஇய வுலகத்
தொருநீ யாகித் தோன்ற **விழுமிய**
**பெறலரும் பரிசி லல்குமதி** (திருமு. )

என்ற அடிகளுக்கு,

சீரிய பிறராற் பெறுதற்கரிய
வீடுபேற்றினைத் தருவன்[26]

என்று பொருளுரைப்பதும் அரண் சேர்க்கின்றது.

**நல்லந்துவனார்**

கலித்தொகையில் நல்லந்துவனாரால் பாடப்பெற்ற நெய்தற்கலியில் மட்டுமே துறக்கம் பற்றி பாடல்கள் இடம்பெற்றுள்ளன (கலி.118,138,139, 143). பிரிவிடையாற்றாத தலைவி மாலைப்பொழுது கண்டு இரங்குகிறாள். ஞாயிறு தனக்குப் பகையாகிய இருளைக் கெடுத்து உலகத்திற்குப்

பகற்பொழுதை முறைமையாற் செலுத்தி மலையிலே சென்று சேர்ந்தமைக்கு, அறநெறியில் உயிர்களைக் காத்த பழவினையின் பயன் துய்க்கத் துறக்கம் சென்றமை உவமிக்கப்பட்டுள்ளது.

மற்றுமோர் தலைவி, தன் கணவன் மேலுள்ள வேட்கையால் 'இறக்கும் பெண்டிர் குற்றமில்லாத துறக்கத்தையடைவர் என்று நூல்கள் கூறியது உண்மையெனின் யானும் அவ்வாறிறக்க விரும்புவதாகக்' கூறுகின்றாள்.

ஈண்டுநீர் ஞாலத்துள் எங்கேள்வர் இல்லாயின்
மாண்டமனம் பெற்றார் ***மாசில் துறக்கத்து***
வேண்டிய வேண்டியாங் கெய்துதல் வாயெனின்
யாண்டு முடையேன் இசை (கலி.143:44-47)

என்ற அடிகளால் பெண்டிருக்குக் கிடைக்கப்பெறும் துறக்கத்தைப் புலவர் எடுத்தாண்டுள்ளமை தெளிவாகின்றது. இப்பாடலும் மாலைக்காலம் கண்டு புலம்புவதாக அமைந்திருப்பினும், தலைவி இறக்கவும் துணிகின்றாள். இறந்தாலும் தன் கணவனைப் பெறவேண்டும் என்பதில் உறுதியாயிருக்கின்றாள். இவ்விருப்பமுடைய பெண்டிருக்குத் துறக்கத்தில் இடமுண்டு என்பதனை நல்லந்துவனார் இப்பாடலில் புலப்படுத்தியுள்ளார்.

இப்புலவரது ஏனைய இரண்டு பாடல்களும் தவத்தால் துறக்கம் பெறுதலின் சிறப்பை எடுத்தியம்புவன (கலி.138,139).

அன்புறு கிளவியாள் அருளிவந் தளித்தலின்
துன்பத்திற் துணையாய மடல்இனி இவட்பெற
இன்பத்துள் இடம்பட லென்றிரங்கினள் அன்புற்

றடங்கருந் தோற்றத் தருந்தவ முயன்றோர்தம்
உடம்பொழித் துயருல கினிதுபெற் றாங்கே

(கலி.138:27-31)

என்று தலைவன் தான் மடலூர்ந்த நிலையினையும், அது கேட்ட தலைவி தன் மீது அன்பு கொண்டமையினையும் பிறர் அறியும்படியாகக் கூறுகிறான். தலைவியால் தனக்குக் கிடைத்த இன்பத்திற்கு உயர்நிலை உலகத்தை ஒப்பிடுகின்றான். கலித்தொகை 139-ஆம் பாடலில் அவ்வின்பம் பெறுமாறு என் துயரினைப் போக்குவீராக என்று சான்றோரை நோக்கிக் கூறுகிறான் தலைவன்.

என்னிடத்துச் செல்கின்ற வருத்தத்தை நீர் அறிந்தீராயிற் சான்றீராயுள்ளீர்! அமைந்த

சான்றோர் இவன் தவஞ்செய்தற்கு உரியனென்று
தவத்துள்ளே கூட்டிக் கொள்ளப்பட்ட அரசனை
அவன்றான் தவஞ்செய்தலின் நீங்கித் துறக்கத்திற்
சேறலை வழுவுகையினாலே, அவ்வழுவுதலை
அவர் மீட்டுத் தவம் செய்வித்து உயர்ந்த
நிலையையுடைய சுவர்க்கத்தே போகவிட்டுத்
துயர்தீர்த்தாற் போல, என் துயரினது
தன்மையைப் போக்குதலும் நும்மிடத்து
முறைமை எனச் சான்றோரை நோக்கிக் கூறினான்.[27]

இதனால் சான்றோர், தவம் செய்வித்தலின் வாயிலாக மக்களைத் துறக்கம் செல்ல வழிகாட்டுவர் என்ற செய்தி தெரியவருகின்றது. நல்லந்துவனாரது பாடல்கள், வினைப்பயனால் துறக்கம் பெறல், தவத்தால் துறக்கம் பெறல் என்ற பல்வேறு கருத்துகளை எடுத்தியம்புகின்றன. இவரது பாடல்கள்

அகச் சிறப்புடையவாயினும் துறக்கச்சிந்தனைகளும் சிறப்பிடம் பெறுகின்றன. பிற புலவர்களைப் போன்று உயர்வோ, இழிவோ இன்றி ஒரே தன்மையில் துறக்கம் குறித்துப் பாடியிருப்பது போற்றற்குரியது.

### கீரந்தையார்

உலகம் பற்றிய செய்திகள் பரிபாடலில் மிகுதியும் இடம் பெற்றுள்ளன. உலகங்களின் ஊழிக்காலத்தினைப்,

பசும்பொன் னுலகமும் மண்ணும் பாழ்பட
விசும்பி லூழி யூழூழ் செல்லக் (பரி.2:3-4.)

என்று பாடுவர். இங்குச் சுட்டப்பெறும் 'பசும் பொன்னுலகம்' என்பது உலகம் குறித்த செய்தியைப் புலப்படுத்துகின்றது.

### கடுவனிளவெயினனார்

இவர் 'செவ்வேள்' குறித்துப் பாடிய பாடல் (பரி.5) துறக்கம், மறுபிறப்பு ஆகியவற்றை எடுத்தியம்புவதாக அமைந்துள்ளது. தேவர்களுக்கு வேந்தன் இந்திரன்; அவனே நினக்கு மயிலைத் தந்தான்; ஆகையால் குற்றமில்லாத துறக்கத்து வாழ்வோர்க்குத் தலைவனான அவ்விந்திரனது புகழ் வரம்பினையும் நீ கடந்தவனாகின்றாய் என்று முருகனைப் புகழ்ந்து ஏத்துகிறார்.

அவரும் பிறரும் அமர்ந்து படையளித்த மறியு
மஞ்ஞையும் வாரணச் சேவலும் பொறிவரிச் சாபமும்
மரனும் வாளுஞ் செறியிலை யீட்டியுங் குடாரியுங்
கணிச்சியுந் தெறுகதிர்க் கனலியு மாலையு மணியும்
வேறுவே றுருவினிவ் வாறிரு கைக்கொண்டு மறுவி
றுறக்கத் தமரர் செல்வன்றன் பொறிவரிக் கொட்டையொடு
புகழ்வரம் பிகந்தோய் (பரி.5:63-70)

என்று பாடும் புலவர் மறுபிறப்பு இல்லை என்போரை 'மடவோர்' என்று அழைக்கின்றார். (பரி.5:76) இதனால் துறக்கக் கோட்பாடும் மறுபிறப்புக் கோட்பாடும் ஆகிய இருவேறு எண்ணங்களும் புலவருக்கிருந்தமை தெளிவாகின்றது.

**நப்பண்ணனாரும் நல்லழுசியாரும்**

செவ்வேள் பற்றிப் பாடியோருள் நல்லழுசியாரும், நப்பண்ணனாரும் குறிப்பிடத்தக்கவர்கள். முருகனைப் பாடுபொருளாகக் கொண்டிருப்பினும் துறக்கம் குறித்து இருவரிடையேயும் கருத்துவேறுபாடுகள் நிலவுகின்றன. முருகனுடைய கடம்ப மரத்தின் அடியில் உறைதலை விரும்பியோர் தேவருலகத்தில் வாழ்தலை வேண்டுவரோ? என்று வினவுகின்றார் நல்லழுசியார்.

மேம்படு மலர்குழை பூந்துகில் வடிமணி
யேந்திலை சுமந்து சாந்தம் விரைஇ
விடையரை யசைத்த வேலன் கடிமரம்
பரவின ருரையொடு பண்ணிய விசையினர்
விரிமலர் மதுவின் மரநனை குன்றத்துக்
கோலெரி கொளைநறை புகைகொடி யொருங்கெழ
மாலை மாலை யடியுறை யியைநர்
**மேலோ ருறையுளும்** வேண்டுநர், யாஅர் (பரி.17:1-8)




என்பது நல்லழுசியாரின் பாட்டு. முருகன் எழுந்தருளியிருக்கும் குன்றம் தேவருலகத்தினும் சிறப்புடையதென்பது இப்பாடலால் புலனாகின்றது. கண்ணிற்குப் புலனாகாத தேவருலகத்தினும், காண்டற்கினிய முருகன் குன்றம் துறக்கப்பேற்றைத் தரவல்ல சிறப்புடையதென்பது புலவரது எண்ணம்.

நப்பண்ணனார் பாடிய 'செவ்வேள்' (பரி.19) தேவலோகத்திலுள்ள தேவயானையை முருகன் மணந்தமையைக் குறிக்கிறது. வேறெந்தப் புலவரும் இச்செய்தியினைப் பாடிலர். இப்புலவர் பாடியுள்ள மற்றுமொரு கருத்து பிற புலவர்களுடைய சிந்தனையோடு ஒப்புநோக்கத்தக்கது.

புலத்தினும் போரினும் போர்தோலாக் கூடற்
கலப்போ டியைந்த விரவுத்தீ ரெல்லை
யறம்பெரி தாற்றி யதன்பயன் கொண்மார்
**சிறந்தோ ருலகம்** படருநர் போல (பரி.19:8-11)

இதில் அறம் பெரிதாகச் செய்தவர்கள் அதன் பயனை நுகரும் பொருட்டுச் 'சிறந்தோருலகம் செல்வர்' என்று குறிப்பிடுகின்றார். மேலோருலகம், தேவருலகம் என்று பாடாது 'சிறந்தோருலகம்' என்று பாடியிருப்பது சிறப்புமிக்கது.

**நல்வழுதியார்**

வையை ஆற்றின் புனைவிலமைந்தது நல்வழுதியார் பாட்டு. (பரி.12) கற்பகச் சோலை செறிந்த அழகுடையது துறக்கவுலகம். அவ்வழகினைத் தன் நீர்ப்பரப்பின் நிழலில் காட்டும் எழில் நிறைந்தது வையை ஆறு. இதனை,

மல்லிகை மௌவன் மணங்கமழ் சண்பக
மல்லி கழுநீ ரரவிந்த மாம்பல்
குல்லை வகுளங் குருக்கத்தி பாதிரி
நல்லிணர் நாக நறவஞ் சுரபுன்னை
யெல்லாங் கமழு மிருசார் கரைகலிழத்
தேறித் தெளிந்து செறியிருண் மான்மாலைப்

பாறைப் பரப்பிற் பரந்த சிறைநின்று
துறக்கத் தெழிலைத் தன்னீர்நிழற் காட்டுங்
காரடு காலைக் கலிழ்செங் குருதித்தே
போரடு தானையான் யாறு (பரி.12:77-86)

என்ற பாடலடிகள் தெளிவுறுத்துகின்றன. துறக்கவுலகின் எழிலைக் காண மேலுலகம் செல்ல வேண்டுமென்பதில்லை. வையை ஆற்றின் நீரோடை அவ்வழகினைக் காட்டுவதாகப் புலவர் புனைந்துரைக்கிறார். இப்புனைவின் மூலம் துறக்கவுலகத்தின் இயல்பும் தன்மையும் தெரியவருகின்றன.

**நல்லெழுநியார்**

இவர் திருமாலைப் புகழ்ந்து பாடியுள்ளார் (பரி.13). இங்குப் பாடுபொருளுக்கேற்பத் துறக்கம் இறைச்சிந்தனையோடு தொடர்புபடுத்தப் பெற்றுள்ளது. சங்கும், சக்கரமும் ஏந்திய திருமாலின் திருமார்பினைத் தொழுவோர்க்குத் துறக்கப் பேறு வாய்க்கப் பெறும். இதனை,

பருவம் வாய்த்தலின் இருவிசும் பணிந்த
விருவேறு மண்டிலத் திலக்கம் போல
நேமியும் வளையு மேந்திய கையாற்
கருவி மின்னவி ரிலங்கும் பொலம்பூ
ணருவி யுருவி னாரமொ டணிந்த நின்
றிருவரை யகலந் தொழுவோர்க்கு
உரிதமர் துறக்கமு முரிமைநன் குடைத்து (பரி.13:7-13)

என்ற பாடலடிகளில் விளக்குவர். துறக்கம் என்பது பின்னாளில் திருமாலைத் தொழுவோரால் **வைகுந்தம்** என்றழைக்கப்பெற்றது.

### இளம்பெருவழுதியார்

திருமால் புகழ் பாடியோருள் இளம்பெருவழுதியாரும் குறிப்பிடத்தக்கவர். நெடியகுன்றங்கள் பல இருப்பினும் சில சிறப்புடையன; அவற்றுள்ளும் கல்லென அறையும் கடலும் கானலும் போல வேறு வேறாகிய நிறத்தினையும் பிரிவில்லாத சொல்லும் பொருளும் போல வேறுபடாத தொழிலினையுமுடைய மாயோனையும் தம் முன்னோனையும் தாங்கும் நீண்ட நிலைமையினையுடைய புகழானுயர்ந்த திருமாலிருங்குன்றம் சிறந்தது என்று புகழ்ந்து பாடுகின்றார். அரிதிற்பெறு துறக்கத்தை எளிதிற் பெறுதலுரிமையான் மாலிருங்குன்றத்தை எல்லாருங் கேட்க ஏத்தக்கடவேம் என்று போற்றுகின்றார். 'கோபுர தரிசனம் கோடி புண்ணியம்' என்ற வாக்கு இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

### மாங்குடிகிழாரும் மாங்குடிமருதனாரும்

'மாங்குடிகிழார்' என்றும் 'மாங்குடி மருதனார்' என்றும் இருவேறு பெயர்களில் சங்கச் செய்யுட்கள் காணப்படினும் இருவரும் ஒருவரே என்பது உரையாசிரியரின் கருத்து[28] அவர்தம் கருத்திற்கிணங்க இங்கு இருவரையும் ஒருவராகக் கருத்தில் கொண்டு துறக்கக் கோட்பாடு வரையறுக்கப் பெற்றுள்ளது. பாண்டியன் நெடுங்செழியனிடம் நீர்நிலை உண்டுபண்ணுமாறு குடபுலவியனார் அறிவுறுத்த, மாங்குடிகிழார் அவன் படைவலிமையைப் போற்றுகின்றார். கொல்லும் போரையுடைய பாண்டியன் நெடுஞ்செழியனிடம், பகைவரென்னும் பெயரைப்பெற்றுப், போர் செய்தற்கு இயலாது பொருது துன்புற்று வீழ்ந்தாராயினும் துறக்கம் சென்று இன்புறுகின்றாராதலால் அவர் நோற்றவராவார். என்று பாண்டியன் படைவலிமை பேசப்படுகின்றது (புறம்.26). பாண்டியன்

நெடுஞ்செழியனைக் குடபுலவியனார் நெறிப்படுத்த, மாங்குடிகிழார் வாழ்த்துகின்றார்.

பத்துப்பாட்டுள் ஒன்றான 'மதுரைக்காஞ்சி' பாண்டியன் நெடுஞ்செழியனை மாங்குடி மருதனார் பாடியதாகும். இதற்கு உரைவரைந்த நச்சினார்க்கினியர்,

> எனவே வீடுபேறு நிமித்தமாகப் பல்வேறு
> நிலையாமை சான்றோரையுங் குறிப்பினது
> காஞ்சித் திணையென்பது பொருளாயிற்று.[29]

என்று கூறுவர். இதற்கிணங்கப் பாடலின் பல்வேறிடங்களில் துறக்கக் குறிப்புகள் காணப்படுகின்றன. 'ஒரு பொய்யாலே உயர்ந்த நிலைமையையுடைய தேவருலகை அவர் நுகரும் அமுதத்தோடு பெறுவையாயினும் அவற்றைத் தருகின்ற பொய் நின்னைக் கைவிட்டு நீங்க மெய்யுடனே நட்புச் செய்தலையுடையை; முழங்கு கடலாகிய எல்லையையுடைய அகன்ற இடத்தையுடைய உலகத்துள்ளாருடனே உயர்ந்த தேவருலகத்துத் தேவரும் பகைவராய் வரினும் பகைவர்க்கு அஞ்சித் தாழ்ந்து ஒழுகலைச் செய்யாய்;

> உயர்நிலை யுலக மமிழ்தொடு பெறினும்
> பொய்சே ணீங்கிய வாய்நட் பினையே
> முழங்குகட லேணி மலர்தலை யுலகமொ
> **டுயர்ந்த தேஎத்து விழுமியோர்** வரினும்
> பகைவர்க் கஞ்சிப் பணிந்தொழு கலையே (மது.197:20●)

என்று பாண்டியன் நெடுஞ்செழியனின் இயல்பும் தன்மையும் பேசப்படுகின்றது. உயருலகினையும் அங்கு வாழும் தேவர்களையும் உயர்வாகக் கருதினும், பாண்டியன் நெடுஞ்செழியனின் பண்பு அதனினும்

குறைவில்லாதது என்பது தோன்றப் பாடியுள்ளார். வேதங்களாலும் வேள்விகளாலும் பெறக்கூடிய தேவருலகத்தை,

உயர்நிலை யுலக மிவணின் றெய்து
மறநெறி பிழையா வன்புடை நெஞ்சிற்
பெரியோர் மேஎயினிதி னுரையுங்
குன்றுகுயின் றன்ன வந்தணர் பள்ளியும் (மது.471:474)

என்றும் குறித்துள்ளார். தேவருலகைப் பெறக்கூடிய வழிகாட்டிய புலவர், தேவருலகம் வந்து காணும்படியான அழகுடையது மதுரை என்றும் ஒப்பீடு செய்கிறார்.

கங்கையம் பேரியாறு கடற்பரந் தாங்கு
அளந்து கடையறியா வளங்கெழு தாரமொடு
புத்தேளுலகம் கவினிக் காண்வர
மிக்குப் புகழ் எய்திய பெரும்பெயர் மதுரை.

(மது.696:699)

காஞ்சித் திணையாதலால் துறக்கச் சிந்தனை மாங்குடி மருதனாரிடம் ஆளுமை பெற்றிருந்தது. பாண்டியன் நெடுஞ்செழியனின் மறுமை வாழ்வும், அவன் பகைவரது மறுமை வாழ்வும் குறித்து இருவேறு நிலைகளில் மாங்குடி மருதனார் பாடியிருப்பது புலவரது நுண்மாண் நுழைபுலத்தினைக் காட்டுகிறது.

**பேயனார்**

ஐங்குறுநூற்று முல்லைத் திணையில் பேயனார் பாடிய இரண்டு பாடல்கள் துறக்கம் பற்றியன (401,442). தலைவனின் மனைக்குச் சென்று மீண்ட செவிலி ஆங்குத் தான் கண்டு மகிழ்ந்த தலைவன் தலைவியர் நல்வாழ்க்கை மாண்பினை,

மறியிடைப் படுத்த மான்பிணைபோலப்
புதல்வ னடுவண னாக நன்று
மினிது மன்ற வர் கிடக்கை முனிவின்றி
நீனிற வியலகங் கவைஇய
வீனு மும்பரும் பெறலருங் குரைத்தே (ஐங்.401)

என்று நற்றாயிடம் கூறி மகிழ்கிறாள். இங்குச் சுட்டப்பெறும் 'உம்பர்' என்ற சொல் தேவருலகத்தைக் குறிக்கின்றது. இல்லற மாண்பு இப்பாடலில் பேசப்படுகின்றது.

இவ்வுலகம் மக்கட்கு வழங்கும் இன்பத்தின்
சிகரம் இந்தக் கிடக்கையே தான். ஆகவே
இதனினும் சிறப்புப் பெறுதற்கு; இவ்வுலகில்
ஒன்றுமில்லை என்றும், ஈண்டுச் செய்வினை
ஆண்டு நுகர்தலன்றிப் பிறிதொரு மாண்பும்
இல்லாத தேவர் உலகத்தும் இதற்குமேல்
இன்பம் இருத்தற்கில்லை என்பாள் ஈனும்
உம்பரும் பெறலருங்குரைத்து என்றாள்.[30]

இப்பாடலில் மக்கட் பேற்றின் பெருமையும் சிறப்பும் பேசப்பட்டுள்ளன. தேவருலகத்தின் அருமைபாடாது இல்லற இனிமை பாடியிருப்பது புலவரின் அகப்பாடல் திறனை வெளிப்படுத்துகிறது.

மற்றுமொரு முல்லைத் திணைப் பாடலில் (ஐங்.442) பேயனார் தேவருலகத்து அருந்ததியினைத் தலைவியின் கற்பிற்கு ஒப்பிட்டுப் பாடியுள்ளார்.

பெருஞ்சின வேந்த னருந்தொழி றணியின்

விருந்துநனி பெறுதலு முரியன் மாதோ

விருண்டு தோன்று **விசும்பின் உயர்நிலையுலகத்**

தருந்ததி யனைய கற்பிற்

குரும்பை மணிப்பூட் புதல்வன் றாயே (ஐங்.442)

என்பது பாட்டு. கார்ப்பருவ வரவு கண்டு வேந்தற் குற்றுழிப் பிரிந்த தலைவன், தன் தலைவியின் விருந்தோம்பற் பாங்கினை நினைவு கூர்கிறான். ஈண்டு 'உயர்நிலையுலகம்' என்றசொல் உவமையாக வருகிறது. இதற்கு,

உயர்நிலையுலகம் என்றது வானத்தையுணர்த்தியது;

அருந்ததி தோன்றும் இடம் வான் ஆகலின்[28]

என்று உரைகூறுவர்.

ஐங்குறு நூற்றில் பிற புலவர்கள் துறக்கம் குறித்துப் பாடிலர். பேயனார் பாடலிலும் துறக்கக் குறிப்பு உள்ளதன்றித் துறக்கம் செல்லும் நெறியோ, யாரேனும் துறக்கம் சென்றதாகவோ குறிப்பில்லை. அகம் பாடும் மரபிற்கிணங்க உரிப்பொருள் சிறக்கப் பாடியுள்ளார் பேயனார்.

| வ. எண் | புலவர் பெயர் | துறக்கம் குறித்த சொல்லாட்சி | பா. எண் |
|---|---|---|---|
| 1. | இளம்பெருவழுதியார் | துறக்கம் | பரி.15 |
| 2. | கபிலர் | 1.உயர்நிலையுலகம் | பதிற்.70 குறு.361 |
| | | 2.புத்தேள் நாடு | குறுந். 288 |
| | | 3.வாராசேட்புலம் | பதிற் 61 |
| 3. | கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி | இந்திரர் அமிழ்தம் | புறம்.182 |
| 4. | கடுவனிளவெயினனார் | துறக்கம் | பரி.5 |
| 5. | கீரந்தையார் | பசும்பொன்னுலகம் | பரி. 2 |
| 6. | குடபுலவியனார் | செல்லும் உலகம் | புறம்.18 |
| 7. | நப்பண்ணனார் | சிறந்தோருலகம் | பரி. 19 |
| 8. | நல்லழுசியார் | மேலோர் உறையுள் | பரி. 17 |
| 9. | நல்லெழுநியார் | துறக்கம் | பரி. 13 |
| 10. | நல்வழுதியார் | துறக்கம் | பரி. 12 |
| 11. | நல்லந்துவனார் | 1.துறக்கம் | கலி.118,139,143 |
| | | 2.உயர்நிலையுலகம் | கலி.139 |
| | | 3.உயருலகு | கலி. 138 |
| 12. | பேயனார் | 1.உயர்நிலையுலகம் | ஐங். 442 |
| | | 2.உம்பர் | ஐங். 4 |
| 13. | மாங்குடி கிழார் | 1.உயர்நிலையுலகம் | மது. 197, 471 |
| | | 2.உயர்ந்த தேஎத்து விழுமியோர் | மது. 200 |
| | | 3.வானவ மகளிர் | மது. 582 |
| | | 4..உயர்நிலையுலகம் அமிழ்தொடு | மது. 197 |
| | | 5.மாவிசும்பு | மது. 495 |
| | | 6.புத்தேளுலகம் | மது. 698 |
| | | 7.ஆண்டு வாழ்வோர் | புறம். 26 |
| 14. | மாறோக்கத்து நப்பசலையார் | உயர்ந்தோர் உலகம் | புறம். 174 |

பாண்டிய நாட்டுப் புலவர்களால் ஆளப்பெற்ற சொல்லாட்சிகளுள் **துறக்கம்** மிகுதியாக இடம்பெற்றுள்ளது. ஒரு புலவர் பல்வேறு சொல்லாட்களில் பாடல் புனைந்திருப்பதும் போற்றத்தக்கது. பாண்டிய நாட்டுப் புலவர்களின் துறக்கக் கோட்பாடு பல நிலைகளில் மாற்றம் பெற்றுள்ளதை அவர்தம் பாடல்கள் வழி அறியலாகின்றது.

1. நீரறம் செய்ய மன்னனுக்கு அறிவுறுத்துதல்
2. வாழ்க்கை நிலையாமையை எடுத்துரைத்தல்
3. உயர்நிலையுலகத்திலிருப்போருக்கு விழா எடுத்தல்
4. துறக்கக் கோட்பாட்டினை இறைவழிபாட்டோடு தொடர்புபடுத்துதல்

*முதலிய* செய்திகள் பாண்டியநாட்டுப் புலவர்களின் பாக்களால் புலனாகின்ற*ன*.

## கொங்கு நாட்டுப் புலவர்கள்

சேரநாட்டின் ஒரு பகுதியாகத் திகழ்ந்த கொங்கு நாட்டுப் புலவர்களில் பரணரும், ஔவையாரும் துறக்கம், நிரயம் பற்றிய பாடல்களைப் பாடியுள்ளனர்.

### பரணர்

வரலாற்று நிகழ்வுடன் பாடும் திறனுடைய பரணர் அகநானூற்றில் பாடிய பாடலொன்று (178) மறுமையுலகம் பற்றிக் குறிக்கிறது. வரைவு மலிந்த தோழி தலைவியைப் பார்த்து,

கண்ணினிது படுக்கும் நன்மலை நாடனொடு
உணர்ந்தனை புணர்ந்த நீயும் நின்றோட்
புணைக்கவின் அழியாது துணைப்புணர்ந்தென்றும்
தவலில் உலகத் துறைஇயரோ தோழி (அகம். 178:1-4)

என்று கேட்கின்றாள். தலைவனுடன் என்றும் சேர்ந்து வாழ்ந்து மறுமையுலகத்திலும் தங்கி வாழ்கவென்று, மணம் செய்துகொள்ளத் தலைவன் வருவதையறிந்த தோழி, தலைவியை வாழ்த்துகின்றாள். தலைவன் முதல் நாள் காண்டலினும் பிற்றை நாள்களில் பெரிதும் அருள் செய்யும் பண்புடையவன்; ஆகையால் மறுமையிலும் இணைந்திருப்பர் என்பது தோழியின் எண்ணம். அன்புடைய நெஞ்சமுடையவராதலால் மீண்டும் இணைய வாழ்த்துகிறார் புலவர்.

இவர் புறநூனூற்றில் பாடிய பாடலொன்று 'வாராவுலகம்' புகுதலைக் குறிக்கிறது (புறம். 341). மகள் மறுத்தல் காரணமாக நிகழும் வீரப்போர் இங்குக் குறிக்கப்பெற்றுள்ளது. மகட்கொடை விரும்பியவன்,

பூக்கோ ளெனவே எய்க்கயம்புக் கனனே
விளங்கிழைப் பொலிந்த வேளா மெல்லியற்
சுணங்கணி வனமுலை யவளொடு நாளை
மணம்புகு வைக லாகுத லொன்றே
ஆரம ருழக்கிய மறங்கிளர் முன்பின்
நீளிலை யெஃக மறுத்த வுடம்பொடு
வாராவுலகம் புகுத லொன்றெனப் (புறம். 314:9-15)

என்று படைதொட்டதாகப் பாடுகின்றார் புலவர். இங்குப் போரினால் நாடு சீரழிவது புனையப் பெறுகிறது. பாண்டிய நாட்டுப் புலவராகிய கபிலர் பாடியமை இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

### ஔவையார்

அதியமான் நெடுமான் அஞ்சி போரில் விழுப்புண்பட்டு ஓய்விருந்தபோது அவனைக் கண்ட ஔவையார் அவனுடைய

வீரத்தைப் போற்றிப் பாடுகின்றார் (புறம். 93). நின்னுடைய பகைவேந்தர், நின் வாளால் பட்டொழிந்தமையின் நினக்குத் தோற்றார் என்ற பழியும், சுற்றத்தார் கூடி வாளாற் போழ்ந்தடக்கும் சிறுமையும் இல்லா தொழிந்ததாகப் பாடுகிறார். இதில் ஈமச்சடங்கு ஒருவனுக்கு எங்ஙனம் துறக்கப் பேற்றினை வழங்குகிறது என்பதையும் விளக்குகிறார்.

நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக்
காதன் மறந்தவர் தீதுமருங் கறுமார்
அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்
திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி
மறங் கந்தாக நல்லமர் வீழ்ந்த
நீள்கழன் மறவர் செல்வுழிச் செல்கென
வாள்போழ்ந் தடக்கலு முய்ந்தனர் மாதோ

(புறம்.93:5-11)

என்பது அப்பாட்டு. போரில் இறக்காத வேந்தனுக்கு நேரும் இழிவைச் சுட்டுவதாக ஔவையார் பாடியிருப்பது, அவரது வீரம் செறிந்த புலமையைப் பறைசாற்றுகின்றது. போரில் இறக்காது, அந்தணரால் துறக்கம் சேர்வதனை இழிவாகக் கருதுகிறார்.

சங்ககாலச் சமுதாயம் போருக்கும்
போர்த்திறனால் பெறப்படும் புகழுக்கும்
முன்னுரிமை அளித்த ஆண் மையச்
சமுதாயம்தான். ஆனால் பெண்பாற்
கவிஞர்களின் பாடல்களையும் பெண்பாத்திரங்கள்
படைக்கப்பட்டிருத்தலையும் பார்க்கும் போது
அச்சமுதாயத்தில் அதன்காலத்து

உலக நாடுகள் வேறு எதிலுமில்லாத
அளவு உரிமைகள் பெண்ணினத்திற்கு
வழங்கப்பட்டிருக்கவேண்டும் என்ற
முடிவுக்கு வரலாம்.[32]

இக்கருத்து ஔவையாருக்கும் பொருத்தமானதாக அமைந்திருப்பதனை அவருடைய பாடல் காட்டுகின்றது. துறக்கம் சேர்வதில் பெருமையில்லை என்பதையும் எந்த வகையில் துறக்கம் கிட்டியது என்பதைப் பொறுத்தே அத்துறக்கம் பெருமையாகக் கருதப்படும் என்பதையும் இப்பாடல் வழி அறியமுடிகின்றது.

அதியமானின் போர்த்திறனைப் புகழ்ந்த ஔவையார் அவன் மகன் பொகுட்டெழினியின் போர்த்திறனையும் போற்றத் தவறிலர். அவனது வீரத்தையும் கொடையையும் விதந்தோதிய புலவர், அவன் முன்னோரைப் பற்றியும் குறித்துச் செல்கிறார். பெறுதற்கரிய அமிழ்தம் போன்ற கரும்பை இந்நாட்டிற்குக் கொண்டு வந்தோரின் வழித் தோன்றல் என்று பொகுட்டெழினியைப் பாராட்டுகின்றார். கரும்பின் இனிமைக்குத் தேவரமிழ்தம் உவமையாகின்றது.

......................................................அந்தரத்
தரும்பெற லமிழ்த மன்ன
கரும்பிவட் டந்தோன் பெரும்பிறங்கடையே

(புறம்:392:19-21)

என்பதால் கரும்பை இந்நாட்டிற்குக் கொண்டு வந்தோர் பொகுட்டெழினியின் முன்னோர் என்று தெளிவுப்படுத்துகிறார் ஔவையார்.

## நாடுவரையறுக்கவியலாப் புலவர்களின் துறக்கக் கோட்பாடு

சங்க இலக்கியப் புலவர்களில் மோசிகீரனார், சிறுவெண்டேரையார், பிரமனார், காவிட்டனார், பரூஉமோவாய்ப் பதுமன், வெண்பூதன் ஆகியோருடைய நாட்டைப் பற்றிய குறிப்புகள் கிடைத்தில. இவர்களுடைய பாடல்கள் நாட்டு மன்னர்களுக்கும் மக்களுக்கும் துறக்கம் பற்றி எடுத்துரைக்கின்றன.

### மோசிகீரனார்

சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையைக் காணச் சென்ற மோசிகீரனார், அவனது முரசு கட்டிலில் உறங்கிவிட்டார். தண்டனைக்குரிய செயலாயினும் இரும்பொறை அவருக்குக் கவரி வீசினான் உறக்கம் தெளிந்த மோசிகீரனார் அவனையும், முரசு கட்டிலையும் புகழ்ந்து பாடுகின்றார். '**இம்மையிற் புகழ்; மறுமையில் துறக்கம்**' என்ற கொள்கை இரும்பொறையிடம் இருப்பதுதான் அவன் கவரி வீசியதற்குக் காரணமாக இருக்குமோ? என்று கேட்கின்றார்.

நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
அறியா தேறிய வென்னைத் தெறுவர
இருபாற் படுக்குநின் வாள்வா யொழிந்ததை
அதூஉஞ் சாலுநற் றமிழ்முழு தறிதற்
அதனொடு மமையா தணுக வந்து நின்
மதனுடை முழவுத்தோ ளோச்சித் தண்ணென
வீசியோயே வியலிடங் கமழ
இவணிசை யுடையோர்க் கல்ல தவண
துயர்நிலை யுலகத் துறையுளின்மை
விளங்கக் கேட்ட மாறுகொல்
வலம்படு குருசி னீயீங்கிது செயலே (புறம். 50:6-17)

என்பது அப்பாட்டு. தன்னுயிரைக் காத்த மன்னனுக்குத் துறக்கப் பேறுவாய்க்கப்பெற வேண்டும் என்ற புலவரது எண்ணம் இப்பாடலால் புலனாகின்றது.

***சிறுவெண்டேரையார்***

போர் வேந்தரின் வீரவேட்கையை எடுத்துரைக்கும் சிறுவெண்டேரையார் உயர்ந்தோர் நாட்டிற்குச் செல்லக்கூடிய தகுதி யாருக்குரியது என்பது பற்றியும் மொழிந்துள்ளார்.

கைபெய்தநீர் கடற்பரப்ப
ஆமிருந்த வடைநல்கிச்
சோறு கொடுத்து மிகப் பெரிதும்
வீறுசா னன்கலம் வீசி நன்றும்

...........................................................

காடுகண் மறைத்த கல்லென் சுற்றமொ
டில்லென் றில்வயிற் பெயர மெல்ல
இடஞ்சிறி தொதுங்க லஞ்சி
உடம்பொடுஞ் சென்மா ருயர்ந்தோர் நாட்டே

(புறம். 362:12-22)

என்பதில் நிலையாமையை வலியுறுத்தித் துறக்கத்தின் பெருமையை எடுத்துரைக்கின்றார். நான்மறைகளில் இச்செயல் குறிக்கப்பெறவில்லை என்றும், பார்ப்பார்க்குத் தண்ணடை நல்கி, இரவலர்க்குச் சோறளித்துப் பரிசிலர்க்கு நன்கலம் வீசிக் கல்லென்னும் சுற்றம் பெருகியவழித் தாம் சிறிய இடத்தில் ஒதுங்கியிருத்தற்கஞ்சி உயர்ந்தோருலகத்துப் போர்வடுவுற்ற உம்போடு செல்லும் பொருட்டாகும் என்றும் குறிப்பதாக இப்பாடல் அமைந்துள்ளது.

> மிக்க வலியும் செல்வமும் இளமையுமாகிய
> அவற்றை நிலையுடையவாகக் கருதிற்
> கடும்பற்றுள்ளம் கொள்ளச் செய்யுமாகலின்
> அதற்கேதுவாகிய மருட்சியும் மயக்கமும்
> தீர்ந்தாலன்றிப் பொருட் கொடையாற்
> புகழும் உயிர்க்கொடையாற் துறக்கவின்பமும்
> எய்தாமை பற்றி, "மருள் தீர்ந்து மயக்கொரீஇ"
> என்றார்.[33]

என்று போருக்கான காரணத்தை விளக்குவர். வீரசுவர்க்கம் பெறுவதைக் குறிப்பினும், போரில் வடுப்பட்ட உடம்போடு உயர்ந்தோர் நாட்டிற்குச் செல்ல விழைவதாகப் பாடியிருப்பது, உயிருடம்பினும் புகழுடம்பிற்குப் புலவர் கொடுக்கும் மதிப்பைக் காட்டுகிறது.

***பிரமனார்***

சேர சோழ பாண்டியராகிய மூவேந்தரும் தம்முள் ஒற்றமையின்றிப் போர் செய்து கொண்டதையறிந்த பிரமனார், உடம்பைவிட்டு உயிர்நீங்குங் காலத்து வேறெதுவும் உடன்வருவதில்லை; ஆகவே நல்லறம் செய்து வீடுபேறு அடைக என்று வலியுறுத்துகிறார். அனைவருக்கும் பொதுவான மண்ணுலகை ஆள்வதற்காகப் போர் செய்வதை நிறுத்திவிட்டு மறுமையுலகம் அடையும் நோக்கில் அறவினை செய்ய வேண்டும். உயிர் கூற்றுவனாற்கவர்ந்து கொள்ளப்படும் காலத்தில் இவ்வுலகினின்றும் உயர்ந்து துறக்கம் செல்வதற்கு அறவினையாகிய துணையே தெப்பமாகக் கூடியது என்று வாழ்க்கையின் நிலையாமைத் தன்மையை எடுத்தியம்புகிறார்.

**காவிட்டனார்**

பிரமனாரைப் போன்று காவிட்டனாரும் நிலையாமைத் தன்மையைப் பாடியுள்ளார். அந்துவன் கீரன் உலகியலிற் பற்றுடையவனாகத் திகழ அவனுக்கு யாக்கை நிலையாமை பற்றி எடுத்துரைக்கிறார் புலவர். பெருநாடுகளை வென்று கொண்ட முடிவேந்தராயினோரும் முடிவில் முதுகாட்டையடைந்தார்களேயன்றி நிலைபெற இருந்தாரில்லை. நினக்கும் அவ்வாறு ஒருநாள் வருதல் தப்பாது; இவ்வுலகில் இசையும் வசையுமே ஒப்ப நிற்பனவாம். ஆதலால் வசை நீக்கி இசை நடுதலும், ஒரு பாலும் கோடாது முறை வழங்குதலும் இரவலர்க்குக் களிறும் மாவும் தேரும் பிறவும் கொள்ளெனக் கொடுத்தலும் செய்க; செய்வாயாயின், நீ மேலுலகம் புக்க வழியும் நீ எய்தும் புகழ் இவ்வுலகம் உள்ளளவும் நிலைபெற நிற்கும் என்று அறிவுறுத்துகின்றார்.

நிலவுக்கோட்டுப் பல களிற்றொடு
பொலம்படைய மாமயங்கிட
இழைகிளர் நெடுந்தே ரிரவலர்க்கருகாது
கொள்ளென விடுவையாயின் வெள்ளென
ஆண்டு நீ பெயர்ந்த பின்னும்
ஈண்டு நீடு விளங்குநீ யெய்திய புகழே

(புறம்.359:13-18)

என்று பொருள் வேட்கையுடன் இருந்த அந்துவன் கீரனிடம் எடுத்துரைத்து அவனை நல்லறத்தில் ஈடுபடச் செய்கிறார் காவிட்டனார்.

**வெண்பூதன்**

தலைவனுடைய நல்வரவினை உரைத்தமையால் செவிலி, பெறுதற்கரிய அமிழ்தமே உண்ணும் உணவாகவும் பெறுவாளாக என்று தோழி வாழ்த்துகிறாள். தலைவிக்கு நன்மை செய்தலால் செவிலி துறக்கம் பெறுவாள் என்கிறார் வெண்பூதன்.

**அரும்பெறல் அமிழ்தம்** ஆர்பதம் ஆகப்
**பெரும்பெயர் உலகம்** பெறீஇயரோ அன்னை
தம்இல் தமது உண்டன்ன சினைதொறும்
தீம்பழம் தூங்கும் பலவின்
ஓங்குமலை நாடனை வரும்என் றோளே (குறுந்.83)

என்பது பாட்டு. அரும்பெறல் அமிழ்தம் என்றும், பெரும்பெயர் உலகமென்றும் பாடல் முழுக்க துறக்கச் சிந்தனையைப் புகுத்தியுள்ளார் புலவர்.

**பரூஉ மோவாய்ப் பதுமன்**

இளம் தலைவி தரும் இன்பத்திற்குத் தேவருலக இன்பமும் ஈடாகாது என்ற கருத்தமைய,

விரிதிரைப் பெருங்கடல் வளைஇய உலகமும்
அரிதுபெறு சிறப்பின் புத்தேள் நாடும்
இரண்டும் தூக்கின் சீர்சா லாவே
பூப்போல் உண்கண் பொன்போல் மேனி
மாண்வரி அல்குல் குறுமகள்
தோள்மாறு படூஉம் வைகலொடு எமக்கே

(குறுந். 101.)

என்று பாடியுள்ளார் புலவர். கபிலரைப் போன்று இப்புலவரும் தேவருலக இன்பத்தைக் குறைவாக எண்ணித் தலைவியிடம் உள்ள இன்பமே பேரின்பமாகக் கருதுகிறார். காதல் இன்பத்திற்குத் தேவருலக இன்பம் ஈடாகாது என்பது சங்கப் புலவர்களின் எண்ணம்.

**பெயரில்லாப் புலவர்களின் துறக்கக் கோட்பாடு**

பரிபாடல் திரட்டில் அமைந்த இரண்டு பாடல்கள் துறக்கம் பற்றியன. அவற்றைப் பாடிய புலவர்கள் யாரென்ற குறிப்பில்லை. அவை திருமாலைப் பற்றியும், மதுரையைக் குறித்தும் இடம்பெற்றவை. திருமாலைக் குறித்தெழுந்த பாடலில் வினைப்பயன் துய்க்கும் துறக்கம் பாடப்பெற்றுள்ளது.

யிடையொழி வின்றி யடியுறையா ரீண்டி
விளைந்தார் வினையின் விழுப்பயன் றுய்க்குந்
துளங்கா **விழுச்சீர்த் துறக்கம்** புரையு
மிருகே ழுத்தி யணிந்த வெருத்தின்
வரை கெழு செல்வ னகர் (பரி.தி.1:45-49)

என்பது அப்பாட்டு. இங்குத் 'துறக்கம்' என்ற சொல்லாட்சி குறிக்கப்பெற்றுள்ளது. மதுரையைப் பற்றியமைந்த மற்றொரு பாடல்,

ஈவாரைக் கொண்டாடி யேற்பாரைப்
பார்த்துவக்குஞ் சேய்மாடக் கூடலும்
செவ்வேள் பரங்குன்றும் வாழ்வாரே
வாழ்வா ரெனப்படுவார் மற்றையார்
போவாரார் **புத்தேளுலகு** (பரி.தி. )

என்பதாகும். ஈவாரும் ஏற்பாரும் இருக்கக்கூடிய சிறப்பு வாய்ந்தது மதுரையும் பரங்குன்றமும். ஆகையால் அக்கூடல் நகரில் வாழ்வபரே வாழ்பவராவர்; ஈதல் ஏற்றல் ஆகிய சிறப்பில்லாத புத்தேளுலகம் செல்ல விரும்பார் என்று தேவருலகத்தை இழிவுபடுத்துகின்றார்.

### ஒப்பியல் நோக்கு

1. 'எத்திசைச் செல்லினும் அத்திசைச் சோறே' என்று புலவர்கள் வாழ்ந்தமைக்குத் துறக்க நிரயப் பாடல்களும் சான்றுகளாகின்றன. சேரநாட்டுப் புலவரான கழாத்தலையார் சோழன் வேற்பஃறடக்கை பெரு விறற்கிள்ளியைப் (புறம்.62) பாடியுள்ளார். சோழ நாட்டுப் புலவர்களான காரிகிழார் பாண்டியன் முகுகுடுமிப் பெருவழுதியையும் (புறம். 6), குறுங்கோழியூர் கிழார் (புறம்.22) சேரமான் மாந்தரஞ்சேரல் இரும்பொறையினையும், மாமூலனார் சேரலாதனையும் (அகம்.55), உதியஞ்சேரலாதனையும் (அகம்.233) பாடிச் சிறப்பித்துள்ளனர். பாண்டியநாட்டுப் புலவரான கபிலரும், மாறோக்கத்து நப்பசலையாரும் செல்வக்கடுங்கோ வாழியாதனையும் (பதிற்.61.71), மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணனையும் (புறம் 174) புகழ்ந்துள்ளனர்.

2. வீரமும் ஈகையும் துறக்கப் பேற்றிற்கான காரணமாக மூன்று நாட்டுப் புலவர்களாலும் சிறப்பிக்கப்பெறுகிறது. இருப்பினும் சேர, சோழ நாட்டுப் புலவர்களைப் போலப்பாண்டிய நாட்டுப் புலவர்கள் மிகுதியாகப் பாடிலர்.

3. வேந்தர்களால் புலவர்களின் வறுமை நீங்குகிறது; ஆகவே கற்பனை உலகான தேவருலகத்தினும் தம்மைப் புரந்தருளும் மன்னரின் நாடு இன்பம் நிறைந்ததாகப் புலவர்களுக்குத் தோன்றுகிறது. இப்போக்கு மூன்று நாடுப் புலவர்களிடையேயும் காணலாகின்றது. காக்கைப்

பாடினியார் (சேரநாடு - பதிற்.54), ஆலூர் மூலங்கிழார் (சோழ நாடு - புறம்.38), கபிலர் (பாண்டிய - நாடு குறுந்.288), ஆகியோரது பாடல்கள் இதற்குச் சான்றுகளாகின்றன. ஈதல், ஏற்றல் முதலியன இல்லாமையால் தேவருலகம் அவமதிக்கப்படுதலை, "ஈண்டுச் செய்வினை யாண்டு நுகர்ந்திருத்தல், காண்டகு சிறப்பினுங் கடவுளரல்ல, தறஞ்செய் மாக்கள் புறங்காத்தோம்புநர், நற்றவஞ் செய்வோர் பற்றறமுயல்வோர், யாவருமில்லாத் தேவர் நன்னாட்டுக், கிறைவனாகிய பெருவிறல் வேந்தே" (மணி.14:38-43) என்று குறிப்பிடுகின்றது. இக்குறிப்பு ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது.

4. தேவருலகை நிலவுலகிற்கும், தேவருலக இன்பத்தை நிலவுலக நீர்த்துறைகளுக்கும் ஒப்பிடும்போக்கு புலவர்களிடம் உள்ளது. சோழநாட்டுப் புலவரான குறுங்கோழியூர் கிழாரும் (புறம்.22), கடியலூர் உருத்திரங் கண்ணனாரும் (பெரும்.388, பட்.104), பாண்டியநாட்டுப் புலவரான மாங்குடி மருதனாரும் (மது.698) பாடிய பாடல்கள் இங்குக் குறிப்பிடத்தக்கவை.

5. தேவ மகளிர் பற்றிய குறிப்பு பாண்டிய நாட்டுப் புலவரான மாங்குடி மருதனாரால் மதுரைக்காஞ்சியில் ( **582** ) சுட்டப்பெற்றுள்ளது. இதே போன்று அங்கிருக்கக் கூடிய அருந்ததி பற்றிய செய்தியினைப் பேயனார் (ஐங்.442)பாடியுள்ளார். வீரப்போர் புரிந்து உயிர் துறந்தோர் தேவருலகம் சென்று அங்குள்ள தேவ மகளிரை மணந்து இன்புறுவர் (புறம்.287) என்ற குறிப்பு சோழநாட்டுப் புலவரான சாத்தந்தையார் பாடலில் இடம்பெற்றுள்ளது. வேறெந்த நாட்டுப் புலவரும் இச்செய்தியினைக் குறித்திலர்.

6. கணவன் இறந்தவுடன் உடன்கட்டை ஏறித் துறக்கம் செல்வது குறித்துச் சேரநாட்டுப் புலவர்களான குட்டுவன் கீரனாரும் (புறம்.240), கழாத்தலையாரும் (புறம்.62) பாடியுள்ளனர். கணவன் மீது கொண்டிருக்கும் காதல் விருப்பம் காரணமாக இறக்கும் பெண்டிரும் துறக்கம் செல்வர் என்பது பாண்டிய நாட்டுப் புலவரான நல்லந்துவனாரது எண்ணம் (கலி. 143). சோழநாட்டுப் புலவரான தும்பி சொகினனார் (புறம். 249) கணவன் துறக்கம் செல்லக் கைம்மை நோன்பு மேற்கொள்ளும் பெண்டிரைப் பாடியுள்ளார்.

7. சேரநாட்டுப் புலவர்களால் அகப்பாடல்களில் துறக்கக் கோட்பாடு பாடப்பெறவில்லை.

8. சேர நாட்டுப் புலவரான பாலைக் கௌதமனாரைப் போன்று வேறெந்த நாட்டுப் புலவரும் துறக்கம் சென்றதாகக் குறிப்பில்லை.

**நரகக் கோட்பாடு**

தீயவற்றை விலக்கி நல்லவற்றை எடுத்துரைக்கப் புலவர்கள் கையாண்ட உத்திகளுள் நரகக் கோட்பாடும் குறிப்பிடத்தக்கது. சங்கப் புலவர்கள் துறக்கத்தை வலியுறுத்திய அளவிற்கு நரகச் சிந்தனையை மிகுதியும் எடுத்துரைக்கவில்லை. நரகங்கள் பலவென்றும், ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு வகையான துன்பத்தை உயிர்கள் அனுபவிக்கும் என்றும் புராணங்கள் பேசுகின்றன. சங்கப் புலவர்கள் நரகத்தின் இயல்பைப் பாடியுள்ளனரேயன்றி வகைப்பாடு குறித்துப் பேசிலர்.

நல்லது செய்தல் ஆற்றீராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்
எல்லாரும் உவப்ப தன்றியும்
நல்லாற்றுப் ப டூஉம் நெறியுமாறதுவே (புறம்.195)

என்பது நரிவெரூஉத்தலையார் பாட்டு இங்குப் புலவர் அல்லது செய்யாதிருத்தலை எடுத்தியம்புகிறார். இப்பாடலில்துறக்கமோ நிரயமோ வெளிப்படையாகக் குறிக்கப்பெறவில்லையாயினும் நல்லாற்றுப்படுத்தும் நெறி கூறப்பெற்றுள்ளது.

**சேரநாட்டுப் புலவர்களின் நரகக் கோட்பாடு**

சேரநாட்டுப் புலவர்களில் நரிவெரூஉத்தலையார், நம்பி குட்டுவனார், குமட்டூர் கண்ணனார் ஆகியோர் நரகம் குறித்துப் பாடிய சிறப்பிற்குரியவர்கள்.

**நரிவெரூஉத்தலையார்**

எதிர்மறையாகப் பாடும் மரபு புலவர்களிடம் இருந்தமைக்கு நரகம் பற்றிய பாடல்கள் சான்றாகின்றன. கோப்பெருஞ்சேரல் இரும்பொறைக்குச் செவியறிவுறுத்த நரிவெரூஉத்தலையார் பாடிய பாடல் (புறம்.5) நரகக் குறிப்பினை எடுத்துரைக்கின்றது. இதில் நாட்டைக் காவல் செய்யும் முறை மன்னனுக்கு அறிவுறுத்தப்பெறுகிறது.

எருமை யன்ன கருங்கல் லிடைதோ
றானிற் பரக்கும் யானைய முன்பின்
கானக நாடனை நீயோ பெரும
நீயோ ராகலி னின்னொன்று மொழிவல்
அருளும் அன்பும் நீக்கி நீங்கா

நிரயங் கொள்பவரோ டொன்றாது காவல்
குழவி கொள்பவரின் ஓம்புமதி
அளிதோ தானேயது பெறலருங் குரைத்தே (புறம்.5)

என்று நரகத்தின் இயல்பைப் பாடியுள்ளார். அருளையும் அன்பையும் நீக்கியோர்க்கு நிரயம் நீங்காததொன்றாகும். அத்தகையோருடன் ஒன்றாது குழந்தையைக் காப்பது போல நாட்டைக் காப்பாயாக என்கின்றார். பகைவரால் அணுகப்படாத வலிய காடு சூழ்ந்த நாட்டிற்குத் தலைவன் என்று புகழ்ந்து நாடு காத்தலின் சிறப்பை மொழிகின்றார். அருளும் அன்பும் இல்லாதார் நிரயத் துன்பத்தினின்றும் நீங்க இயலாது என்பது புலவரது எண்ணம். இதற்கு,

அவர் கோப்பெருஞ்சேரலிரும்பொறையைக்
கண்டு அவனது
தோற்றப் பொலிவை வியந்து தனக்குச்
செய்தது போலப் பிறர்க்கும் இன்பம்
செய்யும் இயல்பு குன்றாதிருப்பது காரணமாக,
இத்தோற்றப் பொலிவு செல்வக் குறைவாலும்
சிற்றினச் சேர்க்கையாலும் மக்கள்பால்
அளியின்மையாலும் குன்றுமென நினைந்து,
"பெரும, நீ கானகநாடனாதலால் செல்வக்
குறைவிலை; ஆதலால் நீ நிரயங்கொள்ளும்
சிற்றினத்தைச் சேராது நாட்டினைக் குழவி
வளர்ப்பாரைப் போலப் பாதுகாப்பாயாக"
என அறிவுறுத்துகின்றார்[34]

என்ற கருத்து அரண்சேர்க்கும். "துறக்கம் பெறுக" என்று பாடாது "நிரயம் பெறாதொழிக" என்று கூறுவது புலவரின் பாடுதிறனை வெளிப்படுத்துகின்றது.

**நம்பிகுட்டுவனார்**

'நிரயம் அடைக' என்று வசைபாடுவதாக அமைந்தது நம்பிகுட்டுவனார் பாடல் (நற்.236). தலைவன் வரைந்து கொள்ளாமையால் ஆற்றாமை மிக்கு வருந்திய தலைவி, அவன் சிறைப்புறமாக நிற்கத் தோழியிடம் தன்னிலையினைக் கூறுகிறாள்.

நோயுங் கைம்மிகப் பெரிதே மெய்யுந்
தீயுமிழ் தெறலின் வெய்தா கின்றே
ஒய்யெனச் சிறிதாங்கு உயரிய பையென
முன்றிற் கொளினே நந்துவள் பெரிதென
நிறைய நெஞ்சத் தன்னைக் குய்த்தாண்டு
உரையின் வாழி தோழி புரையில்
துண்ணோர் எல்வளை நெகிழ்ந்தோன் குன்றத்து
அண்ணல் நெடுவரை ஆடித் தண்ணென
வியலறை மூழ்கிய வளியென்
பசலை ஆகந் தீண்டிய சிறிதே (நற். 236)

தலைவனால் பசலை நோயுற்ற தலைவி, தன்னுடைய நோயின் மிகுதியை எடுத்துக் கூறுகிறாள். அவனது மலையிலே வீசிய காற்று என் மெய்யைத் தீண்டினால் என் நோய் நீங்கும் என்று நரகம் போன்ற கொடிய நெஞ்சையுடைய அன்னையிடம் கூறுமாறு தோழியிடம் புலம்புகிறாள் தலைவி. அன்னை செய்த காவல் அவளுக்கு நரகத் துன்பத்தைக் கொடுப்பதாக அமைந்தது.

**குமட்டூர் கண்ணனார்**

பதிற்றுப்பத்தின் இரண்டாம்பத்து இமயவரம்பன் நெடுஞ் சேரலாதனைக் குமட்டூர் கண்ணனார் பாடியது. 'நிரைய வெள்ளம்' என்ற தலைப்பிடப்பெற்ற பாடல் நரகம் பற்றிய புலவரின் நுண்மாண் நுழைபுலத்தைக் காட்டுகிறது.

யாண்டு தலைப்பெயர வேண்டுபுலத் திறுத்து
முனையெரி பரப்பிய துன்னருஞ் சீற்றமொடு
மழைதவழ்பு தலைஇய மதின்மர முருக்கி
நிரைகளி றொழுகிய **நிரைய வெள்ளம்**
பரந்தாடு கழங்கழி மன்மருங் கறுப்பக் (பதிற். 15:1-5)

என்பது பாட்டு. இங்குப் படைகளின் பெருக்கத்தைக் குறிக்கவும் அப்படையினால் பகைவர்க்கு நேரும் துன்பத்தை விளக்கவும் 'நிரைய வெள்ளம்' என்ற தொடரைக் கையாண்டுள்ளார்.

களிறுகள் நிரை நிரையாகச் செல்லும்
இயல்பினவாதலின், 'நிரைகளி'றென்றும்,
அவை எண்ணிறந்தனவாய் வெள்ளம் போல்
பரந்து சேறலின், 'நிரைகளிறொழுகிய
வெள்ளம்' என்றும், இவ்யானைப் படையொடு
கூடிய பெருந்தானை பகைவர்க்கு நிரயத்துன்பம்
போலும் துன்பத்தைச் செய்யும் இயல்பிற்றாதல்
தோன்ற, நிரைய வெள்ளமென்றும் கூறினார்[35]

இப்பாடலில் மற்றோர் இடத்திலும் புலவர் நிரையம் பற்றிக் குறித்துள்ளார். நல்வினை செய்து நரகம் தவிர்க்க என்று அறிவுரை சொல்கிறார்.

வெய்துற வறியாது நந்திய வாழ்க்கைச்
செய்த மேவ லமர்ந்த சுற்றமொடு
ஒன்று மொழிந் தடங்கிய கொள்கை யென்றும்
பதிபிழைப் பறியாது துய்த்த லெய்தி
**நிரைய** மொரீஇய வேட்கைப் புரையோர்
மேயின ருறையும் பலர்புகழ் பண்பின்

(பதிற். 15:26-31)

என்று இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் பண்பு பேசப்படுகின்றது. 'நிரயம் எய்தா வகையில், நல்வினை செய்து நீங்கிய அறவேட்கையுடைய பெரியோர்' என்ற குறிப்பு புலவரது கருத்தோட்டத்தைப் புலப்படுத்துகின்றது. இதற்கு,

அடங்கிய கொள்கையுடையார்க்கு இவ்வுலக
இன்பத்தில் வேட்கையின்மையின்,
உயர்நிலையுலகத்து இன்ப வேட்கையும்
அதற்குரிய தவவொழுக்கமும் அவர்பால்
உளவாதல் கண்டு, "அடங்கிய கொள்கை"யும்
"நிரைய மொரீஇய வேட்கை"யும்
உடையோரெனச் சிறப்பித்தார் என் அறிக[36]

என்று உரை வரைவர். எதிர்மறையாகப் பாடும் மரபு புலவருக்கிருப்பதை இப்பாடல் விளக்குகிறது. நரிவெரூஉத்தலையாரைப் போன்று குமட்டூர் கண்ணனாரும் துறக்க எண்ணத்தை எதிர்மறைத் குறிப்பால் வெளிப்படுத்தியுள்ளார்.

## சோழநாட்டுப் புலவர்களின் நரகக் கோட்பாடு

ஓரோடகத்துக் கந்தரத்தனார், ஆலத்தூர் கிழார், புறத்திணை நன்னாகனார் ஆகியோர் நரகம் குறித்துப் பாடிய சோழநாட்டுப் புலவர்களாவர்.

### ஓரோடகத்துக் கந்தரத்தனார்

இவர் பெண்டிருக்கு 'நிரயம்' என்ற அடைகொடுத்துப் பாடிய துணிவுடையவர் (அகம்.95). களவொழுக்கத்தில் தலைவனோடு உடன்போக்கில் செல்ல இசைந்த தலைவி தோழியிடம்,

> கௌவை மேவலர் ஆகி, 'இவ்வூர்
> **நிரையப் பெண்டிர்** இன்னா கூறுவ
> புரைய அல்ல 'என் மகட்கு' எனப் பரைஇ
> நம் உணர்ந்து ஆறிய கொள்கை
> அன்னை முன்னர், யாம்என், இதற்படலே?
>
> (அகம்.95:11-15)

என்று மொழிகின்றாள். அலர் தூற்றுவதை விரும்பியவராய் இந்த ஊரில் உள்ள பெண்டிர் கூறும் கொடிய சொற்கள் என் மகளுக்குப் பொருந்துவன அல்ல எனத் தெய்வத்தை வழிபட்டு நம் களவொழுக்கத்தை உணர்ந்து அமைதி அடைந்துள்ள கொள்கையையுடைய நம் அன்னை முன் நாம் காணப்படின் அவள் நிலை என்னவாகும். எனவே நான் நம் அன்னை முன் செல்ல அஞ்சியே தலைவனுடன் உடன்போக இசைந்தேன் என்கிறாள். அந்தளவிற்கு ஊர்ப்பெண்டிர் அலர் தூற்றுவதால்தான் புலவர் அவர்களை 'நிரையப் பெண்டிர்' என்று அழைக்கிறார். இதற்கு நரகம் போன்ற கொடுமைத் தன்மை வாய்ந்த பெண்டிர் என்று பொருள்.

## புறத்திணை நன்னாகனார்

ஓய்மான் நல்லியக்கோடனைப் புறத்திணை நன்னாகனார் பாடிய பாடல் நிரயத்தின் கொடுமையை உவமையாகப் புனைந்துரைக்கிறது. தனக்கு நேர்ந்த கொடுமை நரகம் போன்ற துன்பம் தரக் கூடியது; அத்துன்பத்தைக் களைந்த பெருமை ஓய்மான் நல்லியக்கோடனைச் சாரும். இதனை,

நைந்துகரை பறைந்தவென் னுடையு நோக்கி
விருந்தின னளிய னிவனெனப் பெருந்தகை
நின்ற முரற்கை நீக்கி நன்றும்
அரவுவெகுண் டன்ன தேறலொடு சூடுதருபு
இரவினானே யீத்தோ னெந்தை (புறம். 376:5-16)

என்ற பாடலடிகளில் விளக்கியுள்ளார். என் உடையையும் நிலையையும் பார்த்து நல்லியக்கோடன் விரைந்து வந்து எனக்குச் சிறப்புச் செய்தமையால் என் வறுமை நீங்கியது என்கிறார் புறத்திணை நன்னாகனார்.

ஒப்பதும் மிக்கதும் இல்லாத துன்பநிலையம்
நிரயமாகவின், தனக்குத் தானே ஒப்பாகிய
(குறள்.1041) வறுமை "நிரயத்தன்ன வறன்"
"இரவினானேயீத் தோ"னென்றார்[37]

இத்தகைய நரகத் துன்பத்தினைக் களைந்தமையால் தனது கிணைப் பறையானது வேறொரு வள்ளியோனைப் பாடாது என்று மொழிகின்றார். துன்பங்களில் கொடுமையானது நரகத் துன்பம் என்பதால்தான் தானுற்ற வறுமைத் துயருக்கு நிரயத்தை உவமையாக்கியுள்ளார் புலவர்.

## ஆலத்தூர் கிழார்

சோழன் குளமுற்றுத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்தூர் கிழார் (புறம்.34 பாடிய பாடல் மக்களுக்கு அறக்கருத்துகளை எடுத்துரைக்கின்றது.

ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்லென
அறம் பாடிற்றே ........................................... (புறம்.34:1-6)

என்பது அப்பாட்டு. பரிசில் பெற்றுச் செல்லும்போது கிள்ளிவளவனைப் பார்த்துப் பாடியது. இங்குச் சுட்டப்பெறும் 'உய்தி' என்பதற்குப் 'பிழைத்தல்' என்று பொருளுரைப்பர். செய்நன்றி கொன்றோர்ப் பிழைத்தல் இல்லை என்பதால் 'நரகம்' உண்டென்பது பெறப்படுகின்றது. 'உய்தி' என்ற சொல்லிற்கு நரகம் என்று பொருள் இல்லையாயினும் நரகக் குறிப்பை வெளிப்படுத்துகின்றது.

## பாண்டிய நாட்டுப் புலவர்களின் நரகக் கோட்பாடு

பாண்டிய நாட்டுப் புலவர்களில் மதுரை மருதங்கிழார் மகனார் சொகுத்தனார் நரகம் குறித்துப் பாடியுள்ளார் (நற்329). அளவுபடாத நயமுடையராய் நிரயம் போன்ற தீய நெறியைக் கைக்கொள்ளாதொழுகும் பண்புடையவன் தலைவன்; அவன் தாம் வெற்றிகொள்ளும் கருத்துடனே நெறியைப் பார்த்து உறைகின்ற மலைவழியிலே சென்றனனாயினும் நம்மைக் ண்ீவிட்டு அங்கே

தங்குபவன்னல்லன். கார்காலத்து வருவதாகக் கூறிச் சென்றதால் குறித்த காலத்தில் வந்து விடுவான் என்று தலைவியிடம் தோழி ஆறுதல் மொழி கூறித் தேற்றுகின்றாள்.

வரையா நயவினர் **நிரயம்** பேணார்
கொன்றாற்றுத் துறந்த மாக்களின் சுடுபிணன்
இடுமுடை மருங்கில் தொடுமிடம் பெறாஅது
புனிற்று நிரை கதித்த பொறிய முதுபாறு
இறகுபுடைத்து இற்ற பறைப்புன் தூவி
செங்கணைச் செறித்த வன்கண் ஆடவர்
ஆடுகொள் நெஞ்சமொடு அதர்பார்த்து அல்கும்
அத்தம் இறந்தனராயினும் நம் துறந்து
அல்கலர் வாழி தோழி உதுக்காண்
இருவிசும்பு அதிர மின்னிக்
கருவி மாமழை கடன்முகந் தனவே (நற்.329)

என்பது அப்பாட்டு. தலைவனைப் பற்றிய புகழ்மொழிகள் தலைவிக்கு ஆறுதல்தரும் என்றெண்ணித் தோழி பேசுகிறாள். தலைவன் நிரயம் போன்ற தீய நெறியைக் கைக்கொள்ளாதொழுகும் பண்புடையவன் என்பது சொகுத்தனாரின் கருத்து. சேரநாட்டுப் புலவரான நரிவெரூஉத் தலையார் நரகம் போன்ற தீய நெறியைக் கைக்கொள்ள வேண்டாம் என்று அறிவுறுத்த பாண்டிய நாட்டுப் புலவரான சொகுத்தனார் நரகிற்கு இட்டுச் செல்லும் தீயநெறியில் ஒழுகாதவனாகத் தம் தலைவனைப் படைத்துக் காட்டுகிறார். ‘வரையா நயவினர் நிரயம் பேணார்’ என்று புகழ்ந்து பாடுவது தலைவன் மீது தலைவிக்கிருக்கும் நம்பிக்கையை உறுதிப்படுத்துகின்றது.

## கொங்கு நாட்டுப் புலவர்களின் நரகக்கோட்பாடு

கொங்கு நாட்டுப் புலவர்களில் பரணர் நரகம் குறித்து இரண்டு பாடல்களைப் பாடியுள்ளார். (குறுந். 258,292) தலைவியின் அழகு நலனிற்கு அழிசியின் ஆர்க்காடு நகரம் உவமையாக்கப்பட்டுள்ளது (குறுந்.258). அழிசியைப் பற்றிக் கூறப்போந்த புலவர், ‘கள்ளாகிய உணவையும் அழகிய விலங்குத் திரள்களை வேட்டையாடும் தொழிலையும் பகைவர்க்கு நரகத்தைப் போலத் துன்பம் தரும் ஒள்ளிய வாளையும் உடைய இளைய வீரர்களுக்குத் தலைவன்’ என்று புகழ்ந்துரைக்கிறார்.

வாரல் எம்சேரி தாரல்நின் தாரே
அலரா கின்றால் பெரும காவிரிப்
பலர்ஆடு பெருந்துறை மருதொடுபிணித்த
ஏந்து கோட்டு யானைச் சேந்தன் தந்தை
அரியம்அம் புகவின் அம்தோட்டு வேட்டை
**நிரைய ஒள்வாள்** இளையர் பெருமகன்
அழிசி ஆர்க்காடு அன்ன இவள்
பழிதீர் மாண்நலம் தொழுவன கண்டே (குறுந்.258)

என்பது பாட்டு. இப்பாடல் சேரநாட்டுப் புலவரான குமட்டூர் கண்ணனார் (பதிற்.15) பாடலோடு ஒப்புநோக்கத்தக்கது. மருதத்திணையிலமைந்த பாடலில் புறத்தைப் புகுத்தி நிரயம் பாடியிருப்பது பரணரின் புலமைத்திறத்தைக் காட்டுகிறது.

இதே போன்று வரலாற்று நிகழ்வை எடுத்துக்காட்டி நிரயம் பாடியிருப்பது (குறுந். 292) குறிப்பிடத்தக்கது. தலைவிக்குக் காவல்மிகுதி செய்த அன்னை நரகம் பெறட்டும் என்று தோழி வசைபாடுகின்றாள்.

இதற்குப் பெண்கொலை புரிந்த நன்னனை எடுத்துக்காட்டுகிறாள். இற்செறித்தலை கொலைக்கு நிகராகக் கருதியமை இப்பாடலால் தெரியவருகின்றது. நாட்டைக் காவல் செய்யும் முறை நிரயத்தினின் றும் நீங்க வழிசெய்யும் என்ற சிந்தனை ஒருபுறமிருக்க (சேரநாடு-நரிவெரூஉத்தலையார்) காதல் வயப்பட்ட தலைவியைக் காவல் செய்வது நிரயம் புக வழிவகுக்கும் என்ற எண்ணமும் சங்கப் புலவர்களிடம் இருந்தது. புறப்பாடல்களில் நரகம் பாடுதற்கும் அகப்பாடல்களில் நரகம் பாடுதற்கும் பாடுபொருளில் வேற்றுமை உண்டென்பதைச் சங்கப் பனுவல்கள் புலப்படுத்துகின்றன.

## ஒப்பிய நோக்கு

1. பெண்டிரை நிரயத்தோடு ஒப்பிட்டுக் கூறுதலும், பெண்டிருக்கு நரகம் கிட்டுமாறு வசைபாடுதலும் ஆகிய நோக்கில் சேர, சோழ, கொங்குநாட்டுப் புலவர்கள் பாடிச் சென்றுள்ளனர். 'நிரைய நெஞ்சத்தன்னை' (நற்.236:5) என்று சேரநாட்டு நம்பிகுட்டுவனாரும், 'நிரையப் பெண்டிர்' (அகம்.95:12) என்று சோழநாட்டு ஓரோடகத்துக் கந்தரத்தனாரும், 'வரையா நிரையத்துச் செலீஇயரோ அன்னை' (குறுந்.292:6) என்று கொங்கு நாட்டுப் பரணரும் பாடியுள்ளமை அந்நாடுகளில் அகவாழ்க்கைக்கு அளிக்கப்பெற்ற சிறப்பினை விளக்குகின்றன.

2. சேரநாட்டுப் புலவர்கள் (புறம்.5, நற்.329) இசைமொழியிலும் வசைமொழியிலும் பாடியுள்ளமை போன்று சோழநாட்டுப் புலவர்களும் பாண்டிய கொங்கு நாட்டுப் புலவர்களும் பாடியுள்ளனர்.

3. நிரயம் அடைந்தோரைக் குறித்துப் பரணரையன்றி (கொங்குநாடு) வேறு எவரும் பாடிலர்.

4. பிற நாட்டுப் புலவர்களைக் காட்டிலும் பாண்டிய நாட்டுப் புலவர்களிடம் நரகச் சிந்தனை அருகிக் காணப்படுகின்றது.

5. அகத்தில் அன்னை செய்யும் காவல் நன்மை தர வல்லது; ஆயினும் தலைவி இறப்பிற்குக் காரணமாகிவிடுமாதலால் தீய செயலாகக் கருதி நரகத்தோடு இணைத்துப் பாடியுள்ளனர் சங்கப்புலவர்கள்.

**ஆய்வு முடிவுகள்**

✶ சங்கப் புலவர்களின் துறக்க நிரயக் கோட்பாடுகள் நாடுகளினடிப்படையில் பகுக்கப் பெற்றுள்ளன.

✶ சேரநாட்டுப் புலவர்களில் கழாத்தலையார், காக்கைப்பாடினியார் நச்செள்ளையார், குட்டுவன் கீரனார், கூடலூர் கிழார், பெருங்குன்றூர் கிழார் ஆகியோர் துறக்கம் பாடியுள்ளனர்.

✶ கழாத்தலையார் சேரனும் சோழனும் ஒருங்கு துறக்கம் சென்றதையும், மகளிர் உடன்கட்டை ஏறியதையும் பாடியுள்ளார் (புறம்.62). புலவர் சேர நாடாக இருப்பினும் சோழனையும் மதித்துப் பாடியுள்ளமை போற்றத்தக்கது.

✶ வானில் நிகழக்கூடிய மாற்றம் நாட்டிற்குக் கேடு தரும் என்பதைக் கூடலூர் கிழார் யானைக்கண் சேய் மாந்தரஞ்சேரலிரும் பொறையைப் பாடிய பாடலில் (புறம்.229) விளக்கியுள்ளார். துறக்க, நிரயப் பாடல்களில் வானியல் அறிவு சான்ற பாடலைப் பாடியவர் இவர் ஒருவரே.

✶ ஆய் அண்டிரனும் உரிமை மகளிரும் இறந்தமைக்கு வருந்தியதோடு அந்நாட்டுப் புலவர்கள் வேறு நாடு சென்ற நிலையை எண்ணி வருத்தமுற்ற பெருமைக்குரியவர் குட்டுவன் கீரனார் (புறம்.240).

- பகைவரும் துறக்கம் பெறுவர் என்ற செய்தி காக்கைப்பாடினியார் பாடலால் புலனாகின்றது (பதிற்.52). மேலும் நம் பாட்டுடைத் தலைவனை உயர்நிலையுலகம் செல்லாது நிலவுலகில் நீடு வாழுமாறும் வாழ்த்துகின்றார் (பதிற்.54). தம்மைப் போன்ற புலவர்களை மனதில் எண்ணி அவ்வாறு பாடியுள்ளார்.
- ஒழுக்கத்தாலுயர்ந்த தேவர்களைப் புகழ்கின்றார் பெருங்குன்றூர் கிழார் (பதிற்.89).
- பிற புலவர்களைப் போன்றில்லாது தாம் துறக்கம் செல்வதற்காகப் பாடிய பெருமைக்குரிய புலவர் பாலைக்கௌதமனார். இவரும் மனைவியும் துறக்கம் சேர்ந்ததனைப் பதிற்றுப்பத்தின் பதிகம் பேசுகிறது.
- சோழநாட்டுப் புலவர்களில் ஆலூர் மூலங்கிழார், ஐயூர் முடவனார், உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், உறையூர் முதுகண்ணன் சாத்தனார், கடியலூர் உருத்திரங் கண்ணனார், காரி கிழார், குறுங்கோழியூர் கிழார், கோப்பெருஞ்சோழன், சாத்தந்தையார், செல்லூர்க் கோசிகன் கண்ணனார், தாயங்கண்ணனார், தும்பி சொகினனார், புல்லாற்றூர் எயிற்றியனார், மாமூலனார், வடமோதங்கிழார் ஆகியோர் துறக்கம் பாடிய சிறப்பிற்குரியவர்களாவர்.
- ஈதலும் ஏற்றலும் இல்லாத தேவருலகினும் நின்னாடு சிறப்புடையது என்று சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை ஆலூர் மூலங்கிழார் பாடுகின்றார் (புறம்.38). தாயங்கண்ணனார் பாடலும் ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது

(அகம்.213). கடியலூர் உருத்திரங் கண்ணனாரும், குறுங்கோழியூர் கிழாரும் தேவருலகினைப் போன்ற இன்பம் தரக்கூடியதாகப் பாடியிருப்பது இதற்கு மறுதலையாக அமைந்துள்ளது.

- ✶ ஐயூர் முடவனார் (புறம் 228), உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் (புறம்.241), மாமூலனார் (அகம்.55 சேரலாதன்),வடமோதங்கிழார் (புறம்.260) ஆகியோரது பாடல்கள் தம் பாட்டைத் தலைவன் இறந்தமைக்கு வருந்தி அவனுடைய புகழைப் போற்றிப் பாடுவதாக இடம்பெற்றவை.
- ✶ மறுமைப் பயன் கருதிக் கொடுப்போரை 'அறவிலை வணிகர்' என்றழைக்கின்றார் முடமோசியார் (புறம்.134).
- ✶ 'புலவர் பாடும் புகழுடையார், வலவனேவா வானவூர்தியில் செல்வர்' என்பதால் விண்ணுலகெய்துவர் என்பது பெறப்படுகிறது (புறம்.27). இங்ஙனம் முதுகண்ணன் சாத்தனார் பாடியுள்ள பாடல் மோசிகீரனார் (புறம். 50) பாடலோடு ஒப்பு நோக்கத்தக்கது.
- ✶ காரி கிழார் 'முப்புணர் அடுக்கு' என்றும் 'ஆனிலை உலகம்' என்றும் குறித்துள்ளவை துறக்கத்தையும் வீடுபேற்றையும் குறிப்பனவாகும் (புறம்.6).
- ✶ புல்லாற்றூர் எயிற்றியனார், கோப்பெருஞ்சோழன் போர் செய்யாதிருக்க உயர்நிலையுலகச் சிந்தனையைக் காட்டி விளக்குகின்றார் (புறம்.213). அதனால் மனம் மாற்றமடைந்த கோப்பெருஞ் சோழனும் தொய்யாவுலகச் சிந்தனையை மக்களுக்கு எடுத்துரைக்கின்றார் (புறம்.214).
- ✶ வீர சுவர்க்கம் அடைவோர் தேவருலக மகளிரை மணந்து இன்பம் எய்துவர் என்பர் சாத்தந்தையார் (புறம்.287).

* மறுமையுலகம் செல்ல மக்கட் பேற்றின் இன்றியமையாமையை வலியுறுத்துகின்றார் செல்லூர்க்கோசிகன் கண்ணனார் (அகம். 66).

* உயர்நிலையுலகம் சென்றவனின் பெருமையும் கைம்மைத் துயருற்று வாழும் அவன் மனைவியின் துன்பமும் தும்பி சொகினனாரால் பாடப்பெற்றுள்ளது (புறம்.249).

* துறக்கம் சேர்ந்த முன்னோர்க்கு உதியஞ்சேரலாதன் பெருஞ்சோறு படைத்திட்டமை மாமூலனார் பாடலால் (அகம்.233) தெளிவாகின்றது.

* வடமோதங்கிழார் நடுகல் வழிபாட்டிற்கு வழிகாட்டுகின்றார் (புறம்.260). துறக்கம் சென்றதாகக் கருதப்படும் வேறெவருக்கும் நடுகல் நட்டதாகக் குறிப்பில்லை.

* கபிலர், இளம்பெருவழுதியார், கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி, கடுவனிளவெயினனார், கீரந்தையார், குடவுலவியனார், நக்கீரர், நப்பண்ணனார், நல்லமுசியார், நல்லெழுநியார், நல்வழுதியார், நல்லந்துவனார், பேயனார், மாங்குடி மருதனார், மாறோக்கத்து நப்பசலையார் துறக்கம் பாடிய பாண்டிய நாட்டுப் புலவர்களாவர்.

* செல்லும் உலகத்துச் செல்வம் வேண்டின் நீரறம் செய்ய வேண்டும் என்பது குடபுலவியனாரின் துறக்கக் கோட்பாடு (புறம்.18).

* கோப்பெருஞ்சோழனைப் போன்று கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதியும் இவ்வுலகப் புகழ் குறித்து மொழிகின்றார். தேவரமிழ்தம் கிடைத்தாலும் தனித்து உண்ணாது ஊருடன் கூடி வாழவேண்டும் என்பது இளம்பெருவழுதியின் எண்ணம் (புறம். 182).

* தேவருலகத்தில் வாழ்வோருக்குப் பண்டைக் காலத்தில் விழா எடுத்தமையினைக் கபிலரது பாடல் (பதிற்.70) தெரிவிக்கின்றது.

* கபிலரது அகப்பாடல்கள், தேவருலகினை உயர்வாக எண்ணுதலும் குறைவாகக் கருதுதலும் ஆகிய இருவேறு நிலைகளில் பாடப்பெற்றவை (குறுந்.288:361).

* கலித்தொகையில் துறக்கம் பாடிய பெருமை நல்லந்துவனாருக்குரியது. கணவன் மீதுள்ள வேட்கை பெண்டிருக்குத் துறக்கத்தைக் கொடுக்கவல்லது (கலி.143) என்றும், அறநெறி பிழையாது நடப்பின் துறக்கம் கிட்டும் (கலி.118) என்றும், தவம் செய்வோர் துறக்கம் பெறுவர் என்றும் பலநிலைகளில் பாடியுள்ளார் நல்லந்துவனார். அறநெறிச் சிந்தனை நப்பண்ணனார் பாடலிலும் (பரி.19) காணப்படுகின்றது.

* தேவருலகம் வந்து காண்டற்கினியது மதுரை என்று மாங்குடி மருதனார் பாட (மது.689) தன் நீர்ப்பரப்பின நிழலில் தேவருலகைக் காட்டும் எழில் நிறைந்தது வையை ஆறு என்று நல்வழுதியார் பாடுகின்றார் (பரி.12).

* முருகன் பரங்குன்றம் துறக்கம் அளிக்கவல்லது என்று நல்லழுசியார் பாட (பரி.17), திருமாலின் திருமார்பினைத் தொழுவோர்க்குத் துறக்கம் கிட்டும் என்று நல்லெழுநியாரும் (பரி.13), திருமாலிருங்குன்றம் காண்போர்க்குத் துறக்கப்பேறு வாய்க்கப் பெறும் என்று இளம்பெருவழுதியாரும் (பரி.15) பாடியிருப்பது துறக்கக் கோட்பாட்டின் வளர்ச்சியைக் காட்டுகின்றது. இக்கோட்பாடு பிற்காலத்தின் பக்தி இலக்கியங்களில் சிறப்பிடம் பெறலாயிற்று.

* மாங்குடி கிழாரென்றும் மாங்குடி மருதனாரென்றும் இருவேறு விதமாகக் குறிக்கப் பெறினும் இருவரையும் ஒருவராகக் கருதித் துறக்கப்பாடல்கள் ஆராயப் பெற்றுள்ளன. 'பகைவரும் துறக்கம் பெறுவர்' என்ற காக்கைப்பாடினியார் சிந்தனையோடு இவரது பாடலும் (புறம்.26) ஒப்புநோக்கத்தக்கது. மதுரைக்காஞ்சியில் பாண்டியன் நெடுஞ்செழியனைப் புகழ்ந்துரைக்கும் போது தேவருலகக் கருத்துப் புலப்படப் பாடுகின்றார் மாங்குடி மருதனார்.

* ஐங்குறுநூற்றில் பேயனாரால் பாடப்பெற்ற இரண்டு பாடல்கள் (401,442) மட்டுமே துறக்கத்தைக்குறிப்பிடுகின்றன. இவ்விரு பாடல்களும் இல்லறக் காட்சியினைத் தேவருலகக் காட்சியோடு பொருத்திப் பார்க்கின்றன.

* பரணரும், ஔவையாரும் துறக்கம் பாடிய கொங்கு நாட்டுப் புலவர்களாவர். மகள் மறுத்தல் காரணமாக வாராவுலகம் புக விரும்புகின்றான் (புறம். 314) ஒரு வேந்தன். பரணரின் இப்பாடல் வீடுபேறு பற்றிய எண்ணம் சங்க காலத்தில் இருந்தமையினைப் புலப்படுத்துகின்றது.

* ஈமச் சடங்கினால் துறக்கம் பெறுவதை ஔவையாரது பாடல் (புறம்.93) விளக்கிக் காட்டுகிறது. ஆனால் அத்துறக்கம் பெருமையைத் தருவதல்ல என்பது புலவரின் கருத்து.

* நாடு வரையறுக்க இயலாப் புலவர்களில் சிறுவெண்டேரையாரும் (புறம்.362), பிரமனாரும் (புறம்.357), காவிட்டனாரும் (புறம்.359) வாழ்க்கை நிலையாமையை எடுத்துக் கூறி துறக்கப்பேற்றின் சிறப்பினை இயம்பியுள்ளனர்.

* பாண்டிய நாட்டுக் கபிலரைப் போன்று வெண்பூதனும் செவிலிக்குத் துறக்கம் கிடைக்க வாழ்த்துகின்றார். (குறுந். 83)

* பரூஉ மோவாய்ப் பதுமனது பாடல் (குறுந்.101.) கபிலரது மற்றொரு பாடலோடு ஒப்பு நோக்கத்தக்கது. இங்குத் தலைவியின் இன்பம் பெரிதாகப் பேசப்படுகின்றது.

* திருமாலைப் பற்றியும், செவ்வேளைக் குறித்தும் பரிபாடல் திரட்டில் அமைந்த பாடல்கள் வினைப்பயன் துய்ப்பதையும், பரங்குன்றம் துறக்கம் வழங்குதலையும் வெளிப்படுத்துகின்றன.

* சங்கப் புலவர்கள் துறக்கம் பாடிய அளவிற்கு நிரயம் குறித்து மிகுதியாகப் பாடிலர்.

* குமட்டூர் கண்ணனார், நரிவெரூஉத்தலையார், நம்பிகுட்டுவனார் ஆகிய சேரநாட்டுப் புலவர்களும், ஓரோடகத்துக் கந்தரத்தனார், புறத்திணை நன்னாகனார், ஆலத்தூர் கிழார் ஆகிய சோழ நாட்டுப் புலவர்களும், மதுரை மருதங்கிழார் மகனான சொகுத்தனாரும், கொங்கு நாட்டுப் புலவரான பரணரும் நரகம் பற்றித் தம் பாக்களில் புனைந்துள்ளனர்.

* நாட்டைச் சிறப்புடன் காவல் செய்வது நிரயம் நீங்க வழிகோலும் என்று நரிவெரூஉத்தலையார் பாட (புறம்.5), காவல் சிறப்புடைய அன்னை நிரையம் போன்ற நெஞ்சமுடையவள் என்று நம்பி குட்டுவனார் (நற்.236) பாடுகின்றார். பகைவர் நிரயத்துன்பம் எய்துவர் என்று பாட்டுடைத் தலைவனைச் சிறப்பிக்கின்றார் குமட்டூர் கண்ணனார் (பதிற்.15).

* நன்றி மறந்தவர்கள் நரகத் துன்பத்தினின்றும் நீங்கமாட்டார் என்பது ஆலத்தூர் கிழாரது கோட்பாடு. பிற புலவர்களினின்றும் ஆலத்தூர் கிழாரது அறம் சார்ந்த நரகக் கோட்பாடு சிறப்புடையது.
* பிறருக்குத் துன்பம் தரும் செயல் நரகத்தைக் கொடுக்கக் கூடியதென்பதால் பெண்கொலை புரிந்த நன்னனுக்கு நரகம் கிட்டியதாகப் பாடுகின்றார் பரணர். சங்கப் புலவர்களுக்கிருந்த துணிவு இதனால் புலனாகின்றது (புறம்.292).

## சான்றெண் விளக்கம்

1. உ.வே.சாமிநாதய்யர் (பதி.1971), **புறநானூறு மூலமும் பழைய உரையும்,** உ.வே.சாமிநாதய்யர் நூல்நிலையம், திருவான்மியூர், சென்னை, ப.151

2. மு. சண்முகம்பிள்ளை (ப.ஆ.1995), **தொல்காப்பியம். பொருளதிகாரம் இளம்பூரணம் (முதற்பகுதி)**, முல்லை நிலையம், 43, புதுத்தெரு, மண்ணடி, சென்னை, பக்.120:121

3. ஔவை. சு.துரைசாமிப் பிள்ளை(உ.ஆ), **புறநானூறு மூலமும் உரையும் (இரண்டாம் பகுதி),** சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி, சென்னை. ப.88.

4. இரா. நிர்மலா (1989), **தமிழிலக்கியத்தில் மூப்பும் இறப்பும்** (பிஎச்.டி.ஆய்வேடு), சென்னை பல்கலைக்கழகம், ப.233

5. அ.ஜம்புலிங்கம் (2003), **சங்க கால வேந்தர்களின் சமுதாயப் பணி,** இந்துமதி பதிப்பகம், 3,லால்பேட்டைத் தெரு, சிதம்பரம்-1, ப.70

6. ஔவை சு.துரைசாமிப் பிள்ளை (உ.ஆ.1958), **பதிற்றுப் பத்து மூலமும் உரையும்,** சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, ப.65.

7. அ.ஜம்புலிங்கம் (2003), **சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி,** இந்துமதி பதிப்பகம், 3, லால்பேட்டைத் தெரு, சிதம்பரம்,ப.63

8. உ.வே. சாமிநாதய்யர் (பதி.1971), **புறநானூறு மூலமும் உரையும்,** உ.வே.சாமிநாதய்யர் நூல்நிலையம், திருவான்மியூர், சென்னை. ப.29

9. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), **புறநானூறு மூலமும் உரையும் (இரண்டாம் பகுதி)**, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி, சென்னை, ப.62.

10. மேலது, **முதல் பகுதி**, ப.282

11. மேலது, **இரண்டாம் பகுதி**, ப.91

12. மேலது, **முதல் பகுதி**, பக்.77:78

13. நச்சினார்க்கினியர் (உ.ஆ.1956), **பத்துப்பாட்டு மூலமும் உரையும்** கபீர் அச்சுக்கூடம், சென்னை, ப.182

14. மேலது, ப.400.

15. பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ.2001), **பத்துப்பாட்டு பட்டினப்பாலை**, சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், 522, டி.டி.கே. சாலை, சென்னை, ப.53

16. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை (உ.ஆ), **புறநானூறு மூலமும் உரையும் (முதல் பகுதி)**, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, ப.17.

17. மேலது, ப.62.

18. ப. மருதநாயகம் (2004), **புதுப்பார்வைகளில் புறநானூறு**, காவ்யா, 14, முதல் குறுக்குத் தெரு, டிரஸ்ட்புரம் கோடம்பாக்கம் சென்னை,ப.81

19. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), **புறநானூறு மூலமும் உரையும் (இரண்டாம் பகுதி)**, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.ப.176

20. மேலது, **முதல் பகுதி**, ப.54.

21. மேலது, ப.396.

22. ஔவை.சு.துரைசாமிப் பிள்ளை (உ.ஆ), **பதிற்றுப்பத்து மூலமும் உரையும்,** சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. ப-335

23. சு.அருளம்பலவனார், **பதிற்றுப்பத்து ஆராய்ச்சியுரை (இரண்டாம் பாகம்),** அ.சிவானந்தநாதன் வெளியீடு, காரை நகர், யாழ்ப்பாணம், ப.627.

24. மு. சண்முகம்பிள்ளை (ப.ஆ.1994), **குறுந்தொகை மூலமும் உரையும்,** தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், ப.253.

25. நச்சினார்க்கினியர் (உ.ஆ.1956), **பத்துப்பாட்டு மூலமும் உரையும்** கபீர் அச்சுக்கூடம், சென்னை, ப.79.

26. மேலது, ப.76.

27. நச்சினார்க்கினியர் (உ.ஆ), **கலித்தொகை மூலமும் உரையும்,** சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், சென்னை, ப.431.

28. ஔவை. சு.துரைசாமிப்பிள்ளை (உ .ஆ), **புறநானூறு மூலமும் உரையும் (முதல் பகுதி),** சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, ப.69.

29. நச்சினார்க்கினியர் (உ.ஆ), **பத்துப்பாட்டு மூலமும் உரையும்,** கபீர் அச்சுக்கூடம், சென்னை, ப.242.

30. பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ.1961), **ஐங்குறுநூறு மூலமும் உரையும்,** திருநெல்வெலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், ப.565.

31. மேலது, ப.610.

32. ப. மருதநாயகம் (2004), **புதுப்பார்வைகளில் புறநானூறு**, காவ்யா, 14, முதல் குறுக்குத் தெரு, டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம், சென்னை. ப.135.

33. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), **புறநானூறு மூலமும் உரையும் (இரண்டாம் பகுதி)**, திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், ப.328.

34. ஔவை சு. துரைசாமிப் பிள்ளை (உ.ஆ), **புறநானூறு மூலமும் உரையும் (முதல் பகுதி)**, திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம். ப.14.

35. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), **பதிற்றுப்பத்து மூலமும் உரையும்**, திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், ப.31.

36 மேலது, ப.35.

37. ஔவை சு.துரைசாமிப் பிள்ளை (உ.ஆ), **புறநானூறு மூலமும் உரையும் (இரண்டாம் பகுதி)**, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், ப.374.

இயல் - 4



# சொர்க்கம் நரகம் அடையும் நெறி

# சொர்க்கம் நரகம் அடையும் நெறி

தொன்மைக் காலத்தில் இறப்பிற்குப் பின்னும் உயிர் வாழும் என்ற நம்பிக்கை இருந்ததைச் சங்க இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன. அதனால் மண்ணுலகில் வாழும்போது செம்மையாக வாழ்வதற்கேற்ற நல்லறம், தீயறங்களை வகுத்துக் கொண்டனர். நல்லது செய்து துறக்கம் பெறுதற்கான நெறியினையும் அல்லது செய்தால் பெறக்கூடிய நரகத்திற்கான வழியினையும் சங்கப் புலவர்கள் தெள்ளிதின் எடுத்துரைக்கின்றனர். இந்நெறி சங்கப் புலவர்களிடம் ஏற்படுத்திய தாக்கத்தினை விளக்குவது இவ்வியல்.

## *சொர்க்கம் எய்தும் நெறி*

உடம்பினின்று நீங்கிய உயிர் தத்தம் வினைக் கேற்ற பயனை நுகரும் நல்வினை செய்த உயிர் துறக்கத்தினை அடையும். சங்கச் சமூகத்தினர் நன்னெறியுடன் வாழ்வதற்குத் துறக்கக் கோட்பாட்டினை வரையறுத்துக் கொண்டனர். துறக்கம் புக விழைந்த சங்க காலத்தவர் என்னென்ன செயல் செய்தனர் என்று சங்கப் புலவர்கள் பாடிச்சென்றுள்ளனர். இந்நெறி ஆடவர், பெண்டிர் என்று அனைவருக்குமாகச் சொல்லப்பட்டுள்ளது. துறக்கம் செல்லுதற்குரிய நெறியாக,

1. வீரம்
2. கொடை
3. வடக்கிருத்தல்
4. தவம்
5. வேள்வி செய்தல்
6. ஆண்மக்கட்பேறு
7. கணவனொடு இறத்தல்
8. நல்வினையறம்
9. புகழ்
10. இறைமை

ஆகியவற்றைச் சங்கப்பனுவல்களால் அறியமுடிகின்றது. இவை பிறர்நலம் பேணும் பொருட்டும் தன்னலம் கருதியும் செய்யப்படுவன.

***வீர சுவர்க்கம்***

வீரயுகக் காலமாகிய சங்க காலத்தில் போரில் விழுப்புண்பட்டு இறத்தல் பெருமையாகக் கருதப்பட்டது. வேந்தர்களும் குறுநில மன்னர்களும் தங்களுக்குள் போரிடும் நிகழ்ச்சியில் புலவர்கள் அவரவர்தம் சிந்தனைக்கேற்பத் துறக்கம் பற்றிய எண்ணத்தை முன்னிறுத்தியுள்ளனர். துறக்கத்திற்கு வீரம் அடிப்படைக் காரணமாக அமைந்துள்ளதைச் சங்கப் பாடல்கள் தெளிவுபடுத்துகின்றன.

உயர்ந்தோர் உலகச் சிந்தனை புகுதற்கான
ஆரம்பக் காரணம் இதுவே ஆகும். சங்ககாலம்
பல்வேறு தலைமைகளும் தங்களுக்குள் முட்டி
மோதிக் கொண்ட நிலையில் வேந்தர்கள்
மேம்பாடு அடைந்த காலம். இச்சூழலில்
வீரம் மையப்படுத்தப்பட்ட பாடுபொருளாய்
இருப்பதைப் புறப்பாடல்கள் காட்டுகின்றன[1]

என்ற கருத்து தெள்ளிதின் விளக்குகிறது. போரில் விழுப்புண் பெறுதலைப் பெரும்பேறாக வீரர்கள் கருதினர். மார்பிலும் முகத்திலும் பெறும் விழுப்புண், வீரனைச் சுவர்க்கத்திற்கு இட்டுச் செல்லும். வெற்றி பெறும் எண்ணம் ஈடேற வீரர்களிடையே துறக்கச் சிந்தனை வலியுறுத்தப்பெற்றது.

நிரை மீட்புச் செய்த போரில் மார்பில் புண்பட்டு இறந்தான் ஒரு தலைமகன். அவன் மண்ணுலகில் வாழ்ந்த காலத்தில் பாணர்க்கும்

புலவர்க்கும் நிலனும் பொருளும் வழங்கிப் புகழ் பெற்றவன் ; ஆகையால் ஒரு பாணன் அவனை நாடிச் செல்ல, அவன் அரிது செல்லுலகம் சென்றதாக மற்றொரு பாணன் விளக்கியுரைக்கின்றான். இதனை,

முன்னூர்ப் பூசலிற் றோன்றித் தன்னூர்
நெடுநிரை தழீஇய மீளியாளர்
வடுகணை நீத்தந் துடிபு ணையாக
வென்றி தந்து கொன்று கோள் விடுத்து
..................................................................
அரிது செல் செலகிற் சென்றனன் (புறம்.260:12-21)

என்ற பாடல்வழி அறியமுடிகின்றது. இங்கு வீரப்புகழால் கரந்தைப் போருடற்றியவனுக்கு அரிது செல்லுலகமாகிய துறக்கம் வழக்கப்படுகிறது.

அறப்போர் புரிந்து அப்போரில் உயிர்துறப்பதனை வீரர்கள் பெரிதும் விரும்புவர். இதற்குக் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் போரிட்டு, இருவரும் அரும்பெறலுலகம் சென்ற நிகழ்ச்சி சான்றாக அமைகின்றது. இந்நிகழ்ச்சியைக் கழாத்தலையார் சிறப்பித்துப் பாடியுள்ளார் (புறம்.62). "அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்" (புறம்.62.7) என்ற குறிப்பு அவர்களின் போர்த் திறனை எடுத்துரைக்கின்றது. இருவரும் புரிந்த அறப்போர் துறக்கம் செல்ல வழி கோலியது.

இதற்கு,

பழந்தமிழர் போர்கள் பெரும்பாலும்
உரிமையைக் காக்கவும் தன்மானம்
காக்கவும் நடைபெற்ற தற்காப்புப் போர்கள்
என்றே கூறலாம் போராற்றல் அற்ற மக்கள்
கூட்டம் எளிதில் பிறர்க்கு அடிமையாகும்.
போராற்றல் உள்ள மக்களே தமக்கென உள்ள
பண்பாடு மொழி ஆகியவற்றைப் பாதுகாத்து
வளர்க்க இயலும்[2]

என்ற கருத்து அரண் சேர்க்கும். போரில் வெற்றி பெற்று வேந்தனால் தண்ணடை பெறுவதினும் போரில் உயிர் நீப்பதைப் பெருமையாகக் கருதுவது வீரர்களின் இயல்பு. அங்ஙனம் இறந்துபட்டோர் உயர்நிலையுலகம் சென்று அங்குள்ள தேவமகளிரை மணந்து இன்புறுவர். இதனை,

தண்ணடை பெறுதல் யாவது படினே
மாசின் மகளிர் மன்ற னன்றும்
உயர்நிலை யுலகத்து நுகர்ப வதனால்
வம்ப வேந்தன் தானை
இம்பர் நின்றுங் காண்டிரோ வரவே (புறம்.287.10-14)

என்ற சாத்தந்தையார் பாடல் தெளிவுறுத்தும். கரந்தைப் போருடற்றியவனுக்குத் துறக்கம் கிட்டுவதோடு அவ்வுலகின் அனைத்து நலன்களும் கிடைக்கப்பெறும் என்பதை இப்பாடல் காட்டுகின்றது.

வேந்தரை எதிர்த்தோ ஆதரித்தோ போரிட்டு
வீரசுவர்க்கம் புகுவது மேலானது என மறுமை
வாழ்வின் மேம்பாடு மட்டுமே
எடுத்துரைக்கப்படுகிறது. மருதநிலம் பெற்று
வாழ்தலில் பயனில்லை என இம்மை வாழ்வு
நோக்கம் புறந்தள்ளப்பட்டுக் கற்பனை உலகான
சுவர்க்க வாழ்வின் கற்பித மேம்பாடுகள்
வலியுறுத்தப்படுகின்றன[3]

தண்ணடை அளித்த வேந்தர் செயலன்றிப் பெறவிழைந்த வீரரின் எண்ணங்களையும் சங்கப் பாக்கள் (புறம்.285,297) புலப்படுத்தியுள்ளன. தண்ணடை பெற விரும்பிய வீரர்களின் எண்ணங்கள் துறக்கத்தை முன்னிறுத்தி மாற்றம் பெற்றதைச் சாத்தந்தையார் பாடல் (புறம்.287) தெற்றென விளக்குகின்றது.

சங்க காலத்திய போருக்குரிய காரணங்களுள் 'மகள் மறுத்தல்' குறிப்பிடத்தக்கது. போருக்குக் கிளம்பிய வேந்தன் மணம் இல்லையேல் மரணம் என்று வஞ்சினம் மொழிந்து செல்கின்றான். விரும்பிய பெண் கிடைக்காமைக்குத் தற்கொலை முயற்சியைக் கைக்கொண்டால் இவ்வுலகப் புகழும் மேலுலகத் துறக்கமும் கிட்டாது மாண்டவனாகக் கருதப்படுவான். ஆகவே இவ்வேந்தன் போரில் பொருது வாராவுலகம் புக விரும்புகின்றான். இதனை,

ஆரம ருழக்கிய மறங்கிளர் முன்பின்
நீளிலை யெஃக மறுத்த வுடம்பொடு
வாரா வுலகம் புகுத லொன்றெனப்
படை தொட்டனனே............................ (புறம்.341.13-16)

என்ற அடிகள் தெளிவுறுத்தும். தாம் விரும்பிய பெண்ணை மணத்தல் துறக்க இன்பத்திற்கு ஒப்பாகக் கருதப்பட்டது.

வீரம் பகைவரிடத்துச் சிறப்புற்றிருப்பின் அவர்களுக்கும் துறக்கம் கிட்டும் என்று ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைப் பாடிய காக்கைப்பாடினியார் குறிக்கிறார் (பதிற்.52). தோலாமைக் கேது வாகிய தும்பைமாலை விளங்கச் சேரலாதனின் பகைவரில் பலர் சிறப்பினும் அவரனைவரும் வீரசுவர்க்கம் எய்துவர். அத்தகைய நல்ல போர்களை வஞ்சியாது செய்து மேம்பட்ட சிறப்புடையவன் என்று சேரலாதனைப் பாராட்டுகின்றார் புலவர். இதற்கு,

> தெவ்வழியிற் பலர்படக்கொன்று
> வென்றியதனோடமையாது அப்பலர்க்கும்
> உயர்நிலையுலகம் வழங்கி இன்புறுத்துதல் பற்றி,
> சேரலாதன் செய்த போரை "நல்லமர்" என்றும்
> அதனை யறத்தாற்றிற் பொருது கடக்கும்
> அவன் வன்மையைச் "செல்லுறழ் தடக்கை" எனக்
> கைம்மேல் வைத்தும் கூறினார்[4]

என்று விளக்கமுரைப்பர். துறக்க இன்பம் கருதிப் போரில் இறத்தலை விரும்பியேற்றனர் சங்க கால ஆடவர். போருக்குரிய காரணங்கள் வேறாயினும் விழுப்புண் பெற்று வீரசுவர்க்கம் பெறும் எண்ணமும் துறக்கச் சிந்தனையும் அக்கால ஆண்மக்களுக்கு இருந்தமை இப்பாக்களால் தெரியவருகின்றது. பொருள் மாறுபட்டிருப்பினும் பயன் ஒன்று.

மாமூலனார் பாலைத் திணைப் பாடலில் (அகம்.233) வீர சுவர்க்கத்தை முன்னிறுத்தியுள்ளார். உதியஞ்சேரலாதனின் முன்னோர்கள்

வீரப்போர் புரிந்து துறக்கம் சென்றதாகவும், அவர்களுக்குப் பலியாகப் பெருஞ்சோறு படைத்திட்டதாகவும் அப்பாடலில் குறிக்கப்பெற்றுள்ளது. 'துறக்கம் எய்திய முன்னோர்' என்று மட்டும் குறிக்காது வீரம் பொருந்திய குதிரைப் படைகளுடன் புறக்கிடாத வலிமையுடைய துறக்கம் சென்ற முதியர் என்பது துறக்கப் பேற்றிற்கான நெறியினை வலியுறுத்துகின்றது.

மூப்பினும் பிணியினும் இறவாது அமர்க்களத்து வீழ்ந்தாரே துறக்கம் பெறுவர். அதியமான் நெடுமான் அஞ்சியைப் புகழ்ந்த ஔவையார், துறக்க நெறியினைப் பின்பற்றாதோருக்கு ஈமச்சடங்கு துறக்கம் வழங்குவதனை விளக்கியுள்ளார்.

நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக்
காதன் மறந்தவர் தீதுமருங் கறுமார்
அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்
திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி
மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த
நீள்கழன் மறவர் செல்வுழிச் செல்கென
வாள்போழ்ந் தடக்கலு முய்ந்தனர் மாதோ

(புறம்.93.5-11)

என்பது அப்பாட்டு. போரில் மடியாமல் நோய்வாய்ப்பட்டிறந்த அரசர் பிணங்களைத் தருப்பைப்புல் மேல் கிடத்தி வாளாற் பிளந்து புதைத்து அவர்கள் உயிர்களையும் வீரசுவர்க்கம் எய்துமாறு செய்தனர் நான் மறை அந்தணர். 'வாளாற் பிளத்தல்' வீரத்திற்கு அடையாளமாகக் கருதப்பட்டது. நோய்வாய்ப்பட்டோரும் வீரக் கழலணிந்த வேந்தர் செல்லும் உலகிற்குச் செல்ல பாடப்பெற்ற நெறி மறக்குடியின், பெருமையைப் பறைசாற்றுகின்றது.

அரச குலத்தில் செத்துப் பிறக்கின்ற குழந்தைகள், கருப்பையிலிருந்து வழுவி விழுகின்ற உறுப்பில் பிண்டங்கள் ஆகியவற்றைக் கூட வாள் கொண்டு காயப்படுத்திய பின்னர்தான் அடக்கம் செய்வர் என்பது சேரன் கணைக்கால் இரும்பொறையின் கருத்து.

இதனை,

குழவி யிறப்பினும் ஊன்றடி பிறப்பினும்
ஆளன் றென்று வாளிற் றப்பார் (புறம்.74.1-2)

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன. இங்ஙனம் செய்தலால் வீரமரணத்திற்கு ஒப்புடையதாகக் கருதப்பெற்றது. வீர மரணம் துறக்கத்திற்கு வழிகோலுவதனை இப்பாடல் இலைமறைகாயாக வெளிப்படுத்துகின்றது. மன்னர்களைச் சார்ந்து வாழ்ந்த சங்கப் புலவர்கள், போருக்குச் செல்ல மக்களைத் தூண்டுதற்கு வீர சுவர்க்கத்தைக் கருவியாகக் கொண்டனர்.

### வடக்கிருத்தலும் துறத்தலும்

வடக்கிருத்தல் நிகழ்ச்சி வீர மரணத்துடன் நெருங்கிய தொடர்புடையது. சங்க காலத்தில் போரில் மாளாது உயிர் மீண்டோரும் இம்மை வாழ்வைத் துறந்து உயிர் துறக்க எண்ணியோரும் வடக்கிருந்து உயிர் நீத்தலை விரும்பினர். அங்ஙனம் வடக்கிருத்தல் துறக்கத்திற்கு இட்டுச் செல்லும் என்று பழந்தமிழர் நம்பினர்.

மேலுலகத்தை அடைய விரும்பினோர்
இவ்வுலக நுகர்ச்சியைத் துறந்து விரதத்தால்
உடலை மெலிவித்து யோகப் பயிற்சியால்
உயிரை நீத்தற்குத் தாம் உறைந்த இடத்தை

விட்டுப் புண்ணிய திசையாகிய வடதிசையிற்
சென்று தங்குதல், மீளாமல் நியமத்துடன்
வடதிசையிற் செல்லுதலும் மரபு ; அங்ஙனம்
செல்லுதல் உத்தரகமனமென்றும், மகாப்பிரத்
தானமென்றும் கூறப்படும்[5]

என்று வடக்கிருத்தலுக்கு விளக்கம் கூறுவர். போரில் வெற்றிபெற்று வீரசுவர்க்கம் பெற விழைந்த கோப்பெருஞ்சோழன், சான்றோர் அறிவுரையால் தம் மக்கள் மீது போருக்கெழுவதினின்றும் நீங்கினான். எனினும் மக்கள் செயலால் மானம் பொறாது துறவு பூண்டு வடக்கிருந்து உயிர் துறக்க எண்ணினான். வடக்கிருத்தல் துறக்க வுலக நுகர்ச்சிக்கு வித்தாக அமையும் என்பதில் கோப்பெருஞ் சோழனுக்கு மிகுந்த நம்பிக்கை இருந்தமை அவன் பாடலால் (புறம்.214) புலனாகின்றது.

கோப்பெருஞ்சோழனைப் போன்று பெருஞ்சேரலாதனும் வடக்கிருந்தமையினைச் சங்கப் பாக்களால் அறியமுடிகின்றது. கரிகாலனுடன் வெண்ணிப் போர்க்களத்தில் போரிட்ட சேரலாதன் தான் தோல்வியடைந்த காலத்திலேயே வாள் வடக்கிருந்தனன் ; அதனைக் கேட்ட சான்றோர் பலரும் அவனுடன் இருந்து துறக்கம் புகுந்தனர். இதனை,

..........................................ஒண்படைக்
கரிகால் வளவனொடு வெண்ணிப்
பறந்தலைப் பொருது புண் நாணிய
சேரலாதன் அழிகள மருங்கின் வாள்
வடக்கிருந்தென இன்னா இன்னுரை கேட்ட
சான்றோர் அரும்பெறல் உலகத்து

அவனொடு செலீஇயர் (அகம்.55.9-14)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. விழுப்புண்பட்டோர் எய்திய துறக்கம் சேரலாதனுக்கும் கிடைக்கப் பெற்றது. சேரலாதன் வடக்கிருந்த நிகழ்ச்சி புறநானூற்றுப் பாடல்களிலும் (புறம்.65,66) இடம் பெற்றுள்ளமை ஈண்டு குறிக்கத்தக்கது. வடக்கிருத்தலைக் குறித்துப் பல்வேறு பாடல்கள் காணப்படினும் சில பாடல்கள் மட்டும் துறக்கச் சிந்தனையை வெளிப்படுத்துகின்றன. எனினும் வடக்கிருத்தலின் நோக்கம் துறக்கம் சேரும் எண்ணத்தின் பொருட்டாதல் வேண்டும்.

### கொடை வழங்கிய துறக்கம்

'செல்வத்துப் பயனே ஈதல்' (புறம்.189) என்பர் சான்றோர். இம்மைப் பயன் கருதிச் செல்வம் சேர்க்க விழைவது மாந்தர் இயல்பு. அச்செல்வம் பிறர்க்குப் பயன்படின் அதனால் மறுமைப்பயன் கிட்டும்.

இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
அறவிலை வணிக னாயலன் பிறரும்
சான்றோர் சென்ற நெறியென
ஆங்குப் பட்டன் றவன்கை வண்மையே (புறம்.134)

என்ற பாடல் ஆய் அண்டிரனின் கைவண்மையைச் சிறப்பிக்கின்றது. அவன் மறுமைப் பயன் நோக்கிப் பொருள் கொடுப்பவனல்லன் ; அறவிலை வணிகனல்லனாயினும் அவன் ஈகைத்திறம் துறக்கத்திற்கு இட்டுச் செல்லும் என்பது ஏணிச்சேரி முடமோசியாரின் துணிபு. இப்பாடலுக்கு,

உலகத்துச் செல்வர் பலரும் தம்பால் உள்ள
செல்வத்தைப் பரிசிலர்க்கு வழங்குவது
இம்மையிற் புகழும் மறுமையில்
துறக்கவின்பமும் குறித்தேயாகும் ;
ஆகவே இப்பயன் கருதிக் கொடை
வழங்கும் அவர்கள், பொருள் கொடுத்து
மறுமையின்பம் கோடலின் ஓராற்றால்
அறவிலை வணிகரேயாகும்”[6]

என்று உரைக் குறிப்புச் செய்வர். அண்டிரன் விரும்பவில்லையாயினும் அவனுடைய ஈகைத்திறம் அவனை மறுமையின்பம் அடையச் செய்யும்.

வீட்டுலகம் கருதி வழங்கப்படுவது வைதிக மரபுப்படி தானமாகும். இவ்வாறு பயன்கருதி வழங்கும் பொருளை - தானத்தைப் பெறுவதும் தீதாகும். ஏனெனில் அது தன்னலத்தை வளர்ப்பது. எனவே மேலுலகம் இல்லையென்றாலும் வறுமையைப் போக்கமுனையும் முனைப்பில் வழங்கப்படும் ஈகையே உயர்ந்தது சிறந்தது என்பதனை,

நல்லாறு எனினும் கொளல்தீது, மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று (குறள்.222)

என்ற குறளில் விளக்குவார். இக்குறளில் உள்ள சமூகப் புரட்சி நோக்கத்தக்கது.

தமிழ் மரபான ஈகைக்கும் வைதிக மரபான
தானத்திற்கும் இடையே உள்ள முரண்பாடுகளை
மேற்காட்டிய குறள்கள் விளக்குகின்றன[7]

மேலுலகத்திற்குச் சென்ற பின்னரும் ஈகையால் உண்டான புகழ் இவ்வுலகில் நிலைத்து நிற்கும் என்று அந்துவன் கீரனுக்கு அறிவுறுத்துகின்றார் காவிட்டனார் (புறம் 359). வசை நீக்கி இசை நடுதலும், ஒரு பாலும் கோடாது முறை வழங்குதலும், இரவ லர்க்குக் களிறும் மாவும் தேரும் பிறவும் கொள்ளெனக் கொடுத்தலும் செய்குவையாயின் மேலுலகம் செல்லினும் நின் புகழ் நிலைத்து நிற்கும் என்பது புலவர் கருத்து. ஈதல் இசைபட வாழ்வார்க்குத் துறக்கவுலகத்தில் இடமுண்டு என்பதற்கு,

நிலவுக் கோட்டுப் பல களிற்றொடு
பொலம்படைய மாமயங்கிட
இழைகிளர் நெடுந்தே ரிரவலர்க்
கொள்ளென விடுவையாயின் வெள்ளென
ஆண்டு நீ பெயர்ந்த பின்னும்
ஈண்டு நீடு விளங்கு நீ யெய்திய புகழே

(புறம்.359.13-18)

என்ற அடிகள் சான்றாகின்றன. மேலுலகம் செல்லுதற்கு ஈகையறம் இன்றியமையாதது என்ற கருத்து இதனால் புலனாகின்றது. 'ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று' (புறம்.204.2) என்பதற்கேற்ப இரப்போர்க்கு ஈயும் வள்ளன்மையை மக்களுக்கு அறிவுறுத்த துறக்கச் சிந்தனை புலவர்களுக்கு எடுகோளாக அமைந்தது. சங்க இலக்கியப் புறப்பாடல்களில் கொடைத்திறம் பாடுபொருளாகப் பேசப்பட்டிருப்பினும் அங்குத்துறக்கச் சிந்தனைமிகுதியும் புகுத்தப்பெறவில்லை என்பது துணிபு. புலவர்கள் ஈகைச் சிறப்பை மிகுத்துப் பாடியதற்கு,

சொத்துரிமை ஏற்பட்டு இனக்குழுத் தலைவர்கள்
குறுநில மன்னர்களாகவும் முடிமன்னர்களாகவும்
மாறிய ஒரு சமூக அமைப்பில் தோன்றிய
அனைத்துச் சிக்கல்களையும் சங்க இலக்கியங்களில்
காணமுடிகின்றது. இல்லாமை ஒருபுறமும் செல்வக்
குவிப்பு மறுபுறமுமாய் இருந்த நிலையில்தான்
மக்களன்புமிக்க புலவர்கள் ஒப்புரவையும்
ஈகையையும் வற்புறுத்துகின்றனர்[8]

என்று காரணம் கூறுவர். சங்ககாலத்தில் துறக்கம் செல்ல வீரத்தினை வலியுறுத்தியளவிற்கு ஈகைத் திறனைப் புலவர்கள் சுட்டவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

**தவத்தால் துறக்கம்**

துறக்கப் பேற்றிற்கான வழிமுறைகளில் தவமும் குறிப்பிடத்தக்கது. இறையனார் களவியலுரை,

தவத்தானும் தானத்தானும்
அன்றிப்பெறலாகாச் சுவர்க்கம் (இ.க.2)

என்று குறிக்கிறது. தானமும் தவமும் செய்தார்க்கன்றித் துறக்கம் இல்லை என்பதற்கிணங்கச் சங்கப் புலவர்கள் அதனை மிகுதியும் வலியுறுத்தியுள்ளனர்.

அடங்கருந் தோற்றத் தருந்தவ
முயன்றோர்தம் உடம்பொழித் துயருல
கினிதுபெற் றாங்கே (கலி.138.30-31)

என்பதில் மனவேட்கை அடங்கின செய்தற்கரிய தவத்தை முயன்றோர் உடம்பை இவ்வுலகில் விட்டு உயருலகம் சென்றமை குறிக்கப் பெற்றுள்ளது. இக்கருத்து தவம் செய்தலால் உயிர் உயருலகடையும் என்பதைப் பறைசாற்றுகின்றது.

> இந்திய மெய்யியல் பிரிவுகள் அனைத்தும்
> துறவை வற்புறுத்துகின்றன. அதிலும் திராவிடச்
> சிந்தனையில் கிளைத்த அனைத்துப் பிரிவுகளும்
> துறவையும் - தவத்தையும் மிகுதியாக
> வற்புறுத்துகின்றன. வரலாற்றுக் காலத்திற்குரிய
> பார்சுவநாதர், மகாவீரர், மற்கலி கோசாலர்
> புத்தர், நன்கணியார் ஆகிய அனைவரும்
> கடுந்தவங்கள் இயற்றியவர்கள் என்பதை
> அவர்களைப் பற்றிய செய்திகள் உணர்த்துகின்றன.[9]

இங்ஙனம் தவம் செய்யாதது துறக்கம் செல்வதினின்றும் வழுவிய ஓர் அரசனைச் சான்றோர் தவம் செய்வித்து துறக்கம் புகுதற்கு நெறிப்படுத்திய குறிப்பும் சங்க இலக்கியத்தில் காணப்பெறுகின்றது. இதற்கு,

> அறிந்தனி ராயின் சான்றவிர் தான்தவம்
> ஒரீஇத் துறக்கத்தின் வழீஇ ஆன்றோர்
> உள்ளிடப்பட்ட அரசனைப் பெயர்த்தவர்
> உயர்நிலை யுலகம் உறீஇ யாங்கென்ப
> உயர்நிலை தீர்த்தல் நுந்தலைக் கடனே (கலி.139.33-37)

என்ற பாடலடிகள் சான்றாகின்றன. இதற்கு 'யயாதி அரசனைச்' சான்று காட்டுவர் நச்சினார்க்கினியர்.[10]

பாண்டியன் நெடுஞ்செழியனை மாங்குடிகிழார் பாடிய பாடலில் (புறம்.26) தவத்தின் பெருமை பேசப்படுகின்றது. பாண்டியன் நெடுஞ்செழியனிடம் பகைவரென்னும் பெயரைப் பெற்றுப் போர் செய்தற்கு மாட்டாராயினும் தவம் செய்தார்க்குக் கிட்டும் துறக்க வாழ்வு பெறுவர்.

நோற்றோர் மன்றநின் பகைவர் நின்னொடு
மாற்றரென்னும் பெயர்பெற்
றாற்றா ராயினும் ஆண்டு வாழ்வோரே (புறம்.26.16-18)

தோல்வியுறினும் நெடுஞ்செழியனின் பகைவர் எனும் பொருட்டுத் துறக்கம் பெறுவர். இங்கு வீரம் முன்னிறுத்தப் பெறினும் 'நோற்றோர் எய்தும் துறக்கம்' தோற்றோருக்கும் வழங்கப்பெறுகிறது. இதற்கு,

அடுபோர்ச் செழிய, நான் மறை முதல்வரும்
துணைவேந்தரும் சுற்றமாய்ச் சுற்ற வேள்வி
பல செய்த வேந்தே, நின் பகைவர்
இவ்வுலகத்தே நின்பால் பகைமையுற்றுப் பொருது
துன்புற்று வீழ்ந்தாராயினும் துறக்கம்
புக்கு இன்புறுகின்றாராதலால், அவர்
நோற்றவரேயாவர் என்று பாடிப் பாண்டியன்
சிறப்பைப் பாராட்டுகின்றார்[11]

என்ற கருத்து அரண் சேர்க்கும். இச்சிந்தனைப் போக்கு மாமூலனார் பாடலிலும் (அகம்.61) காணப்பெறுகின்றது.

நோற்றோர் மன்ற தாமே கூற்றம்
கோளுற விளியார் பிறர்கொள விளிந்தோர் எனத்
தாள் வலம்படுப்பச் சேட்புலம் படர்ந்தோர் (அகம்.61:1-3)

என்பது பாட்டு. பிறர் நலன் பொருட்டு வீழ்ந்தமையால் தவம் செய்தாருக்குக் கிட்டும் 'சேட்புலம்' கிடைக்கப் பெற்றதாகப் பாடுகின்றார் புலவர். தன்னலம் பொருட்டுச் செய்யப்படுவது தவம் ; பிறர் நலம் பேணுதற்பொருட்டுச் செய்யப்பெறுவது போர் ; அமர்க்களத்து வீழ்ந்தாருக்குரிய துறக்க வாழ்வு தவத்தாருக்குரியதாகவும் கருதப்படுவது சங்ககால மக்களின் எண்ணத்தினையும் நம்பிக்கையினையும் வெளிப்படுத்துகின்றது.

### வேள்வி செய்தலும் துறக்கமும்

தவமும் வேள்வி செய்தலும் ஒன்றோடொன்று தொடர்புடையன. துறக்கம்பெறுதற்குரிய நெறியில் வேதம் ஓதி வேள்வி செய்தலும் குறிப்பிடத்தக்கது. அதர்வ வேதம் ஒழிந்த முதன்மைப்பட்ட வேதங்களைத் தமக்குப் பொருள் தெரியும்படியோதியும் விழுமிய தலைமையோடு பொருந்தின யாகங்கள் முதலிய தொழில்களோடு சில காலம் பொருந்தியும், நால்வகை நிலங்களமர்ந்த உலகத்துள் ஒன்றாகிய பிரமம் தாங்களாய், உயர்ந்த நிலைமையையுடைய தேவருலகத்தை இவ்வுலகிலே நின்று சேரும், அறநெறியினின்றும் பிழையாது அன்புடைய நெஞ்சத்தராய்ப் பெரியோர் உறையும் மலையை உள்வெளியாக வாங்கிய அந்தணர் பள்ளியும்' என்று வேதத்தின் சிறப்பினை மதுரைக் காஞ்சி மொழிகின்றது.

சிறந்த வேதம் விளங்கப் பாடி
விழுச்சீ ரெய்திய வொழுக்கமொடு புணர்ந்து
நிலமமர் வையத் தொருதா மாகி
யுயர்நிலை யுலக மிவணின் றெய்து
மறநெறி பிழையா வன்புடை நெஞ்சிற்

பெரியோர் மேஎ யினிதி னுரையுங்

குன்று குயின்றன்ன வந்தணர் பள்ளியும் (மது.468:474)

என்பதனால் வேதங்களும் வேள்விகளும் அந்தணர்களை இவ்வுலகிலேயே துறக்கவின்பம் பெறச் செய்தமை புலனாகின்றது. மற்று மோரிடத்தில் வேள்வி செய்தல் அந்தணர் துறக்கம் செல்ல வழி வகுக்கும் செய்தி குறிக்கப் பெற்றுள்ளது. இதனை,

நறுஞ்சாந்து நீவிய கேழ்கிள ரகலத்
தாவுதி மண்ணி யவிர்துகின் முடித்து
மாவிசும்பு வழங்கும் பெரியோர் போல
நன்றுந் தீதுங் கண்டாய்ந் தடக்கி
யன்பு மறனு மொழியாது காத்துப்
பழியொரீஇ யுயர்ந்து பாய்புகழ் நிறைந்த
செம்மை சான்ற காவிதி மாக்களும் (மது.493: 499)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. இங்குப் பெரியோர் என்று சுட்டப்பட்டிருப்பினும் வேள்வி செய்து துறக்கம் சேர்தல் அந்தணர்களுக்கு மட்டும் உரியதாக உரை வரைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. இதற்கு,

நறிய சந்தனத்தைப் பூசிய நிறம் விளங்கு
மார்பினையுடைய பெரியோர், யாகங்களைப்
பண்ணிப் பெரிய சுவர்க்கத்து ஏறப்போம்
அந்தணர் அரசனை அடக்குமாறு போல[12]

என்ற உரையினையும்,

மேலுலகம் எய்தும் குறிக்கோளுடைய பெரியோர்
நன்றுந் தீதுங் கண்டு ஆய்ந்து அடக்குமாறு போல
நன்றுந் தீதும் கண்டாய்ந்து அடக்கிய காவிதி
மாக்கள் என வினை உவமமாக்குக[13]

என்ற உரையினையும் சான்று காட்ட இடமுண்டு. சங்க இலக்கியத்தில் பெரியோர், சான்றோர் என்று குறிக்கப்பெறும் சொற்களுக்கு 'அந்தணர்' என்று உரை வரைந்திருப்பது ஆரியக்கொள்கை புகுதற்கு இடனாயிற்று.

தமிழ்நாடு போந்த ஆரியர்கள் மன்னர்களை
வணங்கித் தம் வசப்படுத்த 'வேள்வி' என்ற
சக்தி மிக்க ஆயுதத்தைக் கையாண்டனர்.
மன்னர்களுக்கு இம்மை வாழ்வில் வெறுப்பை
உண்டாக்கும்படியான கருத்துக்களைக் கூறி
மறுமையில் இன்பம் பெற வேண்டுமானால்
வேள்வி செய்வது தான் சிறந்தது என்ற
கருத்தை வலியுறுத்தினர்[14]

என்ற கூற்றிறிற்கிணங்க, சங்கப் புலவர்களும் துறக்கம் பெறுதற்குரிய நெறிகளுள் ஒன்றாக வேள்வி செய்வதனை மொழிந்துள்ளனர்.

இங்ஙனம் வேள்வி செய்து சுவர்க்கம் போந்தமைக்குப் பதிற்றுப்பத்தில் மூன்றாம் பத்துப் பாடிய பாலைக்கௌதமனார் வாழ்க்கை சான்றாகின்றது. இப்புலவர் அந்தணர் என்பது இங்கு குறிக்கத்தக்கது. இதற்கு,

> இம்மண்ணுலகில் வாழ்வோர், இம்மை மறுமைப்
> பயன்களைப் பெற மேற்கொள்ளும் தெய்வ
> நலஞ்சான்ற செயல்களாவன ; யாகஞ் செய்தல்,
> புனித நீராடல் (தீர்த்த யாத்திரை), யோகத்திருத்தல்,
> தவம்புரிதல் முதலியனவாகும்[15]

என்ற கருத்து அரண் சேர்க்கின்றது. இங்குச்சுட்டப்பெறும் அனைத்துச் செயல்களும் தன்னலம் சார்ந்தவை. இருப்பினும், பிறர்க்குக் கேடு செய்வன அல்ல என்பதால் அவற்றைத் துறக்கத்திற்குரிய நெறியாகச் சங்கப் புலவர்கள் கருதியுள்ளனர்.

## ஆண்மக்கட் பேறு அளித்த துறக்கம்

மக்கட்பேற்றில் ஆண்மக்கட்பேறு வாய்த்தோர் துறக்கம் பெறுவர். சங்கச் சமூகத்தில் ஆண்மகன் சிறப்புற்றிருந்தமையினைத் தன் மகன் போர்க்களத்தில் தோன்றும் இயல்புடையவன் எனும் தாயின் பெருமிதமும் (புறம்.86), மகன் களிற்றைக் கொன்று இறந்தான் எனும் முதியோள் உவகையும் (புறம்.277), புறங்கொடுத்தான் உன் மகன் எனச் சொல்லக் கேட்டு, அவ்வாறாயின் அவனுக்குப் பாலூட்டிய என் மார்பை அறுத்திடுவேன் என வஞ்சினம் கூறிய தாய் தன் மகன் மார்பில் புண்பட்டு இறந்து கிடந்ததைக் கண்டு பெருமகிழ்வு கொண்டமையும் (புறம்.278) ஆகிய பாடல்கள் புலப்படுத்துகின்றன. இத்தகைய சிறப்புடைய ஆண்மகன் துறக்கத்தைத் தர வல்லவனாகவும் சங்க இலக்கியத்தில் குறிக்கப்பெற்றுள்ளது.

> இம்மை யுலகத்து இசையொடும் விளங்கி
> மறுமை உலகமும் மறுஇன்று எய்துப
> செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்

சிறுவர்ப் பயந்த செம்மலோர் எனப்

பல்லோர் கூறிய பழமொழி எல்லாம்

வாயே ஆகுதல் வாய்த்தனம் தோழி! (அகம்.66:1-6)

பகைவரும் விரும்பும் குற்றம் இல்லாத மக்களைப் பெறுவோர் இவ்வுலகப் புகழோடு மறுமையுலகமும் குற்றமின்றிப் பெறுவர் என்னும் பழமொழி உண்மையானதாகத் தலைவி தோழியிடம் மொழிகின்றாள். 'சிறுவர்ப் பயந்த செம்மலோர்' என்பதால் மறுமையுலகம் தாய்தந்தையாகிய இருவர்க்கும் உரியதாகின்றது. இருப்பினும் மகனை ஈன்று தருதல் அன்னையாதலின் ஈண்டு சுட்டப்பெறும் மறுமையுலகத்தினை அவளுக்குரியதாகக் கருதி,

களிறு எறிந்து பெயரும் காளைக்கே வீரயுகத்தில்

மதிப்பிருந்தது இந்தச் சமூகப் பின்னணியில்

சிறுவனைப் பெற்ற தாய்க்கே மறுமை

உலகமாகிய சுவர்க்கம் கிட்டும் என்கிறது

பின்வரும் அகப்பாடல்[16]

என்று விளக்குவர். ஈமக்கடன் ஆற்றும் உரிமை ஆண்பிள்ளைக்குரியதால் அவனை ஈன்ற தாய்க்குத் துறக்கம் வழங்கப்பட்டது. இருப்பினும் புதல்வர் என்ற சொல்லிற்குத் தம் பெற்றோர்களைப் 'புத்' என்ற நரகத்தில் விழாமல் காப்பாற்றுபவர் என்று பொருள். பெற்றோர்க்கு அருங்கடன் ஆற்றும் உரிமை புதல்வனுக்கு இருப்பதால் அவன் இருவருக்கும் துறக்கத்தைப் பெற்றுத் தருபவனாகிறான்.

தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்

பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும் (புறம்.9.3-4)

என்ற பாடலடிகள் இங்கு ஒப்பு நோக்கத் தக்கன.

## கணவனொடு இறத்தலும் துறக்கமும்

பெண்டிர் துறக்கம் செல்லுதற்குரிய நெறியாக உடன் கட்டையேறுதல் சுட்டப்பெறுகிறது. சங்கப்புலவர்களுள் குட்டுவன் கீரனாரும் (புறம்.240) நல்லவந்துவனாரும் (கலி.143) கணவனொடு உயிர் துறந்து பெண்டிர் துறக்கம் சேர்வதனைப் பாடியுள்ளனர்.

கோடேந் தல்குற் குறுந்தொடி மகளிரொடு
காலனென்னும் கண்ணிலி யுய்ப்ப
மேலோருலக மெய்தின னெனாஅப் (புறம்.240.4-6)

என்பது குட்டுவன் கீரனார் பாட்டு. பாடுவார்க்குக் குறைவறக் கொடுக்கும் ஆய்அண்டிரன், கோடேந்திய அல்குலினையும் குறிய வளைகளையுமுடைய உரிமை மகளிருடன் தேவருலகம் சேர்ந்தமை இப்பாடலால் புலனாகின்றது. மன்னன் உயிர் நீப்பின் அவன் உரிமை மகளிரும் உடன் தீயில் புகுவது அக்கால மரபு. 'மகளிர்' என்ற பன்மையால் பலர் உடன் கட்டையேறியமை புலனாகின்றது.

கணவனுடன் மனைவி உயிர்துறக்க விரும்பிய செய்தி நல்லந்துவனார் பாடலில் குறிக்கப்பெற்றுள்ளது. இதனை,

ஈண்டுநீர் ஞாலத்துள் எங்கேள்வர் இல்லாயின்
மாண்டமனம் பெற்றார் மாசில் துறக்கத்து
வேண்டிய வேண்டியாங் கெய்துதல் வாயெனின்
யாண்டு முடையேன் இசை (கலி.143.44-47)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. தம் கணவர் மீதுள்ள வேட்கையால் அவருடன் இறக்கும் பெண்டிர் குற்றமில்லாத துறக்கத்திற்குச் சென்று தாம் விரும்பியதெல்லாம் விரும்பியபடி பெறுவர் எனும் சிந்தனையை

இப்பாடல் குறிப்பிடுகின்றது. இக்கருத்து உண்மையாயின் யானும் தலைவன்மேல் விருப்பத்தோடு உயிர்போய் அவனைப்பெற்று எவ்விடத்தும் புகழுடையேனாவேன் என்கிறாள் தலைவி. கணவனுடன் உயிர்துறப்பதை வலியுறுத்த துறக்கச் சிந்தனை முன்வைக்கப் பெற்றுள்ளது.

> வருணாசிரமம் வேரூன்றிய போது, சூத்திரர்கள்
> மோட்சத்துக்குப் போகும் வழி பிராமணர்களுக்கு
> ஊழியம் செய்வது தான் என்றானது போல்
> பெண்ணின் கடமை கணவனுக்குப் பணிசெய்து
> அடுக்களையில் கிடப்பதே என்று வந்தது.
> குழந்தை மணம், கணவன் வழிபாடு,
> மறுமணத் தடை, கல்வித்தடை ஆகியவற்றின்
> பொருள் இதுவே. பெண் விடுதலைக்கு உலை
> வைத்த இந்த ஏற்பாடெல்லாம் வருணாசிரமத்தின்
> வாரிசுகள். பெண்ணை ஓர் இனிய பலகாரம்
> ஆக்குவதுதான் ஆணின் முயற்சி. பையப்பைய
> அவள் அப்படி ஆகியும் விட்டாள்[17]

என்ற கூற்று பெண்ணுக்கு நேர்ந்த கொடுமையை எடுத்துரைக்கின்றது. சங்க இலக்கியத்தில் உடன்கட்டை ஏறியதற்குப் பாலைக்கௌதமனார் மனைவி சான்றாகின்றாள். தம் மனைவியும் துறக்கம் புக வேண்டும் என்று புலவர் விரும்பியதாகப் பதிகம் குறிப்பிடுகின்றது.

**நல்வினையறத்தால் துறக்கம்**

வினைக் கோட்பாடு தொன்று தொட்டு இருந்து வந்தமை தொல்காப்பியத்தால் தெளிவாகின்றது.

வினையின் நீங்கி விளங்கிய அறிவின்

முனைவன் கண்டது முதல் நூலாகும் (தொல்.பொருள்.574.)

என்பது தொல்காப்பியம். சங்கப்பாக்களில் வினைக்குறிப்புகள் ஆங்காங்கே காணப்பெறுகின்றன. கபிலர் பாடிய,

இம்மை போலக் காட்டி யும்மை
இடையில் காட்சி நின்னொடு
உடனுறைவு ஆக்குக உயர்ந்த பாலே (புறம்.236.10-12)

என்ற பாடல் விதியின் வலிமையை உணர்த்துகின்றது. ஊழ் பற்றிய எண்ணம் பொதுவாகப் பேசப்படினும் நல்விதி, நல்வினை பற்றிய கருத்து துறக்கச் சிந்தனையோடு பொருந்தி வருகின்றது.

பகைவரிடம் போரிட்டு அறநெறியில் உயிர்களைக் காத்த நல்வினைப் பயன் துய்க்க அரசன் துறக்கவுலகத்தை விரும்பிச் சென்றான். இந்நிகழ்ச்சிக்குப் பல கதிரையுடைய ஞாயிறு தனக்குப் பகையாகிய இருளைக் கெடுத்து உலகத்திற்குப் பகற்பொழுதை முறைமையாற் செலுத்தி மலையில் சென்று சேரும் காட்சி உவமையாக்கப்பட்டுள்ளது.

வெல்புகழ் மன்னவன் விளங்கிய ஒழுக்கத்தால்
நல்லாற்றின் உயிர்காத்து நடுக்கறத்தான் செய்த
தொல்வினைப் பயன்றுய்ப்பத் துறக்கம்
வேட்டெழுந்தாற் போல் பல்கதிர் ஞாயிறு
பகலாற்றி மலை சேர (கலி.118.1-4)

என்ற அடிகளால் உயிர்காக்கும் நல்லறம் துறக்கத்திற்கு இட்டுச் செல்லும் நெறியினை அறியமுடிகின்றது. தொன்று தொட்டு வந்த வினையின் பயனாகத் துறக்கம் விரும்பிச் சென்றமை ஈண்டு குறிக்கப்பெற்றுள்ளது.

ஊழின் வலிமையையும் அதன் பயனையும்
விளக்கும் புறநானூற்றுப் பாடல்கள்
இம்மையில் தீவினையை அறவே
அகற்றி நல்வினைகளைப் புரிதற்கேற்ற
நல்லுணர்வுகளை ஊட்டுவனவாய்
உள்ளன. இந்நல்லுணர்வுகள் உள்ளத்தைத்
தூய்மைப்படுத்தி மக்களைப்
பண்பாடுடையவர்களாக
விளங்கச் செய்யும் திறத்தனவாகும்[18]

என்ற கருத்திற்கிணங்க சங்க இலக்கியத்திலுள்ள துறக்கச் சிந்தனைப் பாடல்கள் அமைந்துள்ளன. இதற்கு,

ஈண்டுச் செய் நல்வினை யாண்டுச் சென் றுணீஇயர்
உயர்ந்தோ ருலகத்துப் பெயர்ந்தன னாகலின்

(புறம்.174.19-20)

என்ற அடிகள் சான்றுரைக்கின்றன. சேர,சோழ, பாண்டியர்கள் தமக்குள் ஒற்றுமையின்றிப் போரிட்டுக் கொண்டதையறிந்த பிரமனார் என்ற புலவர் அவர்களை நல்லாற்றுப்படுத்தும் பொருட்டுத் துறக்கச் சிந்தனையை முன் வைக்கிறார். துணைவர்கள் தம்மிற் கூடியழ உயிர் கூற்றுவனாற் கவர்ந்து கொள்ளப்படும் காலத்தில் இவ்வுலகினின்றும் உயர்ந்து மேலுலகம் செல்ல வேண்டுமாயின் அறவினைதான் துணையாகும் என்பது பிரமனாரின் கருத்து (புறம்.357).

விண்ணுலகத்தவராயினும் செய்யத்தக்க நல்வினைகளைச் செய்தால்தான் தேவருலக இன்பத்தினைப் பெறமுடியும் என்பதை,

பொலம்பூங் காவின் நன்னாட்டோரும்

செய்வினை மருங்கி னெய்த லல்லதை (புறம்.38.11-13)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. வினையின் விழுப்பயன் துய்க்கும் இடமாகத் துறக்கம் கருதப்பட்டதனை,

யிடை யொழி வின்றி யடியுறையா ரீண்டி

விளைந்தார் வினையின் விழுப்பயன் றுய்க்குந்

துளங்கா விழுச்சீர்த் துறக்கம் புரையு

மிருகே ழுத்தி யணிந்த வெருத்தின்

வரைகெழு செல்வ னகர் (பரி.தி.1:47)

என்ற பாடலடிகள் சுட்டிச் செல்கின்றன. செய்வினை துறக்கத்திற்கு வழிவகுப்பதனைப் புலவர்கள் மட்டுமன்றி மன்னர்களும் தம் பாடல்களில் குறித்துள்ளனர். வடக்கிருந்து உயிர் துறக்க எண்ணிய கோப்பெருஞ்சோழன்,

செய்வினை மருங்கி னெய்த லுண்டெனிற்

றொய்யா வுலகத்து நுகர்ச்சியுங் கூடும் (புறம்.214.7-8)

என்று மக்களுக்கு நல்வினையின் பயனை எடுத்துக் கூறி அறிவுறுத்துகின்றார்.

'நல்வினை' என்ற குறிப்புடன் 'நல்லறம்' குறித்தும் புலவர்கள் பாடியுள்ளனர். மறுமையுலக நுகர்ச்சிக்கு வித்தாக அமையும் அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றையும் தம் பாடலில் குறித்துள்ளார் குடபுலவியனார். உணவிற்கு முதலாகவுடையது நீர். ஆகவே நீரறம் துறக்கத்திற்கு வழி கோலும் என்பது புலவரின் கருத்து.

செல்லும் உலகத்துச் செல்வம் வேண்டினும்
ஞாலங் காவலர் தோள்வலி முருக்கி
ஒரு நீ யாகல் வேண்டினுஞ் சிறந்த
நல்லிசை நிறுத்தல் வேண்டினு மற்றதன்
நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே (புறம்.18.13-19)

நெல் முதலாய உணவிற்குப் பயன்படும் நிலம் இம்மையுலகிற்கு மட்டும் பயன்படும். நிலம் குழிந்த இடத்தில் ஆறு, ஏரி, குளம் போன்ற நீர்நிலைகளை உலகையாளும் மன்னனாகிய நீ ஏற்படுத்துவையாயின் அச்செயல் உனக்குத் துறக்கவின்பத்தைப் பெற்றுத் தரும் என்கிறார்.

வீரம் துறக்கத்தைத் தரும் என்பதிலிருந்து போரைத் தவிர்த்து நல்லறம் செய்தலால் பெறலாகும் துறக்கம் வலியுறுத்தப்பெறுகிறது.

செய்தல் வேண்டுமா னன்றே வானோர்
அரும்பெற லுலகத் தான்றவர்
விதும்புறு விருப்பொடு விருந்தெதிர் கொளற்கே
(புறம்.213.22-24)

என்பதில் துறக்கம் செல்லும் நெறியாக நல்லறம் செய்தல் சுட்டப்பெறுகிறது. அறிவினாலும் வீரத்தினாலும் பிறரைப் போரில் வெல்லும் கூடல் மாநகரில், மைந்தரும் மகளிரும் புணர்ச்சியோடு வந்த இரவு நீங்கிய வைகறைப் பொழுதில் பரங்குன்றத்தை நோக்கிப் புறப்பட்டனர். அவர் அறத்தைப் பெரிதாகச் செய்து அதன்பயன் நுகரவேண்டித் தேவருலகம் செல்வாரைப் போலச் சென்றதாகக் குறிப்பர். இதனை,

புலத்தினும் போரினும் போர்தோலாக் கூடற்
கலப்போ டியைந்த விரவுத்தீ ரெல்லை
யறம்பெரி தாற்றி யதன்பயன் கொண்மார்
சிறந்தோ ருலகம் படருநர் போல (பரி.19.8-11)

என்ற பாடலடிகள் தெளிவுறுத்தும். 'நல்வினையறம் செய்க' என்று குறித்துள்ளனரேயன்றி இன்ன அறம் என்று குடபுலவியனார் நீங்கலாக வேறெந்தப் புலவரும் குறித்திலர்.

**புகழ் தந்த துறக்கம்**

நற்பண்பு வாய்க்கப்பெற்றோர் புலவர்கள் புகழ்தற்குரிய தகுதியுடையோராவர். அவர்தம் நாவால் பாடப்பெறும் பேறுபெற்றோருக்குத் துறக்கத்தில் இடனுண்டு. இதனை நன்கறிந்த உறையூர் முதுகண்ணன் சாத்தனார், சோழன் நலங்கிள்ளிக்கு அதனை விளக்கியுரைக்கின்றார்.

சேற்றுவளர் தாமரை பயந்த வொண்கேழ்
நூற்றித ழலரி னிரைகண் டன்ன
வேற்றுமை யில்லா விழுத்துணைப் பிறந்து
வீற்றிருந்தோரை யெண்ணுங் காலை
உரையும் பாட்டு முடையோர் சிலரே
புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவனேவா வானவூர்தி
எய்துப வென்பதஞ் செய்வினை முடித்தெனக்
கேட்பலெந்தை சேட்சென்னி நலங்கிள்ளி

(புறம்.27.1-10)

என்பது அப்பாட்டு. புலவர் பாடும் புகழுடையோராக இருப்பினும், அவர்கள் தம் செய்வினைப் பயனை முடித்த பின்னரே புத்தேள் உலகில் புகமுடியும் என்கிறார். இங்குச் சுட்டப்பெறும் 'செய்வினை' என்பதற்கு 'நல்வினை' என்று பொருள். இதற்கு,

உரையும் பாட்டும் பெற்றவர், பெற்றவுடனே
"வலவனேவா வானவூர்தி எய்துப" என்பதன்று ;
செய்தற்குரிய நல்வினையைச் செய்து முடித்த
பின்பே அவ்வூர்தியில் விசும்பெய்துப
என்பார், "செய்வினை முடித்தென" வேறு
வைத்து வற்புறுத்தினார்[19]

என்ற கருத்து அரண்சேர்க்கும். சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறையைக் காணச் சென்று மோசிகீரனார் பாடிய பாடலும் (புறம்.50) ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது.

இவணிசையுடையோர்க் கல்ல தவண
துயர்நிலை யுலகத் துறையு ளின்மை
விளங்கக் கேட்ட மாறுகொல்
வலம்படு குருசி னீயீங்கிது செயலே (புறம்.50.14-17)

வெற்றி முரசு வீற்றிருக்கும் கட்டிலில் வேறு பிறர் உறங்குவது அக்காலத்தில் கொலைத் தண்டனைக்குரிய செயலாகும். இங்கு முரசு கட்டிலில் உறங்கும் மோசி கீரனாருக்குப் பெருஞ்சேரலிரும்பொறை கவரி கொண்டு வீசுகிறான். இதனையறிந்த புலவர் இவ்வுலகத்தில் புகழுடையோர்க்கல்லது உயர்நிலையுலகத்துள் உறைவிடம் இல்லையெனச் சான்றோர் கூறுதலை விளங்கக் கேட்ட கேள்விப் பயனோ நீ இவ்வாறு செய்தற்குக் காரணம் என வினவுகின்றார். புலவர்கள் குற்றம்

செய்யினும் பொறுத்தருளி அவர்க்கு ஊறு நேராது போற்றுதலான் அம்மன்னனுக்கு உண்டாகும் புகழ், அவனைத் துறக்க வாழ்விற்கு இட்டுச் செல்லும் என்ற கருத்து இப்பாடலால் புலனாகின்றது. கொடைபெற விரும்பிய புலவர்கள் மன்னர்களைப் புகழ்வதும், மன்னர்கள் புலவர்களைப் போற்றுவதும் ஆகிய நெறிகள் இருவருக்கும் துறக்க இன்பத்தைத் தரவல்லன.

## இறைமை வழங்கிய துறக்கம்

இறைவழிபாடு துறக்கத்தை அளிக்கவல்லது எனும் சிந்தனையும் சங்க இலக்கியத்தில் காணப்படுகிறது. பல்வேறு நிலைகளில் சங்க இலக்கியங்கள் பாடப்பெற்றதாதலால் துறக்கத்திற்கான நெறிமுறைகளும் காலச் சூழலுக்குத்தக மாற்றம் பெற்றன.

> வீரம் புகழ் கொடை அறம் ஆண்மக்கட்பேறு
> தவம் என்பன தன் முயற்சியால் நேரடியாய்
> மறுமை உலகைப் பெறவல்ல வழிகளாய் இருக்க
> இவை, ஆரியமயமாகிப் போன இறைவழிபாட்டுச்
> சூழலில் பின்னுக்குத் தள்ளப்படுகின்றன. இங்கு
> இறைவனே துறக்கத்தைத் தருபவனாய்க் காட்டப்
> பெறுகிறான். இக்காலச் சமூகச் சூழலில்
> இறைவழிபாட்டு நெறிகள் முதன்மைப்படுத்திப்
> பேசப்படுகின்றன[20]

திருமாலின் திருமார்பினைத் தொழுவோர்க்குத் துறக்கம் பெறும் உரிமை நன்குடைத்து என்பதை விளக்கும் முகத்தான்,

பருவம் வாய்த்தலி னிருவிசும் பணிந்த
விருவேறு மண்டிலத் திலக்கம் போல்
நேமியும் வளையும் ஏந்திய கையாற்
கருவி மின்னவி ரிலங்கும் பொலம்பூ
னருவி யுருவி னாரமொ டணிந்தநின்
றிருவரை யகலந் தொழுவோர்க்கு
உரிதமர் துறக்க முரிமை நன்குடைத்து (பரி.131.7-12)

என்ற பாடல் அமைந்துள்ளது. துறக்கத்திற்குரிய நெறியாக இறைவழிபாடு முன்னிறுத்தப்படுகிறது.

> இப்பாடலில் வரும் 'அமர் துறக்கம்' என்பதற்கு அமரர்க்குரிய துறக்கம் எனவும் பொருள் கொள்ள வாய்ப்புண்டு. ஆனால் உரையாசிரியர் 'அமர்துறக்கம்' என்பதற்குத் 'திருமால் அமரும் இடமாகிய வைகுண்டம்' எனப் பொருள் கொள்கின்றார். பொதுநிலையில் இருந்த சுவர்க்கம் இறைவழிபாட்டுச் சூழலின் தாக்கத்தால் அவ்வத் தெய்வத்திற்குரிய தனித்தனி சுவர்க்கங்களாய்ப் பாகுபடுத்தப்படுகின்றது[21]

என்ற சிந்தனை இப்பாடலுக்குப் பொருத்தமுடையதாகின்றது.

திருமாலைத் தொழுதால் துறக்கம் கிட்டும் என்ற நிலையிலிருந்து மாறித் திருமாலிருங்குன்றம் பேசப்படுகின்றது. திருமால் திருவுள்ளம் செய்தாலன்றித் துறக்கம் பெறலாகாது என்றும், பெறுதற்கு அரிதான துறக்கத்தை எளிதிற் தரவல்லது திருமாலிருங்குன்றம் என்றும் போற்றிப் பாடுவர்.

நாறிணர்த் துழாயோ னல்கில் அல்லதை
ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்
அரிதிற் பெறு துறக்கம் மாலிருங்குன்றம்
எளிதிற் பெறலுரிமை ஏத்துகஞ் சிலம்ப (பரி.15.15-18)

இறைவனை உள்ளம் உருகித் தொழுதால் துறக்கப் பேறு கிட்டும். இச்சிந்தனைப் போக்கு பிற்காலத்தில் வளர்ச்சி பெறலாயிற்று.

**நரகம் புகுதற்குரிய நெறி**

மாந்தர் எவரும் நரகம் செல்லுதலை விரும்பார்.மக்களைத் தீயவழியிலிருந்து நன்னெறிக்கு ஆற்றுப்படுத்தும் பொருட்டுச் சங்கப் புலவர்கள் நரகம் பெறுதற்குரிய நெறியினைச் சுட்டியுள்ளனர். அல்லது செய்யின் நரகம் கிட்டும் என்பது பழந்தமிழர் வழக்கு. சங்கப்புலவர்கள் நரகத்திற்கான வழிமுறைகளை எடுத்துக்கூறி மன்னனையும் மக்களையும்அவ்வழியில் செல்லாது தடுக்க முனைகின்றனர். அவர்கள் தம் பாடல்களில் குறித்துச் சென்ற நரகத்திற்கான நெறி வருமாறு;

1. அருளும் அன்பும் நீங்கிய நெஞ்சத்தார்
2. செய்ந்நன்றி கொன்றோர்
3. பெண் கொலை புரிந்தோர்
4. பொய் பேசுவார்
5. காதலுக்கு இடையூறு செய்வோர்

என்பனவாகும்.

**அருளும் அன்பும் நீங்கிய நெஞ்சத்தார்**

வாழும் மானிடர்க்கு அருளும் அன்பும் மிக இன்றியமையாதன. அருளையும் அன்பையும் வலியுறுத்தப் போந்த புலவர் எதிர்மறையாகப் பாடுகின்றார்.

அருளும் அன்பும் நீக்கி நீங்கா
நிரயம் கொள்பரோ டொன்றாது காவல்
குழவி கொள்வரின் ஓம்புமதி
அளிதோ தானேயது பெறலருங் குரைத்தே

(புறம்.5.5-8)

எனும் பாடலடிகள் அருளும் அன்பும் நீங்கிய உள்ளத்தார் நரகம் செல்வர் என்பதைச் சுட்டுகின்றன. மன்னன் குழந்தையைப் போல மக்களைப் பேணவேண்டுமென்றும், அஃதல்லாத ஆட்சி முறை அருளும் அன்பும் இல்லார் அடையக்கூடிய நரகிற்கு மன்னனைக் கொண்டு செல்லுமென்றும் அறிவுறுத்துகின்றார் புலவர். அருளையும் அன்பையும் நீக்கியோருக்கு நிரயத்துன்பம் என்றும் நீங்காமல் நிலைத்து நிற்கும் கருத்து.

### *செய்ந்நன்றி கொன்றோர்*

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு (குறள்.110)

என்பது வள்ளுவம். இச்சிந்தனை ஆலத்தூர் கிழார் பாடிய புறநானூற்றுப் பாடலிலும் (34) இடம் பெற்றுள்ளது. ஆனினது முலையாற் பெரும் பயனைக் கெடுத்த தீவினையாளர், மாட்சிமைப்பட்ட ஆபரணத்தையுடைய பெண்டிரது கருப்பத்தை அழித்தோர், தாய்தந்தையரைப் பிழைத்த கொடுந்தொழிலையுடையோர் ஆகிய இவர்களுக்கு அவர்கள் செய்த பாதகத்தினை ஆராயுமிடத்து அவற்றைப் போக்கும் வழி உள்ளது, ஆனால் நிலம் கீழ் மேலாயினும் ஒருவன் செய்தநன்றியைச் சிதைத்தோர்க்கு உய்வில்லை எனவே நரகம் உண்டென்பது பெறப்படுகிறது.

ஆன்முலை யறுத்த வறனிலோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்லென
அறம் பாடிற்றே............................... (புறம்.34.1-7)

என்பது அப்பாட்டு. பாவங்களுள் தலையாயது செய்ந்நன்றி மறத்தல் என்பதை வலியுறுத்த பிற பாவங்களையெல்லாம் ஒரு பொருட்டாக மதிக்கவில்லை புலவர். இவ்வாறு புலவர் பாடியதற்கு,

இது பரிசில் பெற்றுப் போகின்றானை
நீ எம்மை நினைத்து வருவையே
வென்றார்க்கு, இவ்வாறு செய்த
நின்னை வளவன் வாழ்கவென்று
பாடேனாயின், யானிருக்கும் இடத்துப்
பலகதிர்ச் செல்வன் படுதலறியான்;
அதனால் இம்மையின்பம் பெறேன்
எனவும் செய்ந்நன்றி கொன்றோர்க்கு
உய்தியில்லை யெனவே மறுமையின்கண்
நரகம்புகுவேன் எனவும் கூறியதாகக் கொள்க[22]

என்று காரணமுரைப்பர். பிற பாவங்களுக்குக் கழுவாய் இருப்பதாகப் புலவர் பாடியிருப்பினும் அப்பாவங்களும் செய்யத்தகாதவை என்பது மறைமுகமாகச் சுட்டப்பெறுகிறது. தொல்காப்பியத்தின்,

மிக்கதன் மருங்கின் வினைச்சொல் சுட்டி
அப்பண்பு குறித்த வினைமுதற் கிளவி
மெய்பெறத் தோன்றும் பொருட்டாகும்மே

(தொல்.சொல்.வினை.43)

என்ற வினையியல் நூற்பாவிற்கு உரைவரைந்த இளம்பூரணர்,

அறஞ் செய்தான் சுவர்க்கம் புகும்; தாயைக் கொன்றான் நிரயம்புகும் எனவரும். அறம் என்பது மிக்க தொன்று, அதனையாக்கினான் அவ்வுழிச் சேறல் ஒரு தலையாகலாற் புகுகின்றாரைக் கண்டான் போலப் 'புகும்' என்று நிகழுங்காலத்தாற் சொல்ல அமையும் என்பது [23]

என்று சொர்க்க நரகத்தைச் சான்று காட்டி விளக்குவர். ஆகவே தாய் தந்தையரைப் பிழைத்தோர்க்குக் கழுவாய் இருப்பதாக ஆலத்தூர் கிழார் கூறினும், பிறபாவங்களுள் இப்பாவம் பொல்லாதது என்பதை இவ்வுரைக் குறிப்பு தெளிவுபடுத்துகின்றது. இதனை ஆலத்தூர் கிழார் பாடல் மறைமுகமாகச் சுட்டுகிறது.

### பெண்கொலை புரிந்தோர்

சங்க காலத்தில் கொலை செய்தோர்க்கு நரகம் பெறுவது தண்டனையாகக் கருதப்பட்டது. பெண்டிருக்குத் தீங்கு நேராது காக்கும் பொருட்டுப் போர்க்காலத்தில் கூடப் பெண்டிரை வெளியேற்றுவது மரபு. அங்ஙனமிருக்க பெண்ணைக் கொலைசெய்தால் அவர் யாராக இருப்பினும் தண்டனை வழங்கப்பெறுவது இயல்பு. நன்னன் என்ற

குறுநில மன்னன் ஒரு பெண்ணைக் கொலை செய்த குற்றத்திற்கு, நரகத்துன்பத்தை தண்டனையாகப் பெறுகிறான். இதனை,

பெண்கொலை புரிந்த நன்னன் போல
வரையா நிரையத்துச் செலீஇயரோ அன்னை

(குறுந்.292.5-6)

என்ற பாடலடிகள் தெளிவுறுத்தும் அறங்கூறவையங்களின் தீர்ப்புகளைக் காட்டிலும் நரகத்தில் அடையும் துன்பத்திற்குச் சங்க காலத்தில் செல்வாக்கிருந்தமையை, நன்னனது வாழ்க்கை விளக்கிக் காட்டுகிறது.

### *பொய் பேசுவோர்*

சங்கத் தலைவன், தலைவியைப் பிரிந்து செல்லும் போது குறித்த பருவத்தில் திரும்பி வந்து விடுவதாகச் சூளுரைத்துச் செல்வான் ; ஆனால் அச்சூள் பொய்த்துப் போனதாகவே பல புலவர்கள் பாடியுள்ளனர். அவற்றுள் பொய்ச் சூளுரைப்போர்க்கு நரகத் தண்டனை உண்டு என்பதை நற்றிணைப் பாடலொன்று (329) புலப்படுத்துகின்றது. தலைவிக்கு ஆறுதல் மொழிகூறும் தோழி தலைவன் பொய்ச் சூளுரைத்து நரகத் துன்பத்தினைப் பெறும் இயல்புடையவனல்லன் ; அவன் குறித்த பருவத்தில் வந்துவிடுவான் என்று தேற்றுகிறாள்.

வரையா நயவினர் நிரையம் பேணார்
கொன்றாற்றுத் துறந்த மாக்களின் அடுபிணன்
இடுமுடை மருங்கில் தொடுமிடம் பெறாஅது
புனிற்று நிரை கதித்த பொறிய முதுபாறு
இறகு படைத்து இற்ற பறைப்புன் தூவி
செங்கணைச் செறித்த வன்கண் ஆடவர்

ஆடுகொள் நெஞ்சமொடு அதர்பார்த்து அல்கும்
அத்தம் இறந்தன ராயினும் நம் துறந்து
அல்கலர் வாழி தோழி உதுக்காண்
இரு விசும்பு அதிர மின்னிக்
கருவி மாமழை கடன்முகந் தனவே (நற்.329)

என்பது பாட்டு. நிரயம் போன்ற தீயநெறியைப் பின்பற்றாதவன் என்பதால் பொய்கூறுவோர்க்கு நரகம் கிடைப்பது உறுதியாகின்றது. இதற்கு,

நம்பால் அளவுபடாத அன்புடையராதலின்
நினக்கு வருவேமென்று பொய்ச்சூளுரைத்து
அது காரணமாகப் பின்னரெய்தும் நிரயம்
கொள்பவர் அல்லரென்றாள்[24]

என்ற கருத்து அரண் சேர்க்கும். தண்டனைகளில் கொடியது நரகம்; பொய் பேசுவோர்க்கு அத்தண்டனை கிடைப்பதாகக் கூறுவது சங்க காலத்தில் உண்மைக்கு இருந்த மதிப்பை வெளிப்படுத்துகின்றது.

### காதலுக்கு இடையூறு செய்வோர்

காதல் வாழ்க்கைக்கு மதிப்பும் மரியாதையும் கொடுக்கப்பெற்ற காலம் சங்ககாலம். அக்காலத்தில் ஆணும் பெண்ணுமாய் ஐந்திணை ஒழுக்கத்தில் சிறப்புற வாழ்ந்து வந்தனர். இருப்பினும் சில இடங்களில் மகள் மறுத்தல் செய்திகளும் மடலூர்தலும் காணப்பெறுகின்றது. அங்ஙனம் காதல் வாழ்க்கைக்கு இடையூறு நேரின், அதற்குரியோரைப் பழிப்பது உலக இயல்பு. ஆனால் அதற்கும் மேலாகச் சங்க காலத்தினர், நிரயமாகிய கொடிய துன்பம் பெறுமாறு வசைபாடுகின்றனர். இதனை,

நோயுங் கைம்மிகப்பெரிதே மெய்யுந்
தீயுமிழ் தெறலின் வெய்தா கின்றே
ஒய்யெனச் சிறிதாங்கு உயரிய பையென
நிரய நெஞ்சத் தன்னைக் குய்த்தாண்டு
உரையினி வாழி தோழி புரையில்
நுண்ணோர் எல்வளை நெகிழ்ந்தோன் குன்றத்து
அண்ணல் நெடுவரை ஆடித் தண்ணென
வியலறை மூழ்கிய வளியென்
பசலை ஆகந் தீண்டிய சிறிதே (நற்.236)

என்ற நம்பி குட்டுவனார் பாடல் தெளிவுறுத்தும். தலைவன் சிறைப்புறமாக நிற்கத் தோழியிடம் பேசுகிறாள் தலைவி. நரகம் போன்ற கொடிய நெஞ்சையுடைய அன்னை என்கிறாள். தாயைக் கடிந்துரைக்கும் தன் காதல் நெஞ்சத்தின் சிறப்பையெண்ணித் தலைவன் விரைவில் வரைந்து கொள்வான் என்று நம்புகிறாள் தலைவி. அவளை இற்செறிப்புச் செய்தலால் அன்னை நிரயத்தன்மையுடைவளாகிறாள். நரகம் கிடைக்கும் என்று பாடாது நெஞ்சிற்கு உவமையாக நரகம் பாடப்பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது. காதல் வாழ்க்கைக்கு ஊறு விளைவிப்போர் நரகம் பெறுவர் என்பது இங்கு மறைமுகமாகச் சுட்டப்பெறுகிறது.

மலையிலே பட்ட காற்றையும் விரும்பியேற்பவளை
நாம் வரையாது விடின் இறந்துபடுவது திண்ணமென்
றஞ்சி விரைய வரைவொடு புகுவனென்னுங்
கருத்தால் இங்ஙனங் கூறினாள். இல்வயிற்
செறித்துக் காவலோம்பலின் நிரயம் போன்ற
நெஞ்சத் தன்னை என்றிகழ்ந்தாள்.

இனித் துய்க்குங் காலத்தே துய்க்காவாறு
தடுப்பவர் நிரயம் புகுபவென்னுங் கொள்கை
உடைமையால் நிரயம் புகு நெஞ்சத்தன்னை
யென்றாளுமாம் [25]

என்ற கூற்று இப்பாடலுக்குப் பொருந்துகிறது. காதல் வெகுவாய்ப் பாராட்டப்பெற்ற காலமாதலால் புலவரது எண்ணத்திண்மை வெளிப்படுத்தப்பெற்றுள்ளது.

## நிரயம் எய்தாமலிருக்க வழி

நிரயம் பெறுவதற்கான நெறியைக் கூறினால் யாரும் அதனைச் செய்ய விரும்பார். ஆகையால் சங்கப் புலவர்கள் அந்நெறியைக் கையாண்டனர். மக்களை நல்வழிப்படுத்தும் பொருட்டு நரகத்திற்கான நெறி சொல்லப்பட்டது. நல்வினை செய்தார்க்குத் துறக்கம் கிட்டும் என்று பாடாது, நரகம் புகார் என்று பாடியிருப்பது சிந்திக்கத்தக்கது. நல்வினையாற்றிய அறவேட்கையுடைய பெரியோர் நிரயம் செல்லார் என்பதனை,

வெய்துற வறியாது நந்திய வாழ்க்கைச்
செய்த மேவலமர்ந்த சுற்றமொடு
ஒன்று மொழிந் தடங்கிய கொள்கை யென்றும்
பதிபிழைப் பறியாது துய்த்த லெய்தி
நிரைய மொரீஇய வேட்கைப் புரையோர்
மேயின ருறையும் பலர்புகழ் பண்பின் (பதிற்.15:26-31)

என்ற பாடலடிகள் தெளிவுற விளக்குகின்றன. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் நல்வினையும் நல்லறமும் செய்து பலரும் புகழும்

பண்புடையவனாதலால் நிரயத் துன்பம் அவனுக்கில்லை என்பது புலவரது எண்ணம். அறச்செயல்களை வற்புறுத்தும் இயல்பிற்றதாய் அறமல்லாத செயல்கள் நரகத்தைத் தரும் எனும் கருத்தை இப்பாடல் வெளிப்படுத்துகின்றது.

## ஆய்வு முடிவுகள்

* சொர்க்கம், நரகம் அடைதற்குரிய நெறியினைச் சங்கப் பாக்கள் விளக்கியிருப்பது மக்களை நன்னெறிப்படுத்துகின்றது.

* துறக்கம் செல்லுதற்குரிய நெறியாக, வீரம், வடக்கிருத்தல், கொடை, தவம், வேள்வி செய்தல், ஆண்மக்கட்பேறு, கணவனொடு இறத்தல், நல்வினையறம், புகழ், இறைமை ஆகியவற்றைச் சங்க இலக்கியம் சுட்டுகிறது.

* துறக்கத்திற்குச் செல்லும் காரணிகளுள் வீரம் முதன்மைச் சிறப்புடையது. 'வீர சுவர்க்கம்' என்ற சொல்லாட்சி உரைகளில் இடம்பெறுவது ஈண்டு குறிப்பிடத்தக்கது. வேந்தர்களிடம் தண்ணடை பெறுவதினும் அறப்போர் புரிந்து துறக்கம் புகுதல் பெருமையாகக் கருதப்பட்டது.

* வடக்கிருத்தல் துறக்கத்திற்குரிய நெறியில் வீரத்தோடு தொடர்புடையது. இதற்குக் கோப்பெருஞ்சோழனும், பெருஞ்சேரலாதனும் சான்றாகின்றனர். பாடலில் (புறம்.214) கோப்பெருஞ்சோழன் துறக்கம் செல்ல விழைந்தமைக்கான குறிப்புள்ளதன்றிச் சென்றதாகக் குறிப்பில்லை.

* ஈகைத் திறன் ஒருவனுக்குத் துறக்கத்தைத் தரவல்லது. ஆய் அண்டிரன் அறவிலை வணிகனல்லனாயினும் அவனுக்கு மறுமைப் பயன் உண்டு என்பது முடமோசியாரின் எண்ணம் (புறம்.134). துறக்கப்பயன் பெறுதற்கு ஈகையறத்தின் இன்றியமையாமையினை அறிவுறுத்துகின்றார் காவிட்டனார் (புறம்.359).

* தவம் செய்து துறக்கம் செல்லும் நெறி சங்க இலக்கியத்தில் சுட்டப்பெறுகின்றது. துறக்கம் பெறுவதினின்றும் வழுவியோரைத் தவம் செய்யும் நெறியைப் பின்பற்றுமாறு வலியுறுத்தப்பெறுகிறது (கலி.139).

* வேதம் ஓதி வேள்வி செய்தலும், செய்வித்தலும் ஆரிய மரபாயினும் துறக்கம் செல்லும் நெறியாகக் கருதப்பட்டமை சங்க இலக்கியத்தால் புலனாகின்றது. வேள்வியால் துறக்கம் அடைந்தோருள் அந்தணர்களுக்குப் பெரும் பங்குண்டு. பாலைக் கௌதமனாரும் மனைவியும் வேள்வியால் துறக்கம் புகுந்தோராகப் பதிற்றுப்பத்தின் பதிகம் பேசுகிறது.

* ஈமக்கடன் ஆற்றும் உரிமை ஆண் மகனுக்கு இருப்பதால் அவனைப் பெற்றோர் துறக்கம் செல்வர் (அகம்.66). ஆண்மக்கட்பேறு துறக்கம் செல்லுதற்குரிய நெறியாகச் சங்க காலத்தில் திகழ்ந்தமை மாமூலனார் பாடலால் புலனாகிறது (அகம்.66).

* உடன்கட்டை ஏறுதல், பெண்டிர் துறக்கம் செல்லுதற்குரிய நெறியாகச் சங்க காலத்தில் பின்பற்றப்பட்டது (புறம்.240, கலி.143). கைம்மைப் பெண்டிர்க்கு ஏற்பட்ட அவலம் அவர்களை உடன்கட்டை ஏறுமாறு செய்தது இது பெண்டிருக்கு மட்டுமே உரியது.

* துறக்கம் பெறுதற்குரிய நெறியில் குறிப்பிடத்தக்க சிறப்பு வாய்ந்தது நல்வினையறம். நல்வினை செய்தாலன்றித் துறக்கம் பெறலாகாது என்ற கருத்துப்படச்சங்கப்பாடல்கள் காணப்படுகின்றன. (கலி.118, புறம்.18,38,174,213,214,பரி.19) அறவினை துறக்கத்திற்குரிய விழுத்துணையாகக் கருதப்பட்டது (புறம்.387)

* இம்மைப்புகழ் மறுமைத் துறக்கத்திற்கு இட்டுச் செல்லும் என்பதை மோசிகீரனார் பாடல் புலப்படுத்துகின்றது (புறம்.50). புலவரால் பாடப்படும் புகழுடையோர் வலவனேவா வானவூர்தி எய்துவர். மன்னர்களிடம் கொடைபெறவிரும்பிய புலவர்கள், தங்களைப் போற்றினால் அவர்களுக்குத் துறக்கம் கிடைக்கும் என்று அறிவுறுத்தினர்.

* இறைவனை வணங்குவதும் துறக்கத்திற்குரிய நெறியாகக் கருதப்பட்டமை பரிபாடலால் அறியப்பெறுகின்றது. இறை வழிபாட்டோடு இறைவன் உறையும் இடமும் துறக்கப் பேற்றைத் தர வல்லது என்று சங்கப்புலவர்கள் நம்பியமை குறிப்பிடத்தக்கது. இச்சிந்தனை பிற்காலத்திய இறைமைக் கோட்பாட்டோடு ஒப்புநோக்கத்தக்கது.

* அருளும் அன்பும் இல்லாதார்க்கும், செய்ந்நன்றி கொன்றோர்க்கும், பெண்கொலை புரிந்தோருக்கும், பொய் பேசு வோர்க்கும், காதலுக்கு இடையூறு செய்வோருக்கும் நரகம் கிட்டும் என்பது பண்டையோர் கருத்து. இவை நரகம் அடைதற்குரிய நெறியாகச் சங்கப்புலவர்களால் சுட்டப்பெற்றவை இந்நெறிமுறைகள் மக்களை நல்வழிப்படுத்தும் முகத்தான் பாடப்பெற்றனவாகும்.

* நரகம் அடையாமலிருக்க வேண்டுமாயின் நல்லறம் செய்தல் வேண்டும் என்ற சிந்தனையும் மக்கள் மனத்தில் புகுத்தப்பெற்றது.

## சான்றெண் விளக்கம்

1. பெ.மாதய்யன் (2001), **வரலாற்று நோக்கில் சங்க இலக்கிய பழமரபுக் கதைகளும் தொன்மங்களும்,** தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், ப.145.
2. கி.பாண்டுரங்கன் (1986), **பண்டைத்தமிழர் போரியல் வாழ்க்கையும் தற்காலப்போர் நடவடிக்கையும்,** வெற்றிவேல் வெளியீடு, 63, தென்மேற்கு போக்சாலை, சென்னை. ப.115.
3. பெ.மாதய்யன் (2001), **வரலாற்று நோக்கில் சங்க இலக்கிய பழமரபுக் கதைகளும் தொன்மங்களும்,** தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், ப.147.
4. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), **பதிற்றுப்பத்து மூலமும் உரையும்,** திருநெல்வேலி, தென்னிந்திய வைச சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், ப.247.
5. உ.வே.சாமிநாதய்யர் (1963), **புறநானூறு மூலமும் உரையும்,** கபீர் அச்சுக்கூடம், சென்னை, ப.156.
6. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), **புறநானூறு மூலமும் உரையும் (முதல் பகுதி),** சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. ப.281.
7. க.நெடுஞ்செழியன், **தமிழ் இலக்கியத்தில் உலகாய்தம்,** ப.258.
8. மேலது, ப.376.
9. மேலது, ப.263.
10. நச்சினார்க்கினியர் (உ.ஆ.1931) **கலித்தொகை மூலமும் உரையும் (நெய்தல்)** நோபில் அச்சுக்கூடம், சென்னை, ப.868.

11. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை (2002), **புறநானூறு மூலமும் உரையும்,** கழக வெளியீடு, சென்னை, ப.75.

12. நச்சினார்க்கினியர் (உ.ஆ), **பத்துப்பாட்டு மூலமும் உரையும்,** கழக வெளியீடு, சென்னை, ப.394.

13. பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ), **பத்துப்பாட்டு (இரண்டாம் பகுதி),** சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, ப.128.

14. அ.ஜம்புலிங்கம் (2003), **சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி,** இந்துமதி பதிப்பகம், 3, லால் பேட்டைத் தெரு, சிதம்பரம், ப.61.

15. மா.சிவகுருநாதப் பிள்ளை (2000), **நாயன்மார்கள் வரலாற்றில் பல்வகைச் செய்திகள்,** திருவரசு புத்தக நிலையம், 13, தீனதயாளுதெரு, தியாகராய நகர், சென்னை, ப.48.

16. பெ.மாதய்யன் (2001), **வரலாற்று நோக்கில் சங்க இலக்கிய பழமரபுக் கதைகளும் தொன்மங்களும்,** தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், ப.149.

17. குஞ்ஞு ன் பிள்ளை, **பண்டைய கேரளம்,** ப.209.

18. செ.பழனிச்சாமி (1989), **புறநானூற்றில் தமிழர் பண்பாடு,** வாணி பதிப்பகம், 402, அழகேசன் சாலை, கோவை, ப.

19. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), **புறநானூறு மூலமும் உரையும் (முதல் பகுதி),** சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, ப.80.

20. பெ.மாதய்யன் (2001), **வரலாற்று நோக்கில் சங்க இலக்கிய பழமரபுக் கதைகளும் தொன்மங்களும்,** தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர், ப.150.

21. மேலது, ப.151.

22. உ.வே.சாமிநாதய்யர் (உ.ஆ), **புறநானூறு மூலமும் உரையும்,** கபீர் அச்சுக்கூடம், சென்னை, பக்.89,90.

23. இளம்பூரணர் (உ.ஆ), ***தொல்காப்பியம் சொல்லதிகாரம்***, ப.122.

24. பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ.1962), நற்றிணை நானூறு மூலமும் உரையும், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, ப.559.

25. மேலது, ப.407.

# வாழ்வின் முடிவு

மாந்தர் பூதவுடல் நீத்து உயிர் துறக்கும் போது அவ்வுயிர் போன இடம் யார்க்கும் புலனாகாதது. இருப்பினும் அவ்வுயிர் எங்கோ செல்வதாக மக்கள் நம்புகின்றனர். நிலவுலகிலுள்ள அனைத்துயிர்களுக்கும் முடிவு உண்டு என்பது வரையறுக்கப்பட்ட உண்மை. மனித வாழ்வின் முடிவினைச் சங்கப்பாடல்கள் வழி அறியமுடிகின்றது. மக்களை நல்வழிப்படுத்துவதை நோக்கமாகக் கொண்ட அக்காலப் புலவர்கள் துறக்க, நிரயச் செய்திகளை வாழ்வியலோடு தொடர்புப்படுத்திப் பேசியுள்ளனர். வாழ்வியல் முடிவு குறித்துச் சங்க மரபினையும் மாற்றங்களையும் இவ்வியல் ஆராய்கிறது.

## மரபும் மாற்றமும்

அறம், பொருள், இன்பம் ஆகிய முப்பொருளே தமிழர் பொருள். நாற்பொருள் என்று கூறுதல் தொல்காப்பியத்து இல்லை. இதனை,

இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த அய்ந்திணை மருங்கின்

(தொல்.களவு.1)

என்ற நூற்பா தெளிவுபடுத்தும். தொல்காப்பியர் வீடு பேற்றினை நான்காவதாகக் குறிக்கவில்லை. ஆனால் இந்த அமைப்பு நுட்பத்தினை விளக்கப்போந்த இளம்பூரணர்,

அறனும் பொருளும் இன்பமும் என்னாது
இன்பமும் பொருளும் அறனும் என்றது என்னை
யெனின் பலவகை உயிர்கட்கும் வரும்
இன்பம் இருவகைப்படும். அவையாவன,

போகம் நுகர்தலும் வீடு பெறுதலும் என
அவற்றுள் வீடு பேறு துறவறத்தில் நின்றார்க்கல்லது
எய்தல் அரிதாயிற்று. போக நுகர்தல்
மனையறத்தார்க்கு எய்துவது. அவரெய்தும்
இன்பமும் அவ்வின்பத்திற்குக் காரணமாகிய
பொருளும் அப்பொருட்குக் காரணமாகிய
அறனும் எனக்காரிய காரணம்
நோக்கி வைத்தார் என்க[1]

என்று குறிப்பிடுவர். இக்கருத்து பிற்காலத்தில் ஏற்பட்ட வளர்ச்சியைக் காட்டுகிறது. சங்கப் புலவர்களின் துறக்கக் கோட்பாடு இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. உயிருடன் இருக்கும் போது உற்றதை உணரும் திறன் இருக்க, இறந்தவுடன் எரியூட்டின் உணர்திறன் இல்லாதிருப்பதால் உடம்பை விட்டுச் சென்ற பொருள் ஒன்று உண்டு என்பது புலனாகிறது. அப்பொருளுக்கு ஏற்படும் மாற்றத்தினைக் குறிப்பதாக நான்காவது பொருளாகிய வீடுபேறு வலியுறுத்தப்பெறுகிறது.

சமுகத்தின் வளர்ச்சிக்கேற்ப இக்கோட்பாடுகளும்
வளர்ச்சி பெற்றன. மனிதன் பெறவேண்டிய
உறுதிப் பொருள்களாக வற்புறுத்தப்பெறும்
அளவிற்கு இவை மனித வாழ்வில்
தலைமை பெற்றன[2]

வாழ்வின் முடிவில் அவரவர் செய்த நல்வினை, தீவினைக் கேற்பத் துறக்கமோ நிரயமோ அடையப் பெறுவதைச் சங்க இலக்கியங்கள் சுட்டியுள்ளன. சங்கப்புலவர்களும் முப்பொருள் மரபையே

பின்பற்றியிருப்பினும், துறக்கப்பேறு பிற்காலத்தவர் சுட்டும் நான்காவது பொருளோடு ஒப்புநோக்கத்தக்கது.

**துறக்கமும் வீடுபேறும்**

குடும்ப வாழ்க்கை குறித்து விரிவாகப் பேசும் தொல்காப்பியர், வாழ்க்கையின் முடிவினை விரித்துப் பேசிலர்.

காமஞ்சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ்சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே

(தொல்.பொருள்.கற்பு.51)

என்பதில் இல்வாழ்க்கையின் முடிவுநிலை குறிக்கப்பெறுகிறது. காமத்தினின்றும் நீங்கிய கடைசிக் காலத்தில் தலைவனும் தலைவியும் தம் மக்களோடும் அறம்புரியும் சுற்றத்தாரோடும் இணையில்லா இன்பப்பேற்றினை எய்த முயல்வது வாழ்வின் முடிவும் பயனுமாகும். இதனை,

பழந்தமிழ்க் கொள்கைப்படி திருமண
வாழ்க்கையின் நோக்கம் பாலுறவு மட்டுமன்று.
கணவனும் மனைவியும் உயர்நிலை எய்தி உய்வு
பெறுவது இதன் தலையாய நோக்கமாகும்[3]

என்று விளக்குவர். இங்குச் சுட்டப்பெறும் 'இறத்தல்' என்பதற்கு 'வயது முதிர்தல்' என்று பொருள். வாழ்வின் முடிவினை விளக்குவதாக இந்நூற்பாவைச் சுட்டியுள்ளார் தொல்காப்பியர். மூப்படைந்த காலத்தில் 'செல்லும் உலகம்' சிறப்பாக அமைதற்கான நெறி இங்குக் குறிக்கப்பெறுகிறது.

தொல்காப்பியர் வீடு கூறாரோவெனின்,
அகத்தியனாரும் தொல்காப்பியனாரும்
வீடுபேற்றுக்கு நிமித்தம் கூறுதலன்றி
வீட்டின் தன்மை இலக்கணத்தால் கூறார்
என்று உணர்க....... இக்கருத்தானே
வள்ளுவனாரும் முப்பாலாகக் கூறி மெய்
உணர்தலான் வீடு பேற்றுக்கு நிமித்தம் கூறினார்[4]

என்பதால் தொல்காப்பியம் குறித்த முப்பொருள் திறன், நாற்பொருள் தன்மையை உள்ளடக்கியது என்பது தெளிவாகிறது. சங்க இலக்கியத்தில் இடம் பெறும் துறக்கச் செய்திகள் வீடுபேற்றுச் சிறப்பையும் புலப்படுத்துகின்றன.

சங்க இலக்கியத்தில் 'வீடுபேறு' என்ற சொல்லாட்சி இடம் பெறவில்லை ; இருப்பினும் நக்கீரன் திருமுருகாற்றுப்படை, மாங்குடி மருதனாரின் மதுரைக் காஞ்சி ஆகியவை வீட்டு நெறிக்குச் செல்ல அறிவுறுத்துகின்றன.

**துறக்கத்தின் இருநிலைகள்**

உடம்பினின்றும் பிரிந்து துறக்கம் சென்ற உயிர் இருவித நிலைகளை அடைகிறது. அவை,

1. பிறவி நிலை 2. பிறவா நிலை என்பன.

**1.பிறவி நிலை**

சங்க இலக்கியத்தில் மறுபிறவி குறித்துப் பல பாடல்கள் இருப்பினும் துறக்கம் சென்றோருக்குரிய பிறவி நிலை இங்குப் பேசப்படுகின்றது. சொர்க்கம் சென்றோர் அங்குள்ள இன்பம் நுகர்ந்த

பின்னர் மீண்டும் பிறப்பதாகச் சங்கப் புலவர்கள் சுட்டுகின்றனர். ஆடு கோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கைப்பாடினியார்,

........................யெனைய தூஉம்
உயர்நிலை யுலகத்துச் செல்லா திவணின்
றிருநில மருங்கி னெடிது மன்னியரோ (பதிற்.54:9-11)

என்று பாடுகிறார். இதில் துறக்கம் சென்று மீண்டும் பிறக்கும் பிறவி நிலை குறித்துப் பேசப்படுகிறது. உடன் திரும்ப இயலாது என்பதால் நிலவுலகில் நெடுங்காலம் வாழுமாறு வாழ்த்துகின்றார் புலவர்.

துறக்கவுலகு செல்பவர் சிறிது போதில்
மீளாராதலால் 'எனையதூஉம்'
என்றார். எனையதூஉம் என்றதற்கு
எத்துணையின்பச் சிறப்புடையதாயினும் என்றுமாம்[5]

என்று பொருளுரைப்பர். துறக்கம் சென்றோர்க்கு மீண்டும் பிறவி நிலையும் பிறவா நிலையும் உண்டென்பதைக் கோப்பெருஞ்சோழனின் பாடல் புலப்படுத்துகின்றது.

செய்வினை மருங்கி னெய்த லுண்டெனிற்
றொய்யா வுலகத்து நுகர்ச்சியுங் கூடும்
தொய்யா வுலகத்து நுகர்ச்சி யில்லெனின்
மாறிப் பிறப்பி னின்மையுங் கூடும்
மாறிப் பிறவா ராயினு மிமயத்துக்
கோடுயர்ந் தன்ன தம்மிசை நட்டுத்
தீதில் யாக்கையொடு மாய்தறவத் தலையே

(புறம்.214:7-13)

என்பது அப்பாட்டு. வினைப்பயன் முற்றுப் பெறும் வரை துறக்கம் சென்ற உயிர் மீண்டும் பிறக்கும் என்பதும் வினைப்பயன் முடிந்த வழி உயிர் பிறவாத் தன்மை பெறும் என்பதும் இப்பாடலால் புலனாகின்றது. இதற்கு,

> ஆசீவகத்தின் மெய்யியல், அளவைஇயல்
> இவற்றின் அடிப்படையில் அமைந்தது
> இப்பாடல் நிர்வாண நிலையை அடையத்தக்க
> துறவு நெறியை மேற்கொண்டவராக இருந்தாலும்,
> வினைப்பயன் இருந்தால் மட்டுமே
> தொய்யாவுலகத்து நுகர்ச்சி கிட்டும்,
> வினைப்பயன் முற்றுப் பெறாத வழி அவ்வுலகத்து
> நுகர்ச்சி கிட்டாது. எனவே அடுத்த பிறவி எடுக்க
> நேரிடும் அத்தகைய பிறவிகளில் வினைப்பயன்
> முதிர்ச்சியினால் பிறவாத் தன்மை ஏற்படும்[6]

என்று கருத்துரைப்பர். உயிர் மாய்தல் வாழ்க்கையின் முடிவாக இருப்பினும் அவ்வுயிர் மீண்டும் பிறவி நிலைக்கு உட்படுவதைச் சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன. இதனை,

> உயிரின் வாழ்க்கைப் பயணம் நிற்பதேயில்லை.
> இந்த மூன்று உலகங்களிலும் புகுந்து புகுந்து
> புறப்படுகின்றது. அறியாமையினின்றும்
> நீங்கிப் பற்றற்று இரு வினைகளிலிருந்தும்
> நீங்கினால் இந்த மூன்று உலகங்களின்
> வாழ்வினின்றும் உயிர் நீங்கி விடுதலை பெறும்[7]

என்ற கருத்துத் தெளிவுறுத்தும். நரகம் சென்ற உயிர்களுக்கு மட்டும் பிறப்பு உண்டு என்ற நிலையிலிருந்து, துறக்கம் சேர்ந்தவர்களிலும் வினைக்கேற்பப் பிறவிநிலை பெறுவர் என்ற குறிப்பினைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகின்றது.

பதிற்றுப்பத்தின் நான்காம் பத்தில் களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் 'வசையில் செல்வ' (38:12) என்று பாடுகிறார். குற்றமில்லாத செல்வத்தையுடையவன் என்பது இதன் பொருள். இதற்குப்,

> பரிசிலர் வெறுக்கையாதலால் நிலைபெறும் புகழ்
> இம்மைப் பயனும், வசையில் செல்வமுடை
> மையால் மறுமைப்பயனும் சுட்டப்படுதல்
> குறிக்கத்தக்கது[8]

என்று உரை வரைவர். மேலும் 'உலகத்தோரே பலர்மற் செல்வர்' (பதிற்.38:1) என்பதற்கு,

> உலகத்துச் செல்வர் பலரும் பெற்றுள்ள
> புகழினும் நின் புகழே மிக்கு நிற்கும் ; இதற்கு
> ஏது நீ பிறர்க்கென வாழ்கின்றாயாதலால் என்பது.
> எனவே, ஏனையெல்லாரும் பிறர்க்கென
> வாழ்தலையொழிந்து தமக்கென வாழ்தலே
> பொருளாகக் கொண்டன ரென்பதாம், இம்மை,
> மறுமை, வீடு என்ற மூன்றுக்குரிய நலஞ்செய்து
> கோடற்கு உரிய இடமாதலின், உலகத்தை
> மேற்கொண்டு இம்மையில் இன்ப வாழ்வும்
> புகழும், மறுமையில் துறக்கவின்பமும்

வீடுபேறும் பெறுதற்குத் துணையாவது
செல்வமாதலின், அதனையுடையோரையே
விதந்து "செல்வர் பலர்மன்" என்றார்.[9]

இவ்விளக்கத்தை நோக்கும் போது, மறுமையின்பத்தில் சுட்டப்பெறும் துறக்கவின்பம் பிறவிநிலையினையும், வீடுபேறு பிறவாநிலையையும் குறிப்பது புலனாகின்றது. இங்குப் பிறவா நிலையாகிய துறக்கத்திற்கு 'வீடுபேறு' என்ற தொடரை உரையாசிரியர் ஆளுகின்றார்.

**2. பிறவா நிலை**

துறக்கத்தின் மற்றொரு நிலையாகிய பிறவா நிலை பிற்காலத்தவர் குறிப்பிடும் வீடு பேறாகும். வினைப் பிறவிகளில் சென்று உழலாமல் பேரின்பம் பெறுவது இந்நிலை.

முக்திநிலை யாதொன்றும்வேண்டாதது
அந்நிலையே பேரின்பமும் முழு நிறைவுமானது.
இத்தகு முக்திநிலை பெற ஆன்றோர் பல்லோர்
பலவழி தந்துள்ளனர். பாரதியாரும் தன்
இன்சொல்லால் ஒரு வழி தருகின்றார்.
முக்தி என்பது என்ன? அது துறக்கப்பேறு.
முழுமுதலான இறைவனைக் கண்டு அவனுடன்
இரண்டறக் கலந்த நிலை. இந்நிலையடைய
மனம் நிலைபெறவேண்டும். மனம் நிலைபெறாது
ஆசையிற் சுழலுமாயின் ஒரு பொழுதும் முக்தி
வாய்க்காது. மரணமே கிட்டும். ஆகவே
மனிதனே நீ கவலைப்படுவதை விட்டொழி
என்கிறார்[10]

என்ற கருத்து பிறவாநிலை பெறுதற்குரிய நெறியினைக் காட்டுகிறது. சங்க காலத்தில் பிறவாநிலை எய்தும் போக்கு இருந்தமையினைச் சங்க இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன. செல்வக் கடுங்கோ வாழியாதனைப் புகழ்ந்த கபிலர், பாரி திரும்பி வர இயலாத நெடுந்தொலைவிற்குச் சென்றதாகப் பாடுகின்றார்.

வாரா சேட்புலம் படர்ந்தோ னளிக்கென (பதிற்.61:7)

என்ற அடி இதற்குச் சான்றாகின்றது. இதற்கு,

பிறவா நிலையும் அதற்குரிய மேலுலகும்
பெற்றா னென்பார் வாரா சேட்புலம்
படர்ந்தோன் என்றார்[11]

என்று விளக்கம் கூறியிருப்பது பிறவாநிலை குறித்த புலவரின் கருத்தைப் பறைசாற்றுகின்றது. இச்சிந்தனைப் போக்கினை,

நீளிலை யெஃக மறுத்த வுடம்பொடு
வாரா வுலகம் புகுதலொன் றெனப் (புறம்.341:14-15)

என்ற பரணர் பாடலிலும் காணமுடிகின்றது. இங்குச் சுட்டப்பெறும் 'வாராவுலகம்' திரும்பி வர இயலாத துறக்கம் சென்றமையினைக் குறிக்கிறது. விரும்பிய பெண் கிடைக்கப்பெறாமையால் பிறவா நிலையாகிய முடிவைத் தேடுகின்றான் ஒரு வேந்தன். இங்குத் துறக்க இன்பம் நுகர்ந்தபின் கிட்டும் பிறவி நிலை குறிக்கப்பெறவில்லை. இவ்வுலக இன்பம் பெற இயலாத நிலையில் மேலுலக இன்பத்தையும் அவன் விரும்பவில்லை. அதற்கும் அப்பாற்பட்ட பிறவா நிலைத் துறக்கத்தைப் பெற விரும்புகிறான்.

இன்ப துன்பங்களை நுகரும் நுகர்ச்சி இருக்கும் வரையில் உயிருக்குப் பிறப்பு உண்டு. பிறப்பு இறப்பு, இன்பம், துன்பம், செயல் நுகர்ச்சி, போக்கு, வரவு, இரவு பகல், அறிவு அறியாமை, நன்மை தீமை முதலிய இரட்டைகளினின்றும் விடுபட்ட உயிருக்குச் சொர்க்கம், நிலவுலகம், நரகம், என்ற மூன்று உலகிலும் வாழும் வாழ்க்கை இராமற் போய்விடும். அந்த வாழ்க்கையினின்றும் விடுதலை பெறுவதே வீடு. முக்தி என்பதும் அதுதான்[12]

என்ற கருத்திற்கிணங்கக் கபிலரும் பரணரும் பாடியுள்ளனர்.

யான் எனதென்னும் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த உலகம் புகும் (குறள்.346)

என்ற குறள் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. 'வாரா சேட்புலம்' என்று சங்கப் புலவர்கள் குறிப்பதனை,

'வானோர்க்கு உயர்ந்த உலகமாக' எடுத்தாண்டுள்ளார் திருவள்ளுவர். மேலும்,

கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி (குறள்.356)

என்றும் குறிப்பிடுகிறார். துறக்க உலகத்திலும் உயர்ந்த நிலையிலிருக்கக் கூடிய உலகம் குறித்துப் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது (6). இந்த உலகத்தினை 'ஆனிலையுலகம்' என்று குறிப்பர். இதனை,

கீழது முப்புண ரடுக்கிய முறைமுதற் கட்டின்
நீர்நிலை நிவப்பின் கீழும் மேலது
ஆனிலை யுலகத் தானு மானாது
உருவும் புகழு மாகி விரிசீர்த் (புறம்.6:5-8)

என்ற பகுதி புலப்படுத்தும். ஆனிலையுலகம் என்பது, பிறவா நிலையுறும் துறக்க உலகத்தைக் குறிக்கிறது.

> மேலது என்றது, மேலுள்ள துறக்க முதலிய உலகுகளை யெல்லாம் அகப்படுத்தி நிற்குமாயினும், எல்லா உலகிற்கும் மேலதாகிய ஆனிலையுலகிற்காயிற்று[13]

என்பதால் பிறவா நிலை பெறுவோர் அனைத்துலகிற்கும் அப்பாற்பட்டதொரு உலகிற்குச் செல்வர் என்ற செய்தி தெளிவாகின்றது. 'ஆனிலையுலகம்' போன்று 'உக்கரை' என்ற சொல்லாட்சியும் குறிப்பிடத்தக்கது.

குன்று தலை மணந்த மலைபிணித் தியாத்தமண்
பொதுமை சுட்டிய மூவரு லகமும்
பொதுமை யின்றி யாண்டிசி னோர்க்கும்
மாண்ட வன்றே யாண்டுக டுணையே
வைத்த தன்றே வெறுக்கை வித்தும்
அறவினை யன்றே விழுத்துணை யத்துணைப்
புணைகை விட்டோர்க் கரிதே துணையழத்
தொக்குயிர் வெளவுங் காலை
இக்கரை நின்றிவந் துக்கரை கொளலே (புறம்.357)

இதில் குறிக்கப்பெறும் இக்கரை, உக்கரை என்ற சொற்கள் ஆய்விற்குரியன. அ,இ,உ என்பன சுட்டெழுத்துக்கள். ஆகவே இக்கரை

என்பது இவ்வுலகத்தையும் உக்கரை என்றது மேலுலகிற்கும் அப்பாற்பட்டதொரு உலகத்தையும் குறிப்பதாகக் கருத இடமுண்டு. இக்கரைக்கு அப்பாலுள்ளது அக்கரை ; ஆதலால் அக்கரையாகிய அவ்வுலகிற்கும் இடைப்பட்ட உலகைக் குறிப்பதாக 'உக்கரை' என்ற சொல்லாட்சியைக் கையாண்டுள்ளார் புலவர். இதற்கு,

புணையென்பதற்கேற்ப, இம்மையம்மைகள்
'இக்கரை உக்கரை' எனப்பட்டன.
அக்கரையெனின், அது மறுமையாகிய
துறக்கவுலகாய் மீளவும் பிறத்தற்கேதுவாகலின்
அதனின் மேலதாகிய வீட்டுலகு
என்றற்கு உக்கரை என்றார்[14]

என்று ஔவை சு. துரைசாமிப்பிள்ளை குறிப்பிடுவர்.

உக்கரையும் அக்கரையும் வீட்டுலகைக் குறிப்பதாக உ.வே. சாமிநாதய்யரும் பொருள் வரைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. 'அக்கரை' என்பதற்குரிய உரையில் இருவரும் மாறுபட்டிருப்பினும் 'உக்கரை' என்பதற்கு, 'வீட்டுலகம்' என்று பொருள் வரைந்து துறக்கவுலகம் சென்றோர்க்கு மீண்டும் பிறப்பு உண்டு என்று கூறியிருப்பது நோக்கத்தக்கது. உடம்பை விட்டு உயிர் நீங்குங் காலத்து வேறெதுவும் உடன் வருவதில்லை. ஆகவே நல்லறம் செய்து வீடுபேறு அடைக என்று வலியுறுத்துகிறது இப்பாடல்.

வானுலகத்தவராயினும் மண்ணில் பிறந்து வினைகளைச் செய்தாலன்றிப் பிறவா நிலையினை வீட்டுலகினைப் பெறஇயலாது.

இவ்வானுலகோர் ஏற்கனவே இணையிலா
நல்வினையுடையோராகையால் இவர்கள்
வீட்டுலகம் பெறும் பக்குவமும்
உறுதியுமுடையோராவார். எனவே,
இத்தேவர்களின் ஆயுட்கால முடிந்து,
மண்ணுலகில் மானிடராகப் பிறந்து ஆன்ம
விடுதலை உணர்வோடு
இல்லற வாழ்க்கை வாழ்ந்து துறவறமேற்கொண்டு
தூயதவ மேம்பாட்டுப் பயனால் வினைகளை
வென்று வீட்டுலகம் நண்ணும் பேறு பெறுவர்[15]

என்பதால் துறக்கமாகிய தேவருலகம் சென்றோர்க்குப் பிறவி நிலை உண்டென்பதும் அதற்கும் மேற்பட்ட தன்மையடைவதனைப் பிறவா நிலை பெற்றதாகவும் கருதமுடிகின்றது. செவ்வேளும், திருமாலும் பிறவாநிலைத்துறக்கத்தைத் தரவல்லவர்கள் என்பதைப் பரிபாடலால் அறியமுடிகின்றது.

நின்கண மெதிர்கொண்டோ ரறங்கொண்டோ ரல்லதை
மன்குண முடையோர் மாதவர் வணங்கியோ ரல்லதை
செறுதீ நெஞ்சத்துச் சினநீடி னோருஞ்
சேரா வறத்துச் சீரி லோரு
மழிதவப் படிவத் தயரி யோடு
மறுபிறப் பில்லெனு மடவோருஞ் சேரார்
நின்னிழல் அன்னோ ரல்லதின் னேர் (பரி.5:11-77)

என்பதில் முருகனுடைய அருளையும் அன்பையும் தனக்கு அளிக்குமாறு வேண்டுகின்றார் புலவர். 'மறுபிறப்பு இல்லை என்போரை மடவோர்'

என்று சுட்டுவதால் முருகனின் தாளை அடைந்தோரே பிறவா நிலை எய்துவர் என்பது பெறப்படுகின்றது. இதனைப்போன்று திருமாலையும்,. திருமாலிருங்குன்றையும் அடைந்தவர்களும் துறக்கம் எய்திச் சிறப்படைவர் என்பதும் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றது. (பரி.13,15)

வாழ்க்கையின் முடிவில் பிறவா நிலை பெறுவதைச் சங்க காலத்தவர் பெரிதும் விரும்பினர் என்பது மேற்சுட்டிய சான்றுகளால் புலனாகின்றது.

### வானுலகம் தந்த வரவேற்பு

வாழ்வின் முடிவில் மனிதன் வானோரால் வரவேற்கப்படுகிறான். இறந்த உயிர் வானுலகம் சென்று பெற்ற சிறப்பினை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடல் விளக்குகிறது (புறம்.241). இப்பாடலில் ஆய் அண்டிரன் இறந்த பிறகு நெடியோன் கோயிலுட் புகுந்து வரவேற்பு பெற்ற செய்தி குறிக்கப்பெற்றுள்ளது.

> ஒவ்வோர் உடலுள்ளும் ஒவ்வோர் ஆன்மா
> உண்டு. நமது கண்ணுக்குப் புலனாகாவிடினும்
> அத்தகைய ஆன்மாக்கள் உளவென்பது நிச்சயம்
> அவை நித்தியமானவை. உடல் அழியும் போதும்
> ஆன்மா அழிவதில்லை என இன்று நம்மிடையே
> வழங்கும் கருத்துக்கள் யாவும் வேத
> காலத்திலேயே உள்ளவையும், வேதங்களால்
> ஒப்புக்கொள்ளப் பட்டவையுமாகும். ஆனால்,
> உடல் அழிந்தபின் ஆன்மாவுக்கு என்ன
> நிகழ்கின்றது என்பதில் மட்டுமே வேதங்களிலே

காணப்படும் கொள்கைக்கும் பிற்காலத்தில்

இந்துக்களிடையே வளர்ச்சியடைந்துள்ள

கொள்கைக்கும் சற்று வேற்றுமை காணப்படுகின்றது.[16]

இங்குச் சுட்டப்பெறும் ஆன்மாவுக்குக் கிடைத்த வரவேற்பினையே ஆய் அண்டிரனைப் பற்றிய ஏணிச்சேரி முடமோசியார் பாடல் குறிக்கிறது.

திண்டே ரிவலர்க் கீத்த தண்டார்
அண்டிரன் வரூஉ மென்ன வொண்டொடி
வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுட்
போர்ப்புறு முரசங் கறங்க
ஆர்ப்பெழுந் தன்றால் விசும்பி னானே (புறம்.241)

என்பது அப்பாட்டு. ஆய் அண்டிரனின் முடிவிற்கு இந்திரன் தன் கோயிலில் வரவேற்பளிப்பது இறந்த பிறகு ஆன்மாவுக்கு நிகழும் சிறப்பைப் புலப்படுத்துகிறது.

இதே போன்று வைகுந்தத்தில் ஆரவாரமொலிக்க

நிகழ்ந்த வரவேற்பினைத் திருவாய் மொழியில்

சடகோபர் குறிப்பது ஒப்புநோக்கத்தக்கது.[17]

**துறவு தரும் முடிவு**

வாழ்க்கையின் இறுதிக் காலத்தில் மேற்கொள்ளும் துறவு மனிதனைத் துறக்கம் பெறச் செய்கிறது. தவம் செய்வது குறித்துப் பல்வேறு கருத்துகள் காணப்படினும் அவையனைத்தும் மனிதனின் இறுதி வாழ்வோடு தொடர்புபடுத்தியே பேசப்பட்டுள்ளன. மனவேட்கை அடங்கின அரிய விளக்கத்தையுடைய செய்தற்கரிய தவத்தை முயன்றோர் தம்முடம்பை இவ்வுலகிலே விட்டொழித்து உயருலகாகிய

துறக்கம் செல்வர் என்பது நல்லந்துவனாரின் முடிவு (கலி.138)· இக்கருத்து உபநிடதங்கள் குறிக்கும் முக்தியை அடைவதற்கான வழிகளோடு பொருந்தி வருகின்றது. முக்திக்கான வழிகளுள் பற்றறுத்தல் குறிப்பிடத்தக்கது. உடல் நீங்கிய பிறகு ஏற்படும் விவேக முக்தியும், உடலோடு இருக்கும்போது பெறலாகும் சீவன் முக்தியும் பற்றி உபநிடதங்கள் எடுத்துரைக்கின்றன.

> இந்த முக்திகளைப் பெறுவதற்கு உரிய வழிகளும் உபநிடதங்களிலே கூறப்படுகின்றன. அவற்றுள் வைராக்கியமும் ஞானமும் முக்கியமானவை. வைராக்கியமென்பது பற்றறுத்தல். இது அகங்காரத்தை நீக்குவதன் மூலமே கைகூடும். அகங்காரமே எல்லாக் கேடுகளுக்கும் காரணம் பிரமசரியம், கிரகஸ்தம், வானப் பிரஸ்தம் முதலிய வாழ்க்கைப் படிகளை முறையாகக் கடப்பதன் மூலமே அகங்காரத்தை நீக்கிப் பற்றற்ற நிலையை அடையலாம்[18]

அருந்தவம் செய்து அடையப்பெறுவதாக நல்லந்துவனார் குறிக்கும் உயருலகினை மேற்குறித்த முக்திப்பேற்றுக்கு இணையாகக் கருத இடனுண்டு. மனவேட்கை துறந்து தவம் செய்தார் பிறவா நிலையாகிய முக்தி பெறுவது உறுதி. துறவு நிலைத் தவம் குறித்து,

> கழைக்க ணெடுவரை யருவி யாடிக்
> கான யானை தந்த விறகிற்
> கடுந்தெறற் செந்தீ வேட்டுப்
> புறந்தாழ் புரிசடை புலர்த்து வோனே (புறம்.257:4-7)

என்ற பாடலும் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றது. இப்பாடல், பிறவா நிலையடைய ஒருவன் மேற்கொள்ளும் செயல்பாடுகளை எடுத்துக்காட்டுகிறது. பாடலில் துறக்கம் பற்றிய குறிப்புச் சுட்டப்பெறவில்லையெனினும்,உரை வரைந்தோர் அங்ஙனம் விளக்கியுள்ளனர். இதனை,

புகழ்புரியும் புதல்வரையும் அறம்புரியும்
சுற்றத்தாரையும் உடையனாய்ச் சிறப்புற
வாழ்ந்த தலைமகனொருவன் காமஞ்சான்ற
கடைக்கோட் காலையில் வீடுபேறு
குறித்துத் தவமேற்கொண்டு காட்டில்
உறைவானாயினான். அவன் பெயர் ஏடுகளில்
சிதைந்து போய்விட்டது. அவன் இல்வாழ்வில்
இருந்த காலத்து அவனைப் பாடிச்
சிறப்பித்தவராதலான், பித்தியார் துறவு நிலையில்
சடைமுடித்துத் தவம் புரியும் அவனது தாபத
நிலையை வியந்து நோக்கினார்[19]

என்ற உரை தெற்றென விளக்குகிறது. இல்வாழ்க்கையின் முடிவில் துறவு வாழ்க்கை வாழ்ந்து துறக்கம் செல்வது சங்கத் தமிழர் மரபாக இருந்தது இப்பாடலால் புலனாகின்றது. இங்ஙனம் தவம் செய்வது நரகம் செல்லாது மனிதனைக் காக்கிறது. நல்லது செய்தார்க்கு மட்டுமே முடிவும் நன்றாக அமையும் என்ற நிலையிலிருந்து இறுதிக் காலத்தில் செய்யும் தவமும் வாழ்க்கையின் முடிவினைச் செம்மைப்படுத்தும். இதற்கு,

இங்ஙனமாய் மாய்ந்துவிடும் உலகில்
மாயப்பெரு வாழ்வு பெற, மனைவியுடன் உடன்
உறைந்தும் முற்றத் துறந்தும் தவவாழ்வு
கொள்ளுதலைச் செய்தனர் உயர்நிலை
உலகமாம் வீடுபேறு பெறுதலும் அவர்க்கு
இலட்சியமாக இருந்தது[20]

என்ற கருத்து அரண் சேர்க்கும். வாழ்வின் முடிவு நன்றாக அமைய துறவு இன்றியமையாதது என்பது இதனால் புலனாகின்றது.

### முடிவில் நரகம்

தீமை செய்தோராக இருப்பினும் நரகம் பெறுவதை எவரும் விரும்பிலர். ஆயினும் அவரவர் செய்த தீவினைக்கேற்ப வாழ்வின் முடிவில் அவர்கள் நரகத் துன்பத்தினை அடைவர் என்பதற்கு நன்னனது வாழ்க்கை வரலாறு சான்றாகின்றது. வாழ்வின் முடிவில் நரகத் துன்பம் பெற விரும்பாமையால் சங்கப்புலவர்களும் அம்முடிவு குறித்து மிகுதியாகப் பாடிலர்.

### ஆய்வு முடிவுகள்

✶ அறம், பொருள், இன்பம் ஆகிய முப்பொருளே தமிழர் பொருள். இருப்பினும் காலப்போக்கில் இன்பம் இரண்டாகப் பிரிந்து நாற்பொருளாயிற்று. துறக்கம் என்பது பிற்காலத்தவர் சுட்டும் வீடுபேற்றோடு ஒப்பு நோக்கத்தக்கது.

✶ வாழ்க்கையின் முடிவில் துறவு வாழ்க்கை மேற்கொண்டு நன்மை பெறுவதைத் தொல்காப்பியம் சுட்டுகிறது. சங்க இலக்கியமும் இதனைப் பின்பற்றி அமைந்துள்ளது (கலி.138, புறம்.251).

* சங்க இலக்கியத்தில் 'வீடுபேறு' பற்றித் தனித்துக் குறிப்பிடப்பெறவில்லை. துறக்கத்தினுள்ளே வீடுபேறு பற்றிய சிந்தனையும் சுட்டப்பெற்றுள்ளது.பிறவி நிலை பிறவா நிலை ஆகிய இரண்டினடிப்படையில் துறக்கம் குறிக்கப்பெற்றுள்ளது.

* இங்குச் சுட்டப்பெறும் பிறவிநிலை துறக்கம் சென்றோர்க்குரிய பிறப்பைச் சுட்டுகிறது. இதற்குச் சங்கப்பாடல்கள் சான்றாகின்றன. (பதிற்.54, புறம்.214, பதிற்.38)

* துறக்கம் சென்றோர் அங்கிருந்தவாறு பிறவி நிலையினை அடைவர் என்பதையும் சங்கப் பாடல்கள் தெளிவுபடுத்துகின்றன. இந்நிலையினைப் பிற்காலத்தவர் 'முக்திநிலை' என்றும் 'வீடுபேறு' என்றும் பல்வேறு கலைச் சொற்களால் குறிப்பிட்டுள்ளனர். சங்க இலக்கியத்தில், வாரா சேட்புலம், வாராவுலகம், உக்கரை, ஆனிலையுலகம் என்ற சொல்லாட்சிகள் துறக்கத்தின் மேல்நிலையாகிய பிறவாநிலையைக் குறிப்பிடுகின்றன.

* வாழ்க்கையின் முடிவில் நெடியோன் வரவேற்பதனைச் சங்கப்பாடல் புலப்படுத்துகிறது (புறம்.241). இதற்கு ஆய் அண்டிரனைப் பாடிய ஏணிச்சேரி முடமோசியார் பாடல் குறிப்பிடத்தக்கது.

## சான்றெண் விளக்கம்

1. மு.சண்முகம்பிள்ளை (ப.ஆ.1995), **தொல்காப்பியம் இளம்பூரணம், இரண்டாம்பகுதி**, முல்லை நிலையம், 43, புதுத்தெரு, மண்ணடி, சென்னை,ப.10.

2. க.நெடுஞ்செழியன், **தமிழ் இலக்கியத்தில் உலகாய்தம்**,ப.286.

3. செ.பழனிச்சாமி (1989), **புறநானூற்றில் தமிழர் பண்பாடு**, வாணி பதிப்பகம், 402 அ கேசன் சாலை, கோவை, ப.26.

4. நச்சினார்க்கினியர் (உ.ஆ), **தொல்காப்பியம் சிறப்புப்பாயிர உரை.**

5. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), **பதிற்றுப்பத்து மூலமும் உரையும்**, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, ப.262.

6. க.நெடுஞ்செழியன், **தமிழ் இலக்கியத்தில் உலகாய்தம்**, ப.241.

7. கி.வா.ஜகந்நாதன், **கற்பகமலர்**, தமிழ் எழுத்தாளர் கூட்டுறவு சங்கம் லிமிடெட், 8, சின்னரெட்டி தெரு, சென்னை, ப.134.

8. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), **பதிற்றுப்பத்து மூலமும் உரையும்**, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி, சென்னை, ப.163.

9. மேலது, ப.165.

10. ம.செல்வராஜன், **கடவுளைக் கண்ட கவிஞன்**, அசோகன் பதிப்பகம், தி.நகர், சென்னை, ப.153.

11. ஔவை.சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), **பதிற்றுப்பத்து மூலமும் உரையும்**, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி, சென்னை, ப,.289.

12. கி.வா.ஜகந்நாதன், **கற்பகமலர்**, தமிழ் எழுத்தாளர் கூட்டுறவு சங்கம் லிமிடெட், 8, சின்னரெட்டி தெரு, சென்னை, ப.134.

13. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), **புறநானூறு மூலமும் உரையும் (முதல் பகுதி)**, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி, சென்னை, ப.19.

14. மேலது, **இரண்டாம் பகுதி**, ப.314.

15. ஜீவபந்து டி.எஸ்.ஸ்ரீபால், **இளங்கோவடிகள் சமயம்**, ஜைன இளைஞர் மன்றம், 3,போக்சாலை, சென்னை, ப.61.

16. கி.லெட்சுமணன் (2000), **இந்திய தத்துவ ஞானம்**, பக்.26,27.

17. காண்க. பின்னிணைப்பில் வைகுந்த வரவேற்பு கட்டுரை.

18. கி.லெட்சுமணன்(2000), இந்திய தத்துவ ஞானம், பழனியப்பா பிரதர்ஸ், ப.63

19. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), **புறநானூறு மூலமும் உரையும், (இரண்டாம் பகுதி)**, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி, சென்னை, ப.107.

20. மு.சண்முகம்பிள்ளை (1982), **நிகண்டு சொற்பொருட் கோவை தெய்வப்பெயர்**, பதிப்புத் துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், ப.307.

# சொர்க்க நரகம் அடைந்தோர்

உடம்பை விட்டுப்பிரிந்த உயிர் எங்கு போகிறது என்பது யாருக்கும் புலனாகாதது. ஆயினும் உயிர் துறக்கமோ நிரயமோ சென்றதாக மக்கள் நம்புகின்றனர். மரணத்தின் பின்னுள்ள மனிதர் நிலையைப் புராணங்கள் பேசுமளவிற்குச் சங்க இலக்கியத்தில் விரிவாகக் கூறப்பெறவில்லை. இருப்பினும் நல்லோர் இறந்த பிறகு துறக்கம் சேர்ந்ததாகவும் தீயோர் நரகம் சேர்ந்ததாகவும் சில குறிப்புகள் சுட்டப்பெறுகின்றன. சங்க இலக்கியத்திலுள்ள துறக்க நிரயம் சென்றோரைப் பற்றி விளக்குவதாக இவ்வியல் அமைகிறது.

## இறப்பு நிகழ்வும் பின்னுள்ள நிலையும்

இறப்புச் செய்திகள் சங்க இலக்கியத்தில் சிறப்பிடம் பெறுகின்றன. இறப்புத் தொழிலைச் செய்வோனுக்குக் கூற்றுவன் என்றும், யமன் என்றும், காலன் என்றும் பல பெயர்கள் சங்க இலக்கியத்தில் சுட்டப்பெற்றுள்ளன. இறந்தபின் செய்யும் கிரியை குறித்தும் (புறம்.360). இறந்த வீரனுக்கு நடுகல் எழுப்பிச் சிறப்பித்தல் குறித்தும் (புறம்.260), இறந்தோனுக்குப் பலியிடுதல் (புறம்.231,240,249) பற்றியும் இறப்பு நிகழ்வுகள் சங்க இலக்கியத்தில் பேசப்பட்டுள்ளன.

> உலகம் இயக்கத்திற்குட்பட்டது. எனவே உலகப் பொருள்கள் அனைத்தும் நொடிக்கு நொடி மாற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் உட்படுகின்றன. இத்தகு இயக்கவிதிக்கு உட்பட்ட மனித வாழ்வும் பல்வேறு பருவங்களுக்கு உட்பட்டு மாற்றமும் வளர்ச்சியும் தேய்வும் பெற்று முடிவில் மரணத்தில் ஒன்றிவிடுகின்றது. ஆகவே வாழ்வில் நுகர்ச்சிகளைத்

துய்ப்பதற்குரிய பருவமாக இளமை மதிக்கப்படுவதுடன் இளமையில் துய்க்க வேண்டிய இன்பங்களையும் அறிஞர்கள் வற்புறுத்துகின்றனர்[1]

இறப்பிற்காக வருந்துவதனைச் சங்கப் பாடல்கள் தெரிவிக்கின்றன. இறப்பைக் கண்டு அஞ்சுவதுடன் மரணத்தின் பின்னர் என்ன நிகழுமோ என்ற அச்ச உணர்வும் மக்களுக்கு ஏற்படுகின்றது.

நல்வினையாற்றினால் நற்கதி பெறலாம் என்ற நம்பிக்கை காரணமாகப் பல அறங்களைச் செய்து வினையைப் போக்க மக்கள் முனைகின்றனர். இம்மையில் அறஞ்செய்ததன் பயனாய்த் தனக்கு நற்கதி நிச்சயமாகக் கிட்டும் என்ற நம்பிக்கை ஏற்படுகிறது. இதனால் மறுமை பற்றிய அச்சவுணர்வு குறைகிறது[2]

என்ற கூற்று சங்கப் பாடல்களுக்குப் பொருந்துகின்றது. இறப்பின் பின்னரும் நல்வாழ்வு அமையும் என்பதைத் துறக்க நிரயப் பாடல்கள் தெளிவுபடுத்துகின்றன.

### *சங்க இலக்கியம் சுட்டும் துறக்கம் சென்றோர்*

சங்க காலத்தில் வேந்தர்களும் குறுநில மன்னர்களும் இறந்தபோது கையறுநிலையில் புலவர்கள் அவர்களைப் பாடினர். அவை துறக்கம் புகுந்த நிகழ்ச்சியைப் பற்றியமைந்தவை. மன்னர்கள் மீது கொண்டிருந்த நன்னம்பிக்கையும் அன்பும் காரணமாக அவர்கள் துறக்கம் தான் சென்றிருக்க முடியும் என்று திண்ணமாக நம்பிய புலவர்கள் அவ்வாறு பாடியுள்ளனர்.

| வ.எண் | துறக்கம் சென்றோர் | பாடிய புலவர் | பா.எண் |
|---|---|---|---|
| 1. | சேரன் குடக்கோ நெடுஞ் சேரலாதன், சோழன் வேற்பஃறடக்கை பெருவிறற் கிள்ளி, அவர்தம் மனைவியர் | கழாத்தலையார் | புறம்.62 |
| 2. | மலையமான் திருமுடிக்காரி | மாறோக்கத்து நப்பசலையார் | புறம்.174 |
| 3. | சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் | ஐயூர் முடவனார் | புறம்.228 |
| 4. | யானைக்கண் சேய் மாந்தரஞ் சேரலிரும் பொறை | கூடலூர் கிழார் | புறம்.229 |
| 5. | ஆய் அண்டிரன் | குட்டுவன்கீரனார் | புறம்.240 |
| 6. | ஆய் அண்டிரன் | ஏணிச்சேரி முடமோசியார் | புறம்.241 |
| 7. | உதியஞ் சேரலாதனின் முன்னோர் | மாமூலனார் | அகம்.233 |
| 8. | பெருஞ்சேரலாதனும் சான்றோரும் | மாமூலனார் | அகம்.55 |
| 9. | ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் பகைப்படை வீரர்கள் | காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் | பதிற்.52 |
| 10. | பாரி | கபிலர் | பதிற்.61 |
| 11. | பெயரில்லா மாந்தர் | தும்பிசொகினனார் | புறம்.249 |
| 12. | பெயரில்லா மாந்தர் | வடமோதங்கிழார் | புறம்.260 |

துறக்கம் சென்றோராகப் புலவர்களால் பாடப்பட்டோர் மட்டுமின்றிப் புலவர்களும் துறக்கம் போந்தமைக்குப் பாலைக் கௌதமனார் வரலாறு சான்றாகிறது. சங்க காலத்தில் வாழ்ந்தோருள் இவர்கள் மட்டும்தான் நல்வினையாற்றியவர்களா? என்பது சிந்தித்தற்குரியது. ஏனையோர்

நல்வினை செய்திருப்பினும் மேற்குறித்தவர்கள் புலவர்களால் 'உயர்நிலையுலகம்' சென்றதாகச் சுட்டப்பெற்ற சிறப்பிற்குரியவர்கள்.

### துறக்கம் சென்ற சேரர்கள்

சேரநாட்டு வேந்தர்கள் துறக்கம் சென்றதைப் புறநானூற்றுப் பாடலொன்றும் (229), அகநானூற்றுப் பாடல்களும் (55,233). குறித்துச் செல்கின்றன. யானைக்கண் சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை, பெருஞ்சேரலாதன், உதியஞ்சேரலாதனின் முன்னோர் ஆகியோர் சேர வேந்தர்களுள் துறக்கம் சென்ற சிறப்பிற்குரியவர்களாவர்.

### யானைக்கண்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை

கோச்சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ் சேரலிரும் பொறையின் இறுதி நாளில் அவன் இறந்ததற்கு ஏழு நாள்களுக்கு முன் நாட்டில் தீ நிமித்தங்கள் தோன்றியதாகப் பாடுகின்றார் கூடலூர் கிழார். விண்மீன்களின் நிலையில் மாற்றம் ஏற்பட்ட ஏழாம் நாளில் இரும்பொறையின் உயிர் பிரிந்தது. அன்று நடந்த நிகழ்ச்சியினைப் பாடுகின்றார் புலவர். யானைகள் கையை நிலத்தே நீட்டி வைத்து உறங்கின ; முரசம் தானே கண் கிழிந்து போயிற்று ; வெண்குடை கால் துணிந்து வீழ்ந்தது ; குதிரைகள் செல்லும் கதியின்றிக் கிடந்தன. அவன் தனக்குத் துணையாகிய மகளிரையும் பகைவரைக் கொல்லும் வலியையும் நீங்கினான். இதனைக் கூடலூர்கிழார்,

அஞ்சின மெழுநாள் வந்தன் றின்றே
மைந்துடை யானை கைவைத் துறங்கவும்
திண்பிணி முரசங் கண்கிழித் துருளவும்
காவல் வெண்குடை கால்பரிந் துலறவும்

காலியற் கலிமாக் கதியின்றி வைகவும்
மேலோ ருலக மெய்தின னாகலின்
ஒண்டொடி மகளிர்க் குறுதுணை யாகித்
தன்றுணை யாய மறந்தனன் கொல்லோ
பகைவர்ப் பிணிக்கும் ஆற்றல்........... (புறம்.229:17-25)

என்று பாடுவர். அவன் தேவருலகம் சென்றமைக்கான காரணத்தை,

...............................நசைவர்க்
களந்து கொடை யறியா வீகை
மணிவரை யன்ன மாஅ யோனே (புறம்.229:26-28)

என்ற அடிகளில் விளக்குவர். இங்கு இரும்பொறை நச்சியோர்க்கு அளந்து கொடுத்தலறியாத வண்மையையுடைய மாயோனாகச் சித்திரிக்கப்படுகிறான். ஈகைத் திறம் மேலோருலகம் செல்ல வித்திட்டதாக அவனைப் புகழ்கின்றார் கூடலூர் கிழார்.

## பெருஞ்சேரலாதனும் சான்றோரும்

கரிகால் வளவனுடன் போரிட்ட வெண்ணிப் பறந்தலைப் போரில் சேரலாதனுக்குப் புறப்புண் ஏற்பட, அவன் வடக்கிருந்து உயிர் துறக்க விரும்பினன். வீரமரணத்தைப் போன்று வடக்கிருந்து உயிர்துறப்பதும் துறக்கத்திற்கு இட்டுச் செல்லும் என்பது பழந்தமிழர் நம்பிக்கை. சேரலாதனின் இன்னா இன்னுரை கேட்ட சான்றோரும் வடக்கிருக்க விழைந்தனர். அரசனோடு அவர்களும் அரும்பெறலுலகம் சென்றனர். (அகம்.55).

.................... ஒண்படைக்
கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப்
பொருது புண் நாணிய சேரலாதன்

அழிகள மருங்கின் வாள் வடக்கிருந்தென,
இன்னா இன்னுரை கேட்ட சான்றோர்
அரும்பெறல் உலகத்து அவனொடு செலீஇயர்

(அகம்.55:9-4)

என்பது மாமூலனார் பாட்டு. சேரலாதன் வடக்கிருக்கும் செய்தி கேட்ட நாட்டு மக்கள் செய்தொழில் மறந்து இன்பக் கேளிக்கைகள் எதுவுமின்றி துன்பத்தில் மூழ்கிக் கிடந்தனர் (புறம்.65).

மதிநிறைந்த நன்னாளின் மாலைப் பொழுதில்
திங்களை நேரெதிர் நோக்கி நின்று மேற்கில்
மறையும் ஞாயிறு போலக் கரிகாலனொடு
நேருக்கு நேர்நின்று புறங்கொடுக்காமல்
போரிட்ட சேரலாதன், புறங்காட்டிப்
படாத புறப்புண்ணிற்காக, வடக்கிருந்து
மறைகிறான் என உவமை வாயிலாகவும்
உண்மையைப் பெற வைக்கிறார் கழாத்தலையார்.[3]

விழுப்புண்பட்டோர் எய்தும் வீரசுவர்க்கத்தை வடக்கிருந்ததால் சேரலாதனும் அடைந்ததாகப் பாடுகின்றார் புலவர். உடன்கட்டை ஏறும் பெண்டிருக்குத் துறக்கம் கிட்டுவது போல இங்குச் சேரலாதனுடன் வடக்கிருக்கும் சான்றோருக்கும் துறக்கம் வழங்கப் பெற்ற செய்தி சுட்டப்பெறுகிறது.

**உதியஞ் சேரலாதனின் முன்னோர்**

மாமூலனார் பாடிய அகநானூற்றுப் பாடலில் (233) உதியஞ்சேரலாதனின் முன்னோர் துறக்கம் எய்திய செய்தி

இடம்பெற்றுள்ளது. சேரனின் பெயர் குறிப்பிடாது 'முன்னோர்' என்று சுட்டியிருப்பது புலவரின் புலமைத் திறத்தைக் காட்டுகிறது.

எரிகவர் புண்ட கரிபுறப் பெருநிலம்
பீடுகெழு மருங்கின் ஓடுமழை துறந்தென
ஊனில் யானை உயங்கும் வேனில்
மறப்படைக் குதிரை மாறா மைந்தின்
துறக்கம் எய்திய தொய்யா நல்லிசை
முதியர்ப் பேணிய உதியஞ் சேரல்

(அகம்.233:3-8)

என்பது பாட்டு. உதியஞ் சேரலாதனின் முன்னோர் அனைவரும் வீரம் செறிந்தவர்களாதலின் இன்னார் என்று பெயர் சுட்டாது 'முதியர்' என்று பொதுப்படையாகக் குறித்துள்ளார். 'துறக்கம் எய்திய' என்ற தொடர் புலவரின் எண்ணத் திண்மையை வெளிப்படுத்துகின்றது. உதியஞ் சேரலாதனுக்கு முன்னுள்ள சேரர்கள் அனைவரும் துறக்கம் சேர்ந்தமை மாமூலனாரால் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

### துறக்கம் சென்ற சோழர்கள்

சோழ வேந்தர்களுள் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் துறக்கம் சென்ற சிறப்பிற்குரியவன். மேலும் சோழ நாட்டை ஆட்சி புரிந்த மலையமான் திருமுடிக்காரி துறக்கம் சென்றமையும் சங்க இலக்கியத்தில் காணப்பெறுகிறது. சோழ வேந்தர்களுள் இவ்விருவரையும் தவிர வேறெவரும் துறக்கம் அடைந்ததாகச் சங்கப் புலவர்கள் பாடவில்லை.

## குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

கிள்ளிவளவன் குளமுற்றத்தில் துஞ்சியதறிந்து வருந்திய சான்றோருள் ஐயூர் முடவனார் அவன் துறக்கம் சேர்ந்ததாகப் புனைகின்றார் (புறம்.228). இறந்தோரைத் தாழியிற் கவித்துப் புதைப்பது பண்டைத் தமிழர் மரபு. அங்ஙனம் கிள்ளிவளவனையும் தாழியிற் புதைத்தனர். அதனைக் கண்டு ஆற்றாமையால் வருந்திய ஐயூர் முடவனார் குயவனிடம் வினவுகிறார்.

நிலவெல்லை முழுவதும் பரந்த மிக்க சேனையினையும் அறிவுடையோர் புகழ்ந்த பொய்யாத நல்ல புகழினையும் பரந்த சுடரினையுமுடைய ஞாயிறு வானத்தில் பரந்திருப்பது போலச் சேய்மையிடத்தும் சிறப்புடன் விளங்கிய கிள்ளிவளவன் தேவருலகம் எய்தினான் ; அப்பெற்றியோனைப் புதைக்க வேண்டின் நிலவுலகை ஆழியாகவும் மேருமலையை மண்திரளாகவும் கொண்டு பெரியதொரு தாழியைச் செய்ய வேண்டுமென்றும் அவ்வாறு செய்யயியலுமா வென்றும் குயவனிடம் கேட்பதாக இப்பாடல் அமைந்துள்ளது.

நிலவரை சூட்டிய நீணெடுந் தானைப்
புலவர் புகழ்ந்த பொய்யா நல்லிசை
விரிகதிர் ஞாயிறு விசும்பிவர்ந் தன்ன
சேண்விளங்கு சிறப்பிற் செம்பியர் மருகன்
கொடி நுடங்கு யானை நெடுமா வளவன்
தேவருலக மெய்தின னாதலின் (புறம்.228:6-11)

என்பது அப்பாட்டு. செம்பியரின் புகழ் கிள்ளிவளவன் தேவருலகம் செல்வதற்கு வித்திட்டது. அவனுக்குத் தாழி செய்த குயவன்

இரங்குதற்குரியவன் என்பதால் அவனது பெருமையும் சிறப்பும் புலனாகிறது.

### மலையமான் திருமுடிக்காரி

மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணனை மாறோக்கத்து நப்பசலையார் பாடிய பாடல் சுவர்க்கம் சென்றோனைப் பாடுகிறது. (புறம்.174) இதில் மலையமான் திருமுடிக்காரி சுவர்க்கம் போந்ததாகக் குறிக்கப்பெற்றுள்ளது. திருமுடிக்காரி இறந்ததனால் பொலிவிழந்து வருந்திய சோழ நாட்டிற்குச் சோழிய ஏனாதி திருக்கண்ணன் வேந்தனாகி நலம் புரிந்தான். அவனைப் போற்றிய புலவர் அவன் முன்னோனாகிய திருமுடிக்காரியின் சிறப்பினை,

விடர்ப்புலி பொறித்த கோட்டைச் சுடர்ப்பூட்
சுரும்பார் கண்ணிப் பெரும்பெயர் நும்முன்
ஈண்டுச்செய் நல்வினை யாண்டுச் சென்றுணீஇயர்
உயர்ந்தோ ருலகத்துப் பெயர்ந்தன னாகலின்

(புறம்.174:17-20)

என்று போற்றுகின்றார். வரை முழஞ்சில் வாழும் புலியெழுதப்பட்ட இலச்சினையையுடைய கோட்டையினையும், சிறப்புமிக்க அணிகலத்தினையும், வண்டார்க்கப்பட்ட கண்ணியையும் பெரிய புகழினையுமுடைய நும்முன்னோனாகிய தந்தை இவ்வுலகத்தில் செய்த நல்லறத்தின் பயனை நுகரும் பொருட்டுத் தெய்வலோகத்துப் போயினான் ; ஆதலின் நல்ல நெறியைக் கொன்ற பக்கத்தினையுடைய திசையெங்கும் சூழவரும் கவலையுற்ற மனத்தின்கண் வருத்தம்கெட நீவந்து தோன்றினாய் என்று தந்தையையும் மகனையும் ஒருங்கு புகழ்கின்றார். 'நும்முன்' என்பதற்கு,

நின் முன்னோனாகிய திருமுடிக்காரி உயர்ந்தோ

ருலகம் பெயர்ந்தானாக[4]

என்று உரைவரைவர். மகனுக்குரிய பாடலில் தந்தை துறக்கம் போந்த செய்தியைப் பாடியிருப்பது திருமுடிக்காரியின் குலப் பெருமையை விளக்குவதாக ,அமைந்துள்ளது.

## சேர சோழரும் மனைவியரும்

சேரன் குடக்கோ நெடுஞ்சேரலாதனுக்கும் சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளிக்கும் மண்ணாசை காரணமாகப் போர் நடைபெற்றது. விழுப்புண்பட்டு இருவரும் மாய்ந்தனர். இந்நிகழ்ச்சியைக் கழாத்தலையார் சிறப்பித்துப் பாடியுள்ளார். பேய் மகளிர் கூச்சலிட, பருந்து ஊனைத் தின்னப் பொருந்திய படையால் வெகுண்டெழுந்து அறப்போருடற்றிய வேந்தர் இருவரும் பட்டொழிந்தனர் ; அவர்தம் வெண்கொற்றக் குடையும், முரசும், படைத்தொகுதிகளும் வீழ்ந்தன ; போர்க்களத்தினைத் தமதாக்கிக் கொள்ளும் உரியோர் எவருமின்றி மடிந்தது பூசல் ; அவ்விருவேந்தரின் பெண்டிரும் பச்சிலை தின்னாது, குளிர்ந்த நீரில் மூழ்காது தத்தம் வேந்தரின் மார்பகத்தைக் கூடி உடன் வீழ்ந்தனர் ; இந்நிகழ்ச்சியைக் கண்ட கழாத்தலையார் இருவேந்தரும் அரும்பெறலுலகம் சென்றதாகப் பாடியுள்ளார்.

வாடாப் பூவி னிமையா நாட்டத்து

நாற்ற வுணவி னோரு மாற்ற

அரும்பெற லுலக நிறைய

விருந்துபெற் றனராற் பொலிகநும் புகழே

(புறம்.62:16-19)

வாடாத கற்பகத் தாரினையும் இமையாத கண்ணினையும் நாற்றமாகிய உணவையுமுடைய தேவர்களும் பெறுதற்கரிய உலகத்தில் விருந்து பெற்றதாக அவர்கள் துறக்கம் போந்த செய்தி பாடப்பெற்றுள்ளது. சேரனும் சோழனும் பகைவர்களாயிருப்பினும் மேலோருலகம் இருவர்க்கும் பொலிவான தன்மை இப்பாடலால் புலனாகின்றது.

## ஆடுகோட்பாட்டுச் சேரலாதனால் துறக்கம் சென்றோர்

ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் பதிற்றுப்பத்து ஆறாம் பத்தில் புகழ்ந்து பாடியுள்ளார். அவன் போரிடும் போது இறந்து பட்ட பகைவீரர்களுக்கும் துறக்கப் பேற்றைத் தரவல்லவன். பகைவராக இருப்பினும் அவனுடன் போரில் பொருது இறத்தலால் சுவர்க்கம் எய்தியதாகச் சிறப்பிக்கின்றார் புலவர்.

> போரின் கண் பின்வாங்காது பொருதுபட்டோர்
> பலரும் உயர்ந்த நிலைமையையுடைய
> வீரசுவர்க்கமடைதலின் 'உயர்நிலையுலகமெய்தினர்
> பலர்பட' என்றார்.[5]

பகைப்படை வீரர்கள் பலரும் தம் வீரத் திறத்தால் துறக்கம் எய்தியமை இதனால் புலனாகிறது.

> தொலையாத் தும்பை தெவ்வழி விளங்க
> உயர்நிலை யுலக மெய்தினர் பலர்பட (பதிற்.52:8-9)

என்பதற்கு,

> எய்துவார் என்னாது எய்தினர் பலர்பட என இறந்த
> காலத்தாற் கூறியது அமர்க்களத்து வீழ்ந்தோர்
> துறக்கம் பெறுவோர் என்னும் நூற்றெளிவு பற்றி என்க[6]

என்று உரைவிளக்கம் செய்வர். 'உயர்நிலை யுலகம் எய்தினர்' என்ற சொல்லாட்சி துறக்கச் சிந்தனை மீது புலவர் கொண்டிருந்த நம்பிக்கையை வெளிப்படுத்துகின்றது.

### துறக்கம் சென்ற குறுநில மன்னர்கள்

குறுநில மன்னர்களுள் ஆய் அண்டிரனும், பாரியும் சங்கப்புலவர்களால் துறக்கம் சென்றதாகப் பாடப்பெற்ற சிறப்பிற்குரியவர்கள்.

### ஆய் அண்டிரனும் உரிமை மகளிரும்

இவன் துறக்கம் சென்ற நிகழ்ச்சி குட்டுவன் கீரனார் (புறம்.240), ஏணிச்சேரி முடமோசியார் (புறம்.241) ஆகிய இருபெரும் புலவர்களாலும் பாடப்பெற்றுள்ளது. இருவரும் அண்டிரனின் இறப்பிற்காக இரங்கிப் பாடியிருப்பினும் அவன் துறக்கம் அடைந்தமை இருவேறு விதமாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது.

ஆடு நடைப் புரவியுங் களிறும் தேரும்
வாடா யாணர் நாடு மூரும்
பாடுநர்க் கருகா வாஅ யண்டிரன்
கோடேந் தல்குற் குறுந்தொடி மகளிரொடு
கால னென்னுங் கண்ணிலி யுய்ப்ப
மேலோ ருலக மெய்தின னெனாஅப்
பொத்த வரையுட் போழ்வாய்க் கூகை
சுட்டுக் குவியெனச் செத்தோர்ப் பயிரும்

(புறம்.240:1-8)

என்பது குட்டுவன் கீரனார் பாட்டு. ஆய் அண்டிரனின் உரிமை மகளிரும் மேலோருலகம் எய்தியமை இதனால் தெளிவாகின்றது. அண்டிரன், தன்னைப்போற்றிப் பாடுவார்க்குத் தேரும், யானையும், குதிரையும், நாடும், ஊரும் குறைவறக் கொடுக்கும் இயல்புடையவன். அவன் கண்ணோட்டமில்லாத காலனென்பவனால் கவர்ந்து செல்லப்பட்டான் என்றும், உரிமை மகளிரும் உடன் வீழ்ந்தனர் என்றும் பாடுகின்றார் புலவர். இதனால் தம்மை ஆதரிப்பாரின்றிப் பொலிவழிந்த கண்ணினையுடையோராய்க் கற்று வல்ல புலவர் பலரும் வேறு நாடு சென்றமை கண்டு மனங்கலங்குகிறார் குட்டுவன் கீரனார். ஆனால் ஏணிச்சேரி முடமோசியார் வானுலகத்தில் அண்டிரனுக்குக் கிடைத்த வரவேற்பினை உறுதிப்படுத்துகின்றார். முடமோசியார் இவ்வாறு பாடியதற்கான சூழலை,

> அண்டிரனோடு பன்னாள் நெடிதிருந்து பயின்று
> பழகிய கேண்மையராதலின், மோசியாருக்கு
> அவனது பிரிவு பெருந்துயரத்தை விளைத்தது.
> அந்நிலையில் அண்டிரன் உடம்பு ஈமவெரியில்
> எரிவதும், அவனுடைய உரிமை மகளிர்
> உடன் வீழ்ந்து எரிவதும் கண்டார். தம்முடைய
> இருகண்களையும் ஆற்றாமையால் மூடிக்
> கொண்டார் அவர் மனக்கண்ணில் ஆய்
> அண்டிரன் அவன் உரிமை மகளிர் உடன் சூழ்வரத்
> தேவருலகம் சென்று சேரும் காட்சி புலனாயிற்று[7]

என்று விளக்குவர். தேவருலக வேந்தன் வரவேற்பதாக உரையாசிரியர் குறிப்பது பொருந்தாது. திருமாலின் வைகுந்தமே புலவரால் பாடப்பெற்றுள்ளது. இது முடமோசியாரின் எண்ணத்திண்மையை வெளிப்படுத்துகின்றது.

திண்டே ரிரவலர்க் கீத்த தண்டார்
அண்டிரன் வரூஉ மென்ன வொண்டொடி
வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுட்
போர்ப்புறு முரசங் கறங்க
ஆர்ப்பெழுந் தன்றால் விசும்பி னானே (புறம்.241)

என்பது பாட்டு. வேறுலகம் சென்றிருப்பானோ என்ற ஐயம் ஏற்படாதவாறு வானுலகம் சேர்ந்தமையினைத் தம் பாடலில் தெற்றென விளக்குகிறார்.

**பாரி**

கபிலர் பாடிய பதிற்றுப்பத்தின் ஏழாம் பத்துப்பாடல்கள் செல்வக் கடுங்கோ வாழியாதனைப் பற்றியவை. அவற்றுள் 'புலாம் பாசறையில்' (பதிற்.61) அமைந்த பாடல் கடையெழுவள்ளல்களுள் ஒருவனாகிய பாரி துறக்கம் சென்றதை வெளிப்படுத்துகின்றது. இதனை,

புலர்ந்த சாந்திற் புலரா வீகை
மலர்ந்த மார்பின் மாவண் பாரி
முழவுமண் புலர விரவல ரினைய
வாரா சேட்புலம் படர்ந்தோ னளிக்கென
(பதிற்.61:7-10)

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன. செல்வக்கடுங்கோ வாழியாதனை வாழ்த்தப்போந்த புலவர், பாரியின் புகழ் பாடுவது குறிப்பிடத்தக்கது. பாரி, பாவை போன்ற நல்ல அழகும் நலமும் உடையாளுக்குக் கணவன், உன்ன மரத்துக்கப் பகைவன். அவன் எமக்கு அரசனும் புலர்ந்த சாந்தினையும், மலர்ந்த மார்பினையும் குன்றாத ஈகைச் சிறப்பினையு முடையவன். முழவினிடத்தே பூசிய மார்ச்சனை மண் புலந்தொழியவும், வேண்டுவன வழங்குவோர் இல்லாமையால் இரவலர் வருந்தவும் அவன் மீண்டும் நிலவுலகிற்கு வரவியலாத நெடுந்தொலைவிற்குச் சென்றொழிந்தான் என்று பாரி துறக்கம் சேர்ந்த செய்தி பதிற்றுப்பத்தில் கபிலரால் பாடப்பெற்றுள்ளது.

### வேந்தரல்லாதோர் துறக்கம் சென்றமை

வேந்தர்களைப் போன்று பிற மாந்தரும் துறக்கம் அடைந்த நிகழ்ச்சி புறநானூற்றில் (249,260) இடம்பெற்றுள்ளது. அவை தும்பி சொகினனார், வடமோதங்கிழார் ஆகியோரால் பாடப்பெற்றவை. தும்பி சொகினனார் பாடிய பாடல் தாபத நிலையிலமைந்தது. கணவனை இழந்து கைம்மை நோன்பு மேற்கொள்ளும் பெண்ணொருத்தியின் நிலை இப்பாடலால் தெளிவாகின்றது. பாட்டுடைத் தலைவன் அகன்ற நாட்டுக்குத் தலைவன்; அவன் உயிர் வாழ்ந்த காலத்துப் பலரோடு கூடி விருந்துண்ணும் பரந்த இடமாயிருந்தது. இன்று அவன் சுவர்க்கத்திற்குச் சென்றமையால் அவன் மனைவி தன் கணவனுக்கு உணவு படைத்தல் வேண்டி மெழுகுகின்றாள். அவ்விடமானது அவள் தன் கண்ணீரால் ஆவின் சாணம் கொண்டு மெழுகும் சுளகு போன்ற சிறிய இடமாயிற்று என்று இரங்கிக் கூறுகின்றார் புலவர்.

அகனாட் டண்ணல் புகாலே நெருநைப்
பகலிடங் கண்ணிப் பலரொடுங் கூடி
ஒருவழிப் பட்டன்று மன்னே யின்றே
அடங்கிய கற்பி னாய்நுதன் மடந்தை
உயர்நிலை யுலக மவன் புக......... (புறம்.249.7-11)

என்பது பாட்டு. பாடலை நோக்கும்போது புலவருக்குத் துறக்கம் சென்றவனோடு தொடர்பிருப்பதாகத் தெரியவில்லை. அவனை அறியாதிருப்பினும் மனைவியின் அன்புள்ளம் அவன் உயர்நிலையுலகம் சென்றதாகப் புலவரைப் பாடச் செய்தது. கைம்மை நோன்பு மேற்கொள்ளும் பெண்டிரின் நிலை புலவரை இங்ஙனம் பாடத்தூண்டியது.

வடமோதங்கிழாரால் பாடப் பெற்ற சிறப்புடையவன் கரந்தைத் தலைவன் (புறம்.260). போரில் பகைவர் எய்த அம்பு அவன் மார்பில் தைக்க உயிர் நீங்குந் தறுவாயிலிருந்தது. ஊரருகே வந்ததும் அவன் உயிர் நீங்கிற்று. ஊரவர் பெயரும் பீடும் எழுதி அவனுக்கு நடுகல் நட்டுச் சிறப்பித்தனர். அவன் உயிர் வாழ்ந்த காலத்தில் புலவர், பாணர் போன்றோர்க்கு நிலனும் பொருளும் வழங்கிப் புகழ் பெற்றவன். ஆகையால் ஒரு பாணன் அவனை நாடிச் செல்ல வேறொரு பாணன் அவன் அரிது செல்லுலகம் சென்றதாகக் கூறியதனைப் பாடுகின்றார் வடமோதங்கிழார்.

முன்னூர்ப் பூசலிற் றோன்றித் தன்னூர்
நெடுநிரை தழீஇய மீளி யாளர்
விடுகணை நீத்தந் துடிபுணையாக
வையகம் புலம்ப வளைஇய பாம்பின்

வையெயிற் றுய்ந்த கன்றுடைப் பல்லான்
நிரையொடு வந்த வுரையனாகி
உரிகளை யரவ மானத்தானே
அரிதுசெல் லுலகிற் (புறம்.260:12-21)

சென்றதாகப் பெயர்சுட்டப்படாத நடுகல்லை நோக்கிச் சிறப்பித்துள்ளார் புலவர்.

இவ்வாறு நடுகல்லாகி நின்ற வீரர்களை
அவர்களின் வழித் தோன்றல்களோ,
தலைவனாயின் அவனைப் பின்பற்றியவர்களோ
வணங்கிப் பலியூட்டி விழாவெடுத்து
மகிழ்ந்தனர். இதன் மூலம் மறைந்து போன
வீரர்களைப் போல தாமும் வெற்றி வீரர்களாக
அருஞ்சமம் சிதையத் தாக்கும் ஆற்றல்
மறவர்களாகப் போற்றப்பட வேண்டும்
என்று நம்பிக்கையை வளர்த்துக் கொண்டனர்[8]

உலகத்து வாழ்வோர் அனைவருக்கும் துறக்கவுலகத்தில் இடனுண்டு என்பதற்கு மேற்குறித்த இரண்டு பாடல்களும் சான்றாகின்றன.

**வேறுபட்ட பரிசில் விழைந்த புலவர்**

சங்கப் புலவர்கள் புரவலரைப் பாடி நிலம், பொருள், யானை என்று பரிசில் பெற்றனர். ஆனால் துறக்கத்தைப் பரிசாகப் பெற்றவர் பாலைக்கௌதமனராகிய சேரநாட்டுப் புலவரேயாவர். இவர் பதிற்றுப்பத்தில் பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் புகழ்ந்து பாடியுள்ளார். அப்பாடல்கள் மூன்றாம் பத்தாக அமைந்திருக்கின்றன.

இவர் பெயர் கௌதமனாரெனவும், பாலைக் கௌதமனாரெனவும் வழங்கும்; இவர் அந்தணர்; பதிற்றுப்பத்தில் 3ஆம் பத்தைப்பாடி இவர் இமயவரம்பன் தம்பி பல்யானைச் செல்கெழு குட்டுவனாற் சுவர்க்கம் பெற்றார்[9]

என்று இவரைப் பற்றிக் கருத்துரைப்பர். இப்புலவர், தீது சேணிகந்து, நன்று மிகப்புரிந்து மக்கள் பிணியின்று கழிய, ஊழியுய்த்த உரவோர் உம்பல், கொங்கர் நாடு அடிப்படுத்த வேல்கெழு தானைத் தோன்றல், அண்ணலம் பெருங்கோட்டு அகப்பா எறிந்த வெல்போர்க்குட்டுவ என்று பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் புகழ்கின்றார். அச்சேரனது பெருமையையும், கொடையையும், வெற்றிச் சிறப்பையும், அவனது நாடு காக்கும் திறத்தையும் பத்துப் பாக்களில் இயம்பியுள்ளார். இவ்வாறு பாலைக் கௌதமனார் பாடியதைக் கேட்ட மன்னன் அப்புலவரை நோக்கி, நீர் வேண்டியது கொண்மின் என வினவியதாகவும் அதனைக் கேட்ட அப்புலவர் யானும் என் பார்ப்பனியும் துறக்கம் புகல் வேண்டும் என்று கேட்டுக் கொண்டதாகவும் மூன்றாம் பத்தின் பதிகம் பேசுகிறது.

இங்ஙனம் துறக்கம் புகுதற்கு வேள்வி செய்தனர் அவ்வேள்விக்கு ‘வாசபேயம்’ என்று பெயர். இதனை,

சத்திரியர்களாகிய அரசர்கள் மட்டுமே செய்யும் வேள்விகளைப் போன்றே பார்ப்பனர்கள் மட்டுமே செய்யும் வேள்விகளும் உண்டு. அத்தகையதொரு வேள்வியே ‘வாசபேயம்’ என்பதாகும். பதிற்றுப்பத்தில் பாலைக்

கௌதமனார் செய்ததும், புறநானூற்றில்
பார்ப்பான் கவுணியன் விண்ணந்தாயன்
செய்த வேள்வியும் இத்தகையன எனலாம்.
பதிற்றுப்பத்தில் பாலைக் கௌதமனாரின்
வேண்டுகோளை ஏற்றுப் பல்யானைச் செல்கெழு
குட்டுவன், பல வேள்விகளைச் செய்தான்[10]

இச்செய்கையால் சங்க காலப் பார்ப்பன மக்கள் துறக்கத்தை விரும்பியமையும், மன்னர்கள் அந்தணர்களுக்குச் சுவர்க்கம் புகச் செய்த சிறப்பும் புலனாகும். மண்ணுலக வாழ்க்கையின் பயன்துறக்கம் சேர்தல் என்றெண்ணி இப்புலவரும் அதனை விரும்பினார்.

சங்கப் புலவர்களில் எவருமே இப்புலவரைப் போன்று துறக்கத்தைக் கொடையாகத் தரும்படி மன்னர்களிடம் கேட்டதாகச் சான்று இல்லை. பிற புலவர்கள் தம் பாடல்களில் துறக்க நிரயம் குறித்துப் பாடியுள்ளனரன்றிப் பாடிப்பெற்ற பரிசிலாகத் துறக்கத்தைப் பெறவில்லை. துறக்கம் புக விரும்பியதாகப் பாலைக் கௌதமனார் பாடல்களில் வெளிப்படையான சான்றுகள் கிடைத்தில. எனினும் அவர்தம் பாடல்களில் வரும் சில உட்குறிப்புகள் இதற்குப் பொருத்தமாகின்றன.

ஓதல் வேட்டல் அவை பிறர்ச் செய்தல்
ஈதல் ஏற்றல் என்று ஆறுபுரிந் தொழுகும்
அறம்புரி அந்தணர் வழிமொழிந்து ஒழுகி (பதிற்.24)

என்ற பாடலடிகளில் அந்தணர்களைப் பணிந்து ஒழுகுதலையும அதன் சிறப்பையும் பாடியுள்ளதைக் குறிக்க இடனுண்டு. இவ்வாறு புலவர் சேரனிடம் அந்தணர்களைப் போற்றுமாறும் அறச் செயல்களைச்

செய்யுமாறும் சுட்டுவதனால் அவர் குறிப்பாகத் தனக்குச் செய்ய வேண்டிய சிறப்பைப் புலப்படுத்துகிறார்.

பின்னெழுந்த இலக்கியங்களில் பாலைக் கௌதமனார் துறக்கம் சென்றமைக்கான குறிப்புகள் உள்ளன. இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில்

நான் மறை யாளன் செய்யுட் கொண்டு
மேனிலை யுலகம் விடுத்தோ னாயினும்

என்ற அடிகளில் இந்நிகழ்ச்சியைக் குறிப்பர். இவ்வாறு,

தொடுத்த பெரும்புலவன் சொற்குறை தீர
அடுத்தர என்றாற்கு வாழியரோ (பழ.380)

என்று முன்றுரையனார் பாடியதற்கும் பழையவுரைகாரர் பாலைக் கௌதமனார் வரலாறு காட்டி விளக்கியுள்ளார்.

பாடாண்பகுதி கைக்கிளைப் புறனே
(தொல்.புறத்.25:1)

என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கு உரை வரைந்த நச்சினார்க்கினியர்,

இமயவரம்பன் தம்பி பல்யானைச் செல்கெழு
குட்டுவனைப் பாலைக் கௌதமனார்
துறக்கம் வேண்டினாரென்பது குறிப்பு
வகையாற் கொள்ள வைத்தலின், இது
வஞ்சிப் பொருள்பட வந்த பாடாணாயிற்று[11]

என்றுரைப்பர். இச்சான்றுகள் பாலைக் கௌதமனார் துறக்கம் சென்றதாகக் குறிக்கும் நிகழ்ச்சியை வலியுறுத்துகின்றன.

### கோப்பெருஞ்சோழன் துறக்கம் சென்றானா?

பாலைக் கௌதமனாரைப் போன்று கோப்பெருஞ்சோழனும் துறக்கம் சென்றதாகப் பாடல்களில் குறிப்பிடவில்லை. எனினும் வடக்கிருந்து உயிர் துறந்த பெருஞ்சேரலாதன் துறக்கம் சென்றதாக மாமூலனார் பாடியிருப்பதால் (அகம்.55) வடக்கிருந்த கோப்பெருஞ்சோழனும் துறக்கம் சென்றிருக்கக் கூடும் என்று கருத இடமுண்டு. கோப்பெருஞ்சோழன் தன் மக்களோடு போரிட ஆயத்தமாவதையறிந்த புல்லாற்றூர் எயிற்றியனார், 'நீ போரில் இறந்துபடின் உயர்ந்தோருலகம் பெறுவாய் என்றும் போரைத் தவிர்த்து நல்லது செய்து அரும்பெறலுலகத்தில் விருந்து பெறுக' என்றும் வாழ்த்துகிறார்.

நினையுங் காலை நீயு மற்றவர்க்
கனையை யல்லை யம்மான் தோன்றல்
பரந்துபடு நல்லிசை யெய்தி மற்றுநீ
உயர்ந்தோ ருலக மெய்திப் பின்னும்

(புறம்.213:7-11)

என்றும்,

செய்தல் வேண்டுமா ஈன்றே வானோர்
அரும்பெற லுலகத் தான்றவர்
விதும்புறு விருப்பொடு விருந்தெதிர் கொளற்கே

(புறம்.213:22-24)

என்றும் புல்லாற்றூர் எயிற்றியனார் பாடியிருப்பது கோப்பெருஞ்சோழன் துறக்கம் சென்றிருக்கக்கூடும் என்பதற்குச் சான்றாகின்றது.

**பாண்டியரும் துறக்கமும்**

சேர,சோழர்கள், துறக்கம் சென்றமைக்கான குறிப்புள்ளதேயன்றிப் பாண்டியர்களுள் ஒருவரேனும் துறக்கம் சென்றதாகச் சங்க இலக்கியத்தில் குறிப்பில்லை. இருப்பினும் பத்துப்பாட்டுள் மதுரைக் காஞ்சிக்கு உரைவரைந்த நச்சினார்க்கினியர் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி துறக்கம் சேர்ந்ததாக உரையெழுதியிருப்பது குறிப்பிடத்தக்கது.

நல்ல யாகங்கட்குக் கூறிய துறைகள் எல்லாம்
முன்னர் முற்ற முடிந்து விட்டபழைய
ஆணைகளையுடைய நல்ல ஆசிரியர் தாங்கள்
பின்பு கூடின கந்தழியாகிய கொள்ளையை
அவரிடத்தே பெற்று அனுபவித்த பல்யாகசாலை
முதுகுடுமிப் பெருவழுதி போல நீயும்
நல்லா சிரியரிடத்தே கேட்டிசின் (208) என
முன்னே கூட்டுக என்றது அந்தணர்க்குக் கூறிய
முறையே முன்னுள்ள கருமங்களை முடித்துப்
பின்னர்த் தத்துவங்களை ஆராய்ந்து
மெய்ப்பொருள் உணர்ந்து வீட்டின்ப
மெய்திய ஆசிரியரிடத்தே தானும்
அம்முறையே சென்று வீட்டின்பத்தைப்
பெற்ற குடுமி என்றவாறு[12]

என்ற உரைக் குறிப்பு, பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி பல யாகங்கள் செய்தமையால் வீட்டின்பம் எய்திய தன்மையை விளக்குகிறது.

தொல்லாணை நல்லாசிரியர்
புணர்கூட்டுண்ட புகழ்சால் சிறப்பின்
நிலந்தரு திருவி னெடியோன் போல (மது.761:763)

என்பன அப்பாடலடிகள். இங்ஙனம் மதுரைக் காஞ்சியில் பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு மாங்குடி மருதனார் அறிவுறுத்த, புறநானூற்றில் (18) குடபுலவியனார் நீரறம் செய்து துறக்கம் செல்லுமாறு அவனுக்கு அறிவுறுத்துகின்றார். ஆனால் பாண்டியன் நெடுஞ்செழியன் துறக்கம் சென்றதாகச் சங்கப்பாக்களில.

## மூவேந்தரும் துறக்கமும்

புலவர்களால் துறக்கம் சென்றதாகப் பாடப்பெற்றோருள் சேரநாட்டு வேந்தர்களும் மாந்தர்களும் சிறப்பிடம் பெறுகின்றனர். மூவேந்தர்களிலும் மிகுதியாகத் துறக்கப் பேறு வாய்க்கப் பெற்றோர் சேரநாட்டு மூவேந்தர்களாவர். புலவர்களிலும் யாருக்கும் கிட்டாததொரு பரிசு சேரநாட்டுப் புலவராகிய பாலைக் கௌதமனாருக்குக் கிட்டியது. துறக்கச் சிந்தனை சேரநாட்டினரிடம் இருந்தளவு பிறநாட்டினரிடம் இல்லை என்பதற்குச் சங்கப்பாடல்கள் சான்றாகின்றன.

## துறக்கம் சென்றது உண்மையா?

நல்லறம் செய்தார்க்கே துறக்கம் என்றால் மேற்சுட்டிய அனைவரும் நல்லறமோ சமூகத் தொண்டோ செய்தவர்களல்லர். கொடைச் சிறப்பினால் துறக்கம் சிலருக்கு மட்டுமே கிடைக்கப்பெற்றது.ஏனையோர் வீரத்தாலும், வேள்விகளாலும் துறக்கம் சென்றுள்ளனர். வீரப்பண்பு நாட்டிற்குப் பயனுடையதாக இருப்பினும் வேள்வி செய்தலென்பது தன்னலம் கருதியதாகும். பிறர்க்குத் தீங்கு

செய்யாதிருத்தலே துறக்கத்திற்கு இட்டுச் செல்லும் என்ற கோட்பாட்டினைச் சங்கப் பாக்களால் அறியமுடிகின்றது.

உயிர் செல்லுமிடத்தினை எவரும் கண்ணால் காண இயலாது. புலவர்கள் தம் மனக்கண்ணில் கண்டு கற்பனைத் திறத்தால் அவர்கள் மீது கொண்டிருந்த பற்றுள்ளத்தால் பாடியிருப்பர் என்பது திண்ணம். 'இறந்தான்' என்ற சொல்லால் குறிப்பின் அவன் துறக்கம் சென்றிருப்பினும் வெளிப்படையாக மக்களுக்குத் தெரியாது என்றெண்ணிய புலவர்கள், தம் பாட்டுடைத் தலைவர்களைத் துறக்கம் சென்றதாகப் பாடியுள்ளனர். மேலோருலகம் எய்தினான் என்றும், தேவருலகம் சென்றான் என்றும், அரும் பெறலுலகம் அடைந்தான் என்றும் பல்வேறு கலைச் சொற்களால் இறந்தவர்களுக்குப் பெருமை சேர்க்கின்றனர். புலவர்களின் ~~நுண்மாண் நுழை~~புலம் பண்டைக்காலத்தில் புகழ்பெற்று விளங்கியோர் துறக்கம் சென்றிருப்பதை உறுதிப்படுத்துகின்றது.

### நிரயம் புகுந்தோர்

நற்சிந்தனைகளை மக்களுக்கு எடுத்தியம்புவது புலவர்களின் இயல்பு. மன்னர்களிடம் பரிசில் பெற்று வாழ்ந்த புலவர்கள் அவர்கள் இறந்த போது சுவர்க்கம் சென்றதாகப் பாடுகின்றனரேயன்றி 'நன்னன்' என்ற குறுநில மன்னனைத் தவிர யாரொருவரையும் நரகம் சென்றதாகத் தம் பாடல்களில் குறித்திலர். 'நிரயம் புகட்டும்' என்ற குறிப்புள்ள தேயன்றிப் புலவர்கள் யாரும் நிரயம் சென்றதாகப் பாடிலர்.

### நரகம் சென்ற நன்னன்

ஒருவனை அவன் நரகம் சென்றுவிட்டான் என்று பாடுவது அவனை இழிவுபடுத்தும் தகைமையது. குறுந்தொகையில் பரணர் பாடிய

பாடல் (292) நன்னன் நரகம் சென்றதாகக் கூறுகிறது. நன்னன் குறுநில மன்னன் என்பதால் அவன் மக்களுக்கு வேண்டுவன செய்திருப்பான்; இருப்பினும் கோபத்தால் செய்த கொலை அவனை நரகிற்கு இட்டுச்செல்கிறது.

மன்னனைப் புகழ்ந்து பாடுவதை நோக்கமாகக் கொண்டவர்கள் புலவர்கள். அவ்வாறிருக்க, பரணர் இங்ஙனம் பாடியிருப்பது அவருடைய மனத்திண்மையைப் புலப்படுத்துகின்றது.

மண்ணிய சென்ற ஒள்நுதல் அரிவை
புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பதற்கு
ஒன்பதிற்று ஒன்பது களிற்றொடு அவன் நிறை
பொன் செய் பாவை கொடுப்பவும் கொள்ளான்
பெண்கொலை புரிந்த நன்னன்போல
வரையா நிரையத்துச் செலீஇயரோ அன்னை
ஒரு நாள்,
நகைமுக விருந்தினன் வந்தெனப்
பகைமுக ஊரில் துஞ்சலோ இலளே (குறுந்.292)

என்பது பாட்டு. பெண்கொலை புரிந்ததனால் 'நிரயம் புகட்டும்' என்று பாடாது நிரயம் பெற்றதாகப் புலவர் பாடியிருப்பது நன்னன் நரகம் செல்லத்தக்கவன் என்பதைக் காட்டும்.

நன்னன் - ஒரு குறுநில மன்னன்; இவனுடைய
ஆற்றங்கரைத் தோட்டத்திலுள்ள அரியதொரு
மாமரத்தின் காய் ஆற்றில் விழ அந்நீரில் மிதந்து
வந்த காயை ஒரு பெண் கைப்பற்றித்
தின்றுவிட்டாள். அந்தக் குற்றத்திற்காக அவன்

தந்தை எண்பத்தொரு யானைகளும்
அவளுடைய நிறையளவான பொற்பதுமையும்
தர முன்வந்தும் ஏற்காது அப்பெண்ணுக்குக்
கொலைத் தண்டனை விதித்தான்.
இதனால் அவன் 'பெண் கொலை புரிந்த
நன்னன்' என்று பேசப்படலானான்[10]

நன்னன் இறந்தமைக்கான குறிப்பு பாடலில் இன்மையால் அவன் நரகம் சென்றான் என்று தெள்ளிதின் விளக்க இயலாது. அன்னையைப் பார்த்து நீயும் நன்னைப் போல நரகம் செல்வாயாக என்று பாடியிருப்பதன் வாயிலாக அவன் நரகம் சேர்ந்ததனை உறுதிப்படுத்துகின்றார் பரணர்.

**ஆய்வு முடிவுகள்**

✶ இறப்பு மாந்தரனைவருக்கும் பொதுவியல்பு; எனினும் துறக்கமும் நிரயமும் அவரவர்தம் வினைக்கேற்ப அமையக்கூடியன.

✶ சங்கப் புலவர்கள் தமக்கீந்த புரவலர்கள் இறந்தபோது அவர்கள் துறக்கம் சேர்ந்ததாகப் பாடி அப்புரவலர்தம் பெருமையையும் புகழையும் வெளிப்படுத்தினர்.

✶ சேர வேந்தர்களான யானைக்கண் சேயினைக் கூடலூர் கிழாரும் (புறம்.229), பெருஞ்சேரலாதனையும், உதியஞ்சேரலாதனையும் மாமூலனாரும் (அகம்.55,253) துறக்கம் சென்றதாகப் பாடியுள்ளனர்.

✶ நாட்டில் தீநிமித்தம் ஏற்படின் வேந்தர்க்கு அழிவு நேரும் என்பதற்கிணங்க யானைக்கண்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை இறந்தமையினைப் பாடிய கூடலூர் கிழார் அவன் துறக்கம் சென்றதாகக் குறிக்கின்றார்.

* மன்னன் வடக்கிருப்பின் சான்றோரும் உடனுறைந்து உயிர் துறப்பர் என்பதற்குப் பெருஞ்சேரலாதன் துறக்கம் புகுந்ததைப்பாடிய மாமூலனார் பாட்டு (அகம்.55) சான்றாகின்றது.
* பாட்டுடைத் தலைவர்களின் முன்னோர் துறக்கம் போந்த செய்தியும் சங்க இலக்கியத்தில் காணபெறுகின்றது. உதியஞ்சேரலாதனின் முன்னோர் சென்ற துறக்கத்தினை மாமூலனாரும் (அகம்.233), மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணனின் முன்னோர் துறக்கம் சென்றதாக மாறோக்கத்து நப்பசலையாரும் (புறம்.174) பாடியுள்ளனர்.
* சோழ வேந்தர்களுள் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை ஐயூர் முடவனாரும் (புறம்.278), மலையமான் திருமுடிக்காரியை நப்பசலையாரும் (புறம்.174) துறக்கம் சேர்ந்ததாகப் பாடியுள்ளனர்.
* சேரனும் சோழனும் பகைவர்களாக இருப்பினும் இருவரும் ஒருங்கு துறக்கம் புகுந்த செய்தியைக் கழாத்தலையார் சிறப்பித்துள்ளார். குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் இங்குச்சுட்டப்பெறும் வேந்தர்களாவர் (புறம்.62). அவர்தம் மனைவியரும் உடன்கட்டை ஏறித் துறக்கம் சேர்ந்தனர்.
* குறுநில மன்னர்களுள் ஆய் அண்டிரனும், பாரியும் துறக்கம் சென்ற சிறப்பிற்குரியவர்கள்.
* ஆய் அண்டிரன், உரிமை மகளிர் உடன் வரத் துறக்கம் அடைந்ததாகக் குட்டுவன் கீரனாரும் (புறம்.240), அவனை நெடியோன் எதிர்கொண்டு அழைத்து வானுலகத்தில் வரவேற்பு

நிகழ்த்தியதாக ஏணிச்சேரி முடமோசியாரும் (புறம்.241) சிறப்பித்துள்ளமை போற்றத்தக்கது.

- செல்வக் கடுங்கோ வாழியாதனைப் புகழ்ந்த கபிலர், தன் நண்பனாகிய பாரி உயிர் துறந்து, திரும்பி வரவியலா நெடுந்தொலைவிற்குச் சென்றதனைக் குறித்துள்ளார் (பதிற்.61).

- துறக்கப்பேறு வேந்தர்களுக்கு மட்டும் உரியதன்று. இம்மண்ணுலகில் புகழுடையோர் யாவருக்கும் பொதுவானது என்பதைத் தும்பி சொகினனார் (புறம்.249) வடமோதங்கிழார் (புறம்.260) பாடல்கள் பறைசாற்றுகின்றன.

- ஆடு கோட்பாட்டுச் சேரலாதனின் பகைவர்கள் எய்திய வீர சுவர்க்கம் அனைவருக்கும் வீரத்தின் சிறப்பை வலியுறுத்துகின்றது (பதிற்.52).

- பாண்டியர்கள் துறக்கம் சேர்ந்த குறிப்பு பாக்களில் இல்லாதிருப்பினும், பாண்டியன் நெடுஞ்செழியனைத் துறக்கம் செல்ல ஆற்றுப்படுத்துவதனைச் சங்க இலக்கியத்தால் (புறம்.18) அறியமுடிகின்றது. பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி வீட்டின்பம் பெற்றதாக மதுரைக்காஞ்சி உரையில் நச்சினார்க்கினியர் குறித்துள்ளார்.

- கோப்பெருஞ்சோழன் துறக்கம் சென்ற குறிப்பு சங்க இலக்கியத்தில் இல்லை. எனினும் வடக்கிருந்து உயிர் துறந்து பெருஞ்சேரலாதன் துறக்கம் சேர்ந்தமையால் வடக்கிருந்த கோப்பெருஞ்சோழனும் துறக்கம் புகுந்திருக்க வாய்ப்புண்டு. மேலும் புல்லாற்றூர் எயிற்றியனார் பாடலும் (புறம்.213) இதனை உறுதிப் படுத்துகின்றது.

* புலவர்களுள் சேர நாட்டுப் புலவரான பாலைக் கௌதமனார் துறக்கம் போந்த வரலாறு பதிற்றுப்பத்தின் மூன்றாம் பத்துப்பதிகத்தால் அறியலாகின்றது.

* சேர சோழ பாண்டிய நாடுகளுள் சேர நாட்டைச் சேர்ந்தோர் மிகுதியும் துறக்கம் சேர்ந்துள்ளமை சங்க இலக்கியத்தால் புலனாகின்றது.

* நரகம் சென்றோரைப் பற்றிய குறிப்பு பரணரால் மட்டுமே சுட்டப்பெற்றுள்ளது (குறுந்.292). பெண்கொலை புரிந்ததால் நன்னன் நரகம் சேர்ந்ததாகப் பாடுகின்றார் புலவர்.

* இழிவான செயலை எவரும் பாட விரும்பார்; ஆகையால் நரகம் சென்றோரைப் பற்றிய குறிப்புகள் மிகுதியாகக் கிடைத்தில.

## சான்றெண் விளக்கம்

1. க.நெடுஞ்செழியன், **தமிழ் இலக்கியத்தில் உலகாய்தம்**, ப.252.
2. இரா.நிர்மலா (1989), **தமிழிலக்கியத்தில் மூப்பும் இறப்பும் (பிஎச்.டி.ஆய்வேடு)**, சென்னைப் பல்கலைக்கழகம், ப.293.
3. சி.சத்தியமூர்த்தி (க.ஆ),**கனிமொழி இதழ்**, செப்டம்பர் 2002, ப.43.
4. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), **புறநானூறு மூலமும் உரையும் (முதல் பகுதி)**, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, ப.376.
5. சு.அருளம்பலவனார், **பதிற்றுப்பத்து ஆராய்ச்சியுரை (இரண்டாம் பாகம்)**, அ. சிவானந்தநாதன் வெளியீடு, காரைநகர், யாழ்ப்பாணம், ப.449.
6. மேலது, ப.449
7. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), **புறநானூறு மூலமும் உரையும் (இரண்டாம் பகுதி)**, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, ப.90.
8. க.நெடுஞ்செழியன், **தமிழ் இலக்கியத்தில் உலகாய்தம்**, ப.310.
9. உ.வே.சாமிநாதய்யர் (உ.ஆ.1963), **புறநானூறு மூலமும் உரையும்**, கபீர் அச்சுக்கூடம், சென்னை, முன்னுரை, ப.42.
10. க.நெடுஞ்செழியன், **தமிழ் இலக்கியத்தில் உலகாய்தம்**, ப.355.
11. நச்சினார்க்கினியர் (உ.ஆ), **தொல்காப்பியம் பொருளதிகாரம், புறத்திணையியல்**, நூ.25.
12. நச்சினார்க்கினியர் (உ.ஆ1956), **பத்துப்பாட்டு மூலமும் உரையும்** கபீர் அச்சுக்கூடம், சென்னை
13. மு.சண்முகம் பிள்ளை (ப.ஆ.1985), **குறுந்தொகை மூலமும் உரையும்**, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், பக்.256,207.

# முடிவுரை

முக்தியென் றொருநிலை சமைத்தாய் - அங்கு
முழுதினையு முணரும் உணர்வமைத்தாய்
பக்தியென் றொருநிலை வகுத்தாய் - எங்கள்
பரமா! பரமா! பரமா!

என்பது பாரதியார் வாக்கு. சங்க இலக்கியங்கள் மக்களின் வாழ்வியலை எடுத்தியம்புவன. அவை பழந்தமிழரின் நம்பிக்கையினையும் சடங்கு முறைகளையும் விரித்துப் பேசுகின்றன. சொர்க்க நரகச் சிந்தனைகள் மக்களை நல்வழிப்படுத்தும் பொருட்டுச் சங்கப்புலவர்களால் பாடப்பெற்றவை. சொர்க்க நரகங்களைச் சொல்லியே உலகச் சமயவாதிகள் அனைவரும் தங்கள் சமயத்தை வளர்த்து வருகின்றனர். சொர்க்கம் மிக இனிமையானது என்றும் நரகம் மிகக் கொடுமையானது என்றும் மக்கள் நம்புகின்றனர். இந்த எண்ணத்தைச் சமயங்களும் வளர்த்து வருகின்றன. சைவம், சமணம், பௌத்தம், வைணவம், இசுலாம், கிறித்தவம் *முதலான* சமயங்கள் அனைத்தும் பிறப்பின் முடிவிடத்தையும் பிறப்பிற்குக் காரணமான பாவத்தின் தொடக்கத்தையும் விரித்துப் பேசுகின்றன. தொன்மைத் தமிழ் இலக்கியங்களான சங்க இலக்கியங்களில் சொர்க்கம், நரகம் பற்றிய கருத்துக்கள் பயில்கின்றன.

வாழ்க்கையைத் துறந்து செல்லும் உலகிற்குத் 'துறக்கம்' என்று பெயர். நரகம் என்பதும் வாழ்க்கையின் முடிவில் அனைத்தையும் துறந்து செல்வதைக் குறிப்பினும் துறக்கம் இன்ப வாழ்வையும், நரகம் துன்ப வாழ்வையும் விளக்கும் முகத்தான் சங்க இலக்கியங்கள் பாடப்பெற்றுள்ளன. துறக்கவுலகம் இன்பம் நிறைந்ததாகவும், இயற்கைப்

பொழில் சூழ்ந்ததாகவும், தேவர்களின் உறைவிடமாகவும், விழுப்புண் எய்தி மாண்ட வீரர்களின் இருப்பிடமாகவும் சங்க இலக்கியத்தில் சித்தரிக்கப்பட்டுள்ளது. அதற்கு நேர் மாறாக நரகம் கொடுமை நிறைந்த இடமாகக் காட்சியளிக்கிறது. நரகம் குறித்த புனைவு ஏதுமின்றித் துன்பம் மிக்கதாக மட்டுமே சங்கப் புலவர்கள் பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது.

சங்க இலக்கியத்தில் சொர்க்கம், நரகம் என்ற சொல்லாட்சிகள் இடம்பெறவில்லை. சொர்க்கத்தைத் 'துறக்கம்' என்ற சொல்லாட்சியும் நரகத்தை 'நிரயம்' என்ற சொல்லாட்சியும் புலப்படுத்துகின்றன. 'துறக்கம்' என்பதே சொர்க்கமாகத் திரிந்தது.

சங்கப் புலவர்கள், 'துறக்கம்' என்ற சொல்லாட்சியை அருகியும், துறக்கம் என்ற பொருள் தரும் சொல்லாட்சிகளை மிகுதியும் பாடியிருப்பது ஒரு பொருள்குறித்த பல சொற்கள் சங்க காலத்தில் ஆளுமை பெற்றிருந்தமைக்குச் சான்றாகின்றன. நரகத்திற்கு 'நிரையம்,' 'நிரயம்' என்ற சொற்றொடர்களே பயில்கின்றன. 'உய்திஇல்லென' என்பது நரகத்தினின்றும் நீங்குதலில்லை என்ற பொருளிலும் துறக்கப்பேறு கிட்டாது என்ற பொருளிலும் ஆளப்பெற்றுள்ளது.

1. உயர்நிலையுலகம்
2. உயர்ந்தோர் நாடு
3. உம்பருலகம்
4. உயருலகு
5. அரிது செல்லுலகம்
6. சிறந்தோர் உலகம்
7 தொய்யா உலகம்
8. மேலோருலகம்
9. தேவருலகம்
10. புத்தேள் உலகம்
11. புத்தேள் நாடு
12. நாகம்
13. பெரும் பெயர் உலகம்
14. பசும் பொன்னுலகம்

| | |
|---|---|
| 15. மறுமையுலகம் | 16. மறுமை |
| 17. ஆண்டு | 18. உக்கரை |
| 19. தவலில் உலகம் | 20. வாரா உலகம் |
| 21. வாரா சேட்புலம் | 22. அந்தரத்து அரும்பெறல் அமிழ்தம் |

ஆகியவை துறக்கத்தைக் குறிப்பன. இவற்றுள் பெரும்பாலானவை தேவருலகத்தையும், அங்கு வாழ்வோரையும், அவர்களது உணவினையும் குறிப்பதாக அமைந்திருப்பது நோக்கத்தக்கது.

நல்லதைச் சுட்டி மக்களை நல்வழிப்படுத்த விழைந்த புலவர்கள் தீயவற்றை விளக்கிக் கூறி அதன் மூலம் மக்களை நன்னெறிப்படுத்த விரும்பிலர். ஆகவே நரகம் குறித்த பாக்களும், கலைச் சொற்களும் சங்க இலக்கியத்தில் அருகி வந்துள்ளன. 'செய்யாதே' என்று கண்டிப்பதைக் காட்டிலும் 'செய்' என்று மக்களுக்கு அறிவுறுத்துவதே சங்கப் புலவர்களின் நோக்கம். இதனை அவர்தம் துறக்க, நிரயப் பாடல்கள் புலப்படுத்துகின்றன.

சேர, சோழ, பாண்டியநாட்டுப் புலவர்களாலும், கொங்கு நாட்டுப் புலவர்களாலும் சொர்க்க நரகக் கோட்பாடுகள் சங்க இலக்கியத்தில் புனையப்பட்டுள்ளன. சேர நாட்டுப் புலவரான பாலைக் கௌதமனார் துறக்கம் சென்றதாகப் பதிற்றுப் பத்தின்மூன்றாம் பத்துப்பதிகம் பேசுகிறது. ஆனால் துறக்கம் என்ற சொல்லாட்சியை சேரநாட்டுப்புலவர்களுள் ஒருவரும் குறித்திலர்.

**சேர நாட்டுப் புலவர்களில்** 1. கழாத்தலையார் 2. கூடலூர் கிழார் 3. குட்டுவன் கீரனார் 4.காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் 5. பெருங்குன்றூர் கிழார் ஆகியோர் ***துறக்கத்தையும்,*** 1. நரி

வெரூஉத்தலையார் 2. குமட்டூர் கண்ணனார் 3. நம்பி குட்டுவனார் ஆகிய புலவர்கள் **நரகத்தையும்** பாடியுள்ளனர். இவர்கள் தேவருலகத்தைக் குறிப்பதாகவே துறக்கத்தைப்பாடியுள்ளனர்.

1. ஐயூர் முடவனார் 2. கோப்பெருஞ்சோழன் 3. புல்லாற்றூர் எயிற்றியனார் 4. ஆலூர் மூலங்கிழார் 5. தாயங்கண்ணனார் 6. செல்லூர்க் கோசிகன் கண்ணனார் 7. உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் 8.உறையூர் முதுகண்ணன் சாத்தனார் 9. சாத்தந்தையார் 10. கடியலூர் உருத்திரங் கண்ணனார் 11. தும்பி சொகினனார் 12. மாமூலனார் 13. வடமோதங்கிழார் 14. காரிகிழார் 15. குறுங்கோழியூர் கிழார் ஆகியோர் **துறக்கம் பாடிய சோழநாட்டுப் புலவர்களாவர்.** 1. ஆலத்தூர் கிழார் 2. ஒரோடகத்துக் கந்தரத்தனார் 3. புறத்திணை நன்னாகனார் ஆகியோர் **சோழ நாட்டுப்புலவர்களில் நரகம்** குறித்துப் பாடியுள்ளனர். இங்கு தொண்டை நாட்டுப் புலவர்களும் சோழ நாட்டில் சேர்க்கப்பட்டுள்ளனர்.

**பாண்டியநாட்டுப் புலவர்களுள்,** 1.இளம்பெருவழுதியார் 2.கடுவனிளவெயினனார் 3. கபிலர் 4. குடபுலவியனார் 5. கீரந்தையார் 6. நல்லந்துவனார் 7. மாறோக்கத்து நப்பசலையார் 8. கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி 9. மாங்குடி மருதனார் 10. நல்வழுதியார் 11. நல்லழுசியார் 12. நல்லெழுநியார் 13. நப்பண்ணனார் ஆகியோர் துறக்கம் பாடிய சிறப்பிற்குரியோர். மதுரை மருதங்கிழார் மகனார் சொகுத்தனார் ஒருவரே நரகம் குறித்துப் பாடிய பாண்டிய நாட்டுப் புலவராவர். மாங்குடி கிழாரையும் மாங்குடி மருதனாரையும் ஒருவராகக் கருதி இவ்ஆய்வு மேற்கொள்ளப்பெற்றது. துறக்கம் என்ற சொல்லாட்சி மிகுதியாக ஆளப்பெற்ற சிறப்பிற்குரியவர்கள் பாண்டியநாட்டுப் புலவர்கள்.

பரணரும் ஔவையாரும் கொங்கு நாட்டைச் சேர்ந்தவர்கள். சொர்க்கம், நரகம் ஆகிய இரண்டையும் பாடிய பெருமைக்குரியவர் பரணர் ஒருவரே. வேறெந்த நாட்டைச் சேர்ந்த புலவரும் இங்ஙனம் பாடிலர்.

1. மோசி கீரனார் 2. சிறுவெண்டேரையார் 3. பிரமனார் 4. காவிட்டனார் 5. பரூஉமோவாய்ப்பதுமன் 6. வெண் பூதன் ஆகியோரும் சொர்க்கத்தினைப் புகழ்ந்துள்ளனர். இவர்களுடைய நாட்டினை இன்னதென்று வரையறுக்க இயலவில்லை. பரிபாடல் திரட்டில் துறக்கம் குறித்து எழுதப்பெற்ற இரண்டு பாடல்களைப் பாடியோர் இன்னாரென்று புலனாகவில்லை.

தேவருலகம் சங்ககாலப் புலவர்களுக்குச் சொர்க்கமாகக் காட்சியளிக்கிறது. இருப்பினும் தேவருலகத்தைப் போற்றிப் புனைந்துரைக்கும் பாங்கும், அவமதிக்கும் போக்கும் சங்கப் புலவர்களிடையில் ஊடாடியிருப்பதை அவர்தம் பாக்கள் தெற்றென வெளிப்படுத்துகின்றன. பிறநாட்டுப் புலவர்களைக் காட்டிலும் நரகச் சிந்தனை பாண்டியநாட்டுப் புலவர்களிடம் அருகிக் காணப்படுகின்றது.

பழந்தமிழர் சொர்க்கத்தை அடைதற்கென்றும், நரகத்தை அடையாது நீங்குதற்கென்றும் நெறிமுறைகளை வகுத்துக் கொண்டு வாழ்ந்தனர். இதனைச் சங்கப் புலவர்கள் தம் பாக்களில் பதிவு செய்துள்ளனர். சங்க காலம், காதலும் வீரமும் ஒருங்கு போற்றப்பட்ட காலமாதலின் துறக்கம் பெறுதற்குரிய நெறியில் வீரம் முதன்மைபெற்றது. நல்வினையும் நல்லறமும் குறித்த சிந்தனைகள் சங்கத் தமிழரிடம் மிகுதியாக இருந்தமையினைத் துறக்கம் பற்றிய பாடல்கள் புலப்படுத்துகின்றன.

சங்கப்பாக்களால் புலனாகும் **துறக்கத்திற்கான நெறிகளாவன;**

| | |
|---|---|
| 1.வீரம் | 2. வடக்கிருத்தல் |
| 3. கொடை | 4. வேள்வி |
| 5. தவம் | 6. நல்வினையறம் |
| 7. புகழ் | 8. கணவனொடு இறத்தல் |
| 9.ஆண்மக்கட் பேறு | 10. இறைமை |

என்பனவாகும். இவற்றுள் கணவனொடு இறத்தல் அக்காலத்தில் பெண்டிருக்கு இழைக்க பெற்ற கொடுமையைக் காட்டுகிறது. பெண்டிர் கணவனுடன் இறப்பதற்குத் துறக்கச் சிந்தனை முன்வைக்கப்பெற்றது. சமூகத் தொண்டாற்றி இறந்தோருக்கு மட்டுமன்றித் தன்னலம் கருதித் தவம், வேள்வி செய்தோருக்கும் துறக்கம் வழங்கப்பட்ட செய்தி சங்க இலக்கியத்தால் தெளிவாகிறது. இவை பிற்காலத்தில் சமயவாதிகளால் வளர்ச்சி பெறலாயின. வைகுந்தப் பேறு பெற இறைமைக் கோட்பாடு வலியுறுத்தப் பெற்றது. முருகனுடைய திருப்பரங்குன்றமும் துறக்கத்தை வழங்குவதாக சங்கப் புலவர்கள் பாடியுள்ளனர். இக்கருத்து பிற்காலத்தில் வளர்ச்சியடையலாயிற்று. பாண்டியநாட்டுப் புலவர்கள் இந்நெறியினை மிகுதியும் புலப்படுத்தியுள்ளனர்.

அருளும் அன்பும் இல்லாதாரும் செய்ந்நன்றி கொன்றோரும், பெண்கொலை புரிந்தோரும், பொய் பேசுவோரும், காதலுக்கு இடையூறு விளைவிப்போரும் நரகம் செல்லுதற்குரியவர்களாகச் சங்கப் புலவர்களால் கருதப்பட்டுள்ளனர். அவற்றினின்றும் நீங்கியோருக்கு நரகம் கிட்டாது என்பதை வலியுறுத்த இவை குறிக்கப்பெற்றன. நல்வினை செய்தார்க்கு நரகம் கிட்டாது என்பதைச் சங்கப் புலவர்கள் வலியுறுத்தியுள்ளனர்.

மாந்தரின் இறுதிக் காலத்தினை எடுத்தியம்புவதாகச் சங்கப்பாடல்கள் பாடப்பெற்றுள்ளன. இறந்தபிறகு உடம்பினின்று நீங்கிய உயிர் சொர்க்கமோ நரகமோ அடைவதாக மக்கள் நம்புகின்றனர். சொர்க்கத்தைத் தேவருலகமாகச் சித்தரிப்பதால் மீண்டும் பிறப்பு உண்டு என்பதும், வாரா சேட்புலம், வாரா உலகம் என்று மொழிந்திருப்பதனால் பிறவி இல்லை என்பதும் சங்க இலக்கியங்களால் புலனாகின்றது. பிறவா நிலையே பிற்காலத்தில் வீடுபேறாக வளர்ச்சியடைந்தது. இறந்த பின்னர் துறக்கம் சென்ற உயிர் மீண்டும் பிறவிநிலைக்கு உட்படுவதாகவும், பிறவாத் தன்மையடைவதாகவும் இருவேறு விதமான சிந்தனைப்போக்கு சங்க காலத்தில் நிலவியதை பாக்களால் அறியமுடிகின்றது. சங்கப்புலவர்கள் இருதிறப்பட்ட எண்ணம் கொண்டிருந்தமை இதனால் புலனாகின்றது. சங்ககாலப் புலவர்களின் இச்சிந்தனை அறம், பொருள், இன்பம், வீடு என்ற நாற்பொருளாக வளர்ச்சி பெறக் காரணமாயிற்று. ‘வீடு’ என்ற சொல்லாட்சி சங்க இலக்கியத்தில் இடம் பெறாதிருப்பினும் வாராவுலகம் அப்பொருளில் அமைந்த தொடராகும். வாழ்வின் முடிவில் நரகம் சென்றோருக்கும் வினைப்பயன் முடிந்த பிறகு துறக்கப்பேறு கிட்டும். ஆனால் சங்க இலக்கியத்தில் நரகம் சென்ற உயிர் மீண்டும் பிறப்பது பற்றிய குறிப்பு இல்லை. இறந்தவுடன் வானுலகத்தில் வரவேற்பு நிகழ்ந்ததாக உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடியுள்ளார். இப்பாடல் ஆய் அண்டிரனைப் பற்றியது. நெடியோன் கோயிலில் வரவேற்பு நிகழ்ந்ததாகப் புலவர் பாடியிருப்பதற்குத் தேவேந்திரன் வரவேற்றதாக உரையாசிரியர்கள் குறித்துள்ளனர். ‘நெடியோன்’ என்பது திருமாலைக் குறிக்கும் தொடர். ஆகவே இங்கு வைகுந்தத்தில் வரவேற்பு நிகழ்ந்ததையே புலவர் பாடியிருப்பதாகக் கருதமுடிகின்றது.

முருகன், திருமால் குறித்த துறக்கக் கோட்பாடுகள் சமயச் சார்பற்ற சங்க இலக்கியம் என்பதினின்றும் இலைமறைகாயாகச் சங்கப் புலவர்களிடம் சமயச்சிந்தனை இருந்தமையைப் புலப்படுத்துகின்றன. ஏணிச்சேரி முடமோசியாரால் பாடப்பெற்ற நெடியோன் கோயில் வரவேற்பு, நம்மாழ்வார் பாடியருளிய பாசுரங்களோடு ஒப்பு நோக்கத்தக்கவை.

சொர்க்க நரகம் சென்றதை யாரும் கண்ணால் காண இயலாது. இருப்பினும் சங்கப்புலவர்கள் தம் பாக்களில் துறக்க நிரயம் சென்றதாகப் பதிவு செய்துள்ளனர். 1 யானைக்கண் சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை 2. பெருஞ்சேரலாதன் 3. உரியஞ்சேரலாதனின் முன்னோர் ஆகிய சேரவேந்தர்களும் 1.குளமுற்றத்துச் துஞ்சிய கிள்ளி வளவன் 2.மலையமான் திருமுடிக்காரி ஆகிய சோழர்களும் துறக்கம் சென்ற வேந்தர்களாவர். பாண்டிய வேந்தர்களில் எவரும் துறக்கம் சென்றதாகச் சங்கப்புலவர்கள் பாடவில்லை ஆனால் மதுரைக்காஞ்சிக்கு உரை வரைந்த நச்சினார்க்கினியர் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி வீடுபேறு எய்தியதாகக் குறித்துள்ளார். ஆய் ஆண்டிரன், பாரி முதலிய குறுநில மன்னர்களும், ஆடு கோட்பாட்டுச் சேரலாதனின் பகைப்படை வீரர்களும், கரந்தைப் போருடற்றியோரும் துறக்கம் சென்ற நிகழ்ச்சி சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றது.

நரகம் சென்றோருள் நன்னன் என்ற குறுநில மன்னன் குறிக்கப்பெற்றுள்ளான். பெண் கொலை செய்தமையால் நரகம்தான் சென்றிருக்கக் கூடும் என்று திண்ணமாகப் பாடுகின்றார் பரணர். நன்னெறியை வலியுறுத்தவும் தீநெறியைத் தவிர்க்கும் பொருட்டும் சங்கப் புலவர்களால் துறக்க நிரயக் கோட்பாடுகள் பாடப்பெற்றுள்ளன. சங்க காலத்தில் மன்னர், மக்கள்

என்ற பேதமின்றி அனைவரையும் நன்னெறிப்படுத்துவதை நோக்கமாகக் கொண்டே சொர்க்க நரகச் சிந்தனைகளைச் சங்கப்புலவர்கள் புலப்படுத்தியுள்ளனர்.1. திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியவற்றில் காணலாகும் சொர்க்க நரகக் கருத்துகளும் ஒருங்கு நோக்கி ஆராய்தற்குரியன. 2.காப்பியங்கள் அனைத்தையும் தொகுத்து சமய நோக்கிலும் 3.காலந்தோறும் தோன்றிய இலக்கிய வளர்ச்சியைத் திரட்டியும். 4.பக்தி இலக்கியங்களைத் தனித்தும் பிறவற்றோடு ஒப்பிட்டும் சொர்க்க நரகக் கோட்பாடுகள் ஆராய்தற்குரியன.

சங்கப் புலவர்களால் மிகுதியாகப் பாடப் பெறாத துறக்க நிரயச் சிந்தனைகளின் சிறப்பும், அவை மக்களுக்கு அறிவுறுத்தும் நல்வழிக் கோட்பாடுகளும் இவ் ஆய்வேட்டில் ஆராயப்பெற்றுள்ளன.

## துணைநூற்பட்டியல்


1. அண்ணாமலை. வே. (தொ.ஆ.2000) - **சங்க இலக்கியத் தொன்மக் களஞ்சியம் (தொகுதி-2),** மெய்யப்பன் தமிழாய்வகம், 53, புதுத்தெரு, சிதம்பரம்.

2. அருளம்பலவனார்.சு (1960) - **பதிற்றுப்பத்து ஆராய்ச்சியுரை, (இரண்டாம் பாகம்),** அ.சிவானந்தநாதன் வெளியீடு, காரைநகர், யாழ்ப்பாணம்

3. குஞ்ஞுன்பிள்ளை (1970) - **பண்டைய கேரளம்,** தமிழ்ப் புத்தகாலயம், சென்னை.

4. சண்முகம் பிள்ளை (ப.ஆ.1982) - **நிகண்டு சொற்பொருட் கோவை- தெய்வப்பெயர்,** பதிப்புத்துறை, மதுரை காமராஜர் பல்கலைக்கழகம்.

5. சண்முகம் பிள்ளை.மு (1995) - **தொல்காப்பியம் பொருளதிகாரம் (இரண்டாம் பகுதி),** முல்லை நிலையம், 43,புதுதெரு, மண்ணடி, சென்னை.

6. சண்முகம் பிள்ளை.மு. (1994) - **புறநானூறு மூலமும் உரையும்** உ.வே.சாமிநாதய்யர் நூல் நிலையம், திருவான்மியூர் சென்னை.

| | | | |
|---|---|---|---|
| 7. | சாமிநாதய்ய ர். உ.வே. (1971) | - | **புறநானூறு மூலமும் உரையும்,** உ.வே.சாமிநாதய்யர் நூல் நிலையம், திருவான்மியூர் சென்னை. |
| 8. | சாமிநாதய்யர். உ.வே. | - | **குறுந்தொகை மூலமும் விளக்க உரையும்** ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு, கபீர் அச்சுக் கூடம், சென்னை. |
| 9. | சிவகுருநாதப்பிள்ளை.மா. (2000) | - | **நாயன்மார்கள் வரலாற்றில் பல்வகைக் செய்திகள்,** திருவரசு புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தி.நகர்,சென்னை. |
| 10. | செல்வராஜன்.மா. | - | **கடவுளைக் கண்ட கவிஞன்,** அசோகன் பதிப்பகம், 56, உஸ்மான் சாலை, தி.நகர், சென்னை. |
| 11. | சோமசுந்தரனார். பொ.வே. (1961) | - | **ஐங்குறுநூறு,** சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. |
| 12. | சோமசுந்தரனார்.பொ.வே. (1962) | - | **பத்துப்பாட்டு மூலமும் உரையும் முதல் பகுதி,** சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி, சென்னை. |

13. சோமசுந்தரனார்.பொ.வே.- (1962) **பத்துப்பாட்டு மூலமும் உரையும் இரண்டாம் பகுதி,** சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், திருநெல்வேலி, சென்னை.

14. சோமசுந்தரனார். பொ.வே. - (2001) **பத்துப்பாட்டு பட்டினப்பாலை,** திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 522, டி.டி.கே. சாலை, சென்னை.

15. தமிழ்நாட்டு வரலாற்றுக்குழு - **தமிழ்நாட்டு வரலாறு சோழப்பெரு வேந்தர்காலம் (2.ஆம் பகுதி. கி.பி.900-1300)** தமிழ் வளர்ச்சி இயக்ககம், குறளகம், சென்னை.

16. துரைசாமிப் பிள்ளை. ஔவை.சு (1996) - **புறநானூறு மூலமும் உரையும் (முதல் பகுதி),** திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 522, டி.டி.கே. சாலை சென்னை.

17. துரைசாமிப்பிள்ளை ஔவை.சு. (1958) - **பதிற்றுப்பத்து மூலமும் உரையும்,** 5, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

18. துரைசாமிப் பிள்ளை. ஔவைசு. (1996) - **புறநானூறு மூலமும் உரையும் (இரண்டாம் பகுதி)** சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 154, டி.டி.கே. சாலை, சென்னை.

19. நச்சினார்க்கினியர் (உ.ஆ.1931) - **கலித்தொகை (நெய்தல்) மூலமும் உரையும்,** நோபில் அச்சுக்கூடம், சென்னை.

20. நச்சினார்க்கினியர் (உ.ஆ.1956) - **பத்துப்பாட்டு மூலமும் உரையும்,** கபீர் அச்சுக் கூடம், சென்னை.

21. நாராயணசாமிஐயர்.அ. பின்னத்தூர் (1962), - **நற்றிணை நானூறு மூலமும் உரையும்,** திருநெல்வெலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்.

21. நெடுஞ்செழியன். க. (1990) - **தமிழ் இலக்கியத்தில் உலகாய்தம்,** பாரி நிலையம், சென்னை

23. பரிமேலழகர் (உ.ஆ.1948)- **பரிபாடல் மூலமும் உரையும்,** கபீர் அச்சுக் கூடம், சென்னை.

24. பரிமேலழகர் (உ.ஆ.1994)- **திருக்குறள் உரையுடன்,** பழனியப்பா பிரதர்ஸ், சென்னை.

25. பழனிச்சாமி.செ.(1989) - **புறநானூற்றில் தமிழர் பண்பாடு,** வாணி பதிப்பகம், 402, அழகேசன் சாலை, கோவை.

26. பாரதிதாசன் - **வந்தவர் மொழியா? செந்தமிழ்ச் செல்வமா?** பூம்புகார் பிரசுரம், 63, பிராட்வே, சென்னை.

27. பாலசாரநாதன்.சு.(1986) - **சங்ககாலப் புலவர்கள்,** உ.வே.சாமிநாதய்யர் நூல் நிலையம், பெசன்ட் நகர், சென்னை.

28. மருதநாயகம்.ப. (2004) - **புதுப்பார்வைகளில் புறநானூறு,** காவ்யா, 14,முதல் குறுக்குத் தெரு, டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம், சென்னை.

29. மாணிக்கனார்.அ. (உ.ஆ.1999) - **அகநானூறு மூலமும் உரையும் முதல்பகுதி** (1.120), வர்த்தமானன் பதிப்பகம், 141, உஸ்மான் சாலை, தி.நகர், சென்னை.

30. மாதய்யன்.பெ.(2001) - **வரலாற்று நோக்கில் சங்க இலக்கிய பழமரபுக் கதைகளும் தொன்மங்களும்,**
தமிழ்ப் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர்.

31. இராமசாமி.ப - **தம்மபதம் (தமிழாக்கம்)**

32. லட்சுமணன்.கி. (2000) - **இந்திய தத்துவ ஞானம்,**
பழனியப்பா பிரதர்ஸ்,
சென்னை.

33. வேங்கடசாமி நாட்டார்.ந.மு - வேங்கடாசலம் பிள்ளை.இ (உ.ஆ.1946) **அகநானூறு மணிமிடை பவளம்,**
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

34. ஜகந்நாதன்.கி.வா. - **கற்பகமலர்,**
தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம் லிமிடெட்,
8, சின்னரெட்டி தெரு,
எழும்பூர், சென்னை.

35. ஜீவபந்து.T.S - **இளங்கோவடிகள் சமயம்,**
ஜைன இளைஞர் மன்றம்,
3, போக்சாலை, சென்னை.

35. ...................................... (1964) - **இறையனாரகப் பொருள் உரையுடன்,**
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி, சென்னை.

36. **ஆங்கில நூல்**

1. Joseph Campbell (1956) - **THE HERO WITH A THOUSAND FACES,**
New work, Meridian Books.

**அகராதி & களஞ்சியம்**

1. சிங்காரவேலு முதலியார் - (1910) **அபிதான சிந்தாமணி,**
வைசெயந்தி அச்சுயந்திர சாலை.

2. ...................................... (1930) - **தமிழ் லெக்ஸிகன் (தொகுதி-4. பகுதி-1)**
சென்னை பல்கலைக் கழகம்.

3. சொக்கலிங்கம்.வீ. - (ப.ஆ.1975) **ஆசிரிய நிகண்டு,**
சரசுவதி மகால் நூல் நிலையம், தஞ்சாவூர்.

4. ஆசிரியர் குழு (2002) - **நர்மதாவின் தமிழ் அகராதி,**
நர்மதா பதிப்பகம், தி.நகர், சென்னை.

5. இராமநாதன்.P - **இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப்பெயரகராதி (தொகுதி-2)**
இன்ஸ்டியூட் ஆப் சவுத் இன்டியன் ஸ்டடீஸ், 6, நல்லதம்பி தெரு, எல்லீஸ் ரோடு, சென்னை.

6. அருணாசலம்.ப.(1988) - **சங்க இலக்கிய பொருட் களஞ்சியம் (தொகுதி-3),** தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

7. பரிமணம். அ.மா (1991) - **வாழ்வியற் களஞ்சியம் (தொகுதி-II),** தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

## ஆய்வேடுகள்

1. நிர்மலா.இரா.(1989) - **தமிழிலக்கியத்தில் மூப்பும் இறப்பும்,** பிஎச்.டி. ஆய்வேடு, சென்னை பல்கலைக் கழகம்.

2. ஜெயக்குமார்.நா. (1993) - **சைவசித்தாந்தம் உணர்த்தும் உயிர் அதன் வீடு பேற்றுக் கொள்கைகள் - ஓர் ஆய்வு,** முனைவர் பட்ட ஆய்வேடு, தத்துவத்துறை, இராமகிருஷ்ணாமிஷன், விவேகானந்தா கல்லூரி மயிலாப்பூர்,சென்னை -4.

3. புனிதப் பொற்கொடி.நா. - (1987) **சங்ககாலச் சமுதாயத்தில் நம்பிக்கைகளும் சடங்குகளும்,** எம்ஃபில் ஆய்வேடு, சென்னை பல்கலைக்கழகம்.

# அட்டவணை - 1

## 1.1 துறக்கமும் கலைச் சொற்களும்

| வ.எண் | சொல்லாட்சி | புலவர் பெயர் | பா.எண் |
|---|---|---|---|
| | | நல்லந்துவனார் | கலி.118:3 |
| | | நல்லந்துவனார் | கலி.139:34 |
| | | நல்லந்துவனார் | கலி.143:45 |
| | | மாமூலனார் | அக.233:7 |
| | | கடுவனிளவெயினனார் | பரி.5:69 |
| | | நல்வழுதியார் | பரி.12:84 |
| 1. | துறக்கம் | நல்லெழுநியார் | பரி.13:13 |
| | | இளம்பெருவழுதியார் | பரி. 15:17 |
| | | கடியலூர் | பரி.தி.1:47 |
| | | உருத்திரங்கண்ணனார் | பெரும்.388 |
| | | கடியலூர் | |
| | | உருத்திரங்கண்ணனார் | பட்.104 |
| | | நப்பண்ணனார் | பரி.19:6 |
| | | தும்பி சொகினனார் | புறம்.249 :11 |
| | | சாத்தந்தையார் | புறம்.287 :12 |
| | | மோசி கீரனார் | புறம்.50 :15 |
| | | காக்கைப் பாடினியார் | பதிற்.52:9 |
| | | நச்செள்ளையார் | பதிற்.54:10 |
| | | கபிலர் | பதிற்.70:19 |
| 2. | உயர்நிலையுலகம் | பெருங்குன்றூர் கிழார் | பதிற்.89:11 |
| | | நல்லந்துவனார் | கலி.139:36 |
| | | கபிலர் | குறு.361:2 |
| | | பேயனார் | ஐங்.442:3 |
| | | மாங்குடி மருதனார் | மது.197 |
| | | மாங்குடி மருதனார் | மது.471 |
| | | புல்லாற்றூர் எயிற்றியனார் | புறம்.213:10 |

| | | | |
|---|---|---|---|
| 3. | அரும்பெறல் உலகம் | கழாத்தலையார்<br>புல்லாற்றூர் எயிற்றியனார்<br>தாயங்கண்ணனார்<br>மாமூலனார் | புறம்.62:18<br>புறம். 213:23<br>அகம். 213:18<br>அகம். 55:14 |
| 4. | அரிது செல்லுலகம் | வடமோதங்கிழார் | புறம். 260:21 |
| .5. | உயர்ந்தோர் உலகம் | மாறோக்கத்து<br>நப்பசலையார் | புறம்.174:20 |
| 6. | தொய்யா உலகம் | கோப்பெருஞ்சோழன் | புறம்.214:8:9 |
| 7. | தேவருலகம் | ஐயூர் முடவனார் | புறம்.228:11 |
| 8. | மேலோருலகம் | கூடலூர் கிழார்<br>குட்டுவன் கீரனார் | புறம்.229:21<br>புறம்.240:6 |
| 9. | மேலோர் உறையுள் | நல்லழுசியார் | பரி.17:8 |
| 10. | புத்தேளுலகம் | குறுங்கோழியூர் கிழார்<br>மாங்குடி மருதனார் | புறம்.22<br>மது.698<br>பரிதி.2.4 |
| 11. | புத்தேள் நாடு | பரூஉ மோவாய்ப் பதுமன்<br>கபிலர் | .குறுந்.101:2<br>குறுந்.288:5 |
| 12. | ஆணிலைஉலகம் | காரிகிழார் | புறம்.6:7 |
| 13. | உயருலகு | நல்லந்துவனார் | கலி.138:31 |
| 14. | உம்பர் | பேயனார் | ஐங்.401:5 |
| 15. | பெரும்பெயர்உலகம் | வெண்பூதன் | குறுந்..83:2 |
| 16. | வாரா சேட்புலம் | கபிலர் | பதிற்.61:10 |
| 17. | வாரா உலகம் | பரணர் | புறம்.341:15 |
| 18. | மறுமை | உறையூர் ஏணிச்சேரி<br>முடமோசியார் | புறம்.134:1 |
| 19. | மறுமையுலகம் | செல்லூர்க் கோசிகன்<br>கண்ணனார் | அகம்.66:2 |
| 20. | செல்லும் உலகம் | குடபுலவியனார் | புறம்.18:13 |

| | | | |
|---|---|---|---|
| 21. | செல்வுழிச்செல்க! | ஔவையார் | புறம்.93:10 |
| 22. | நெடியோன் கோயில் | உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் | புறம்.241:3 |
| 23. | பசும் பொன்னுலகம் | கீரந்தையார் | பரி.2:3 |
| 24. | சிறந்தோருலகம் | நப்பண்ணனார் | பரி.19:11 |
| 25. | உக்கரை | பிரமனார் | புறம்.357:9 |
| 26. | விசும்பின் வலவனேவா வானவூர்தி எய்துப | உறையூர் முதுகண்ணன் சாத்தனார் | புறம்.27:7:8 |
| 27. | சேட்புலம் | மாமூலனார் | அகம்.61:3 |
| 28. | உயர்ந்தோர் நாடு | சிறுவெண்டேரையார் | புறம்.362:22 |
| 29. | நாகம் | ஔவையார் | புறம்.367 : 1 |
| 30. | மாவிசும்பு | மாங்குடி மருதனார் | மது.495 |
| 31. | தவலில் உலகம் | பரணர் | அகம்.178:16 |
| 32. | ஆண்டு | காவிட்டனார் | புறம்.359:17 |

## 1:2 துறக்கத்து வாழ்வோர்

| வ.எண் | சொல்லாட்சி | புலவர் பெயர் | பா.எண் |
|---|---|---|---|
| 1. | ஆண்டு வாழ்வோர் | மாங்குடி கிழார் | புறம்.26:18 |
| 2. | பொலம்பூங்காவின் நன்னாட்டோர் | ஆவூர் மூலங்கிழார் | புறம்.38:12 |
| 3. | உயர்ந்த தேத்து விழுமியோர் | மாங்குடி மருதனார் | மது.200 |
| 4. | வானவ மகளிர் | மாங்குடி மருதனார் | மது.582 |

## 1:3 துறக்கத்து வாழ்வோரின் உணவு

| வ.எண் | சொல்லாட்சி | புலவர் பெயர் | பா.எண் |
|---|---|---|---|
| 1. | அமிழ்தம் | கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி | புறம்.182:2 |
| 2. | அந்தரத்து அரும்பெறல் அமிழ்தம் | ஔவையார் | புறம்.392:19:20 |
| 3. | அரும்பெறல் அமிழ்தம் | 1.வெண்பூதன்<br>2.தாயங்கண்ணனார் | குறுந்.83.1<br>அகம்.213:18 |
| 4. | உயர்நிலை உலகம் அமிழ்தொடு | மாங்குடி மருதனார் | மது.197 |

## நரகம் குறித்த கலைச் சொற்கள்

| வ.எண் | சொல்லாட்சி | புலவர் பெயர் | பா.எண் |
|---|---|---|---|
| 1. | நிரயம் | நரிவெரூஉத் தலையார் | புறம்.5:6 |
| 2. | உய்தி இல்லென | ஆலத்தூர் கிழார் | புறம்.34:5 |
| 3. | நிரையம் | நம்பி குட்டுவனார் | நற்.236:5 |
| 4. | நிரையம் | மதுரை மருதங்கிழார் மகனார் சொகுத்தனார் | நற்.329:1 |
| 5. | நிரையம் | பரணர் | குறுந்.258:6 |
| 6. | நிரையம் | பரணர் | குறுந்.292:6 |
| 7. | நிரைய வெள்ளம் | குமட்டூர் கண்ணனார் | பதிற்.15:4 |
| 8. | நிரையம் | குமட்டூர் கண்ணனார் | பதிற்.15:30 |
| 9. | நிரையப் பெண்டிர் | ஓரோடகத்துக் கந்தரத்தனார் | அகம்.95:12 |
| 10. | நிரயம் | புறத்திணை நன்னாகனார் | புறம்.376:15 |

## அட்டவணை - 2

## 1.சேரநாட்டுப் புலவர்களும் பாடல்களும் (அகர நிரல்)

| வ.எண் | புலவர் பெயர் | துறக்கம் | நிரயம் | இலக்கியம் |
|---|---|---|---|---|
| 1. | கழாத்தலையார் | ✷ | | புறம்.62 |
| 2. | காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் | ✷ | | பதிற்.52,54 |
| 3. | குட்டுவன் கீரனார் | ✷ | | புறம்.240 |
| 4. | குமட்டூர் கண்ணனார் | | ✷ | பதிற்.15 |
| 5. | கூடலூர் கிழார் | ✷ | | புறம்.229 |
| 6. | நம்பி குட்டுவனார் | | ✷ | நற்.236 |
| 7. | நரிவெரூஉத்தலையார் | | ✷ | புறம்.5 |
| 8. | பெருங்குன்றூர் கிழார் | ✷ | | பதிற்.89 |

## 2. சோழநாட்டுப் புலவர்களும் பாடல்களும் (அகர நிரல்)

| வ.எண் | புலவர் பெயர் | திறக்கம் | நிரயம் | இலக்கியம் |
|---|---|---|---|---|
| 1. | ஆலத்தூர் கிழார் | | ✷ | புறம்.34 |
| 2. | ஆவூர் மூலங்கிழார் | ✷ | | புறம்.38 |
| 3. | உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் | ✷ | | புறம்.134,241 |
| 4. | உறையூர் முதுகண்ணன் சாத்தனார் | ✷ | | புறம்.27 |
| 5. | ஐயூர் முடவனார் | ✷ | | புறம்.228 |
| 6. | ஓரோடகத்துக் கந்தரத்தனார் | | ✷ | அகம்.95 |
| 7. | கடியலூர் உருத்திரங்கண்ணனார் | ✷ | | பெரும்.388 பட்.104 |
| 8. | காரிகிழார் | ✷ | | புறம்.6 |
| 9. | குறுங்கோழியூர் கிழார் | ✷ | | புறம்.22 |
| 10. | கோப்பெருஞ்சோழன் | ✷ | | புறம்.214 |
| 11. | சாத்தந்தையார் | ✷ | | புறம்.287 |
| 12. | செல்லூர்க் கோசிகன் கண்ணனார் | ✷ | | அகம்.66 |
| 13. | தாயங்கண்ணனார் | ✷ | | அகம்.213 |
| 14. | தும்பி சொகினனார் | ✷ | | புறம்.249 |
| 15. | புல்லாற்றூர் எயிற்றியனார் | ✷ | | புறம்.213 |
| 16. | புறத்திணை நன்னாகனார் | | ✷ | புறம்.376 |
| 17. | மாமூலனார் | ✷ | | அகம்.55,61,233 |
| 18. | வடமோதங்கிழார் | ✷ | | புறம்.260 |

### 3. பாண்டிநாட்டுப் புலவர்களும் பாடல்களும் (அகர நிரல்)

| வ.எண் | புலவர் பெயர் | துறக்கம் | நிரயம் | இலக்கியம் |
|---|---|---|---|---|
| 1. | இளம்பெரு வழுதியார் | ✷ | | பரி.15 |
| 2. | கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி | ✷ | | புறம்.182 |
| 3. | கடுவனிளவெயினனார் | ✷ | | பரி.5 |
| 4. | கபிலர் | ✷ | | குறுந்.288,361 பதி.70,61 |
| 5. | கீரந்தையார் | ✷ | | பரி.2 |
| 6. | குடபுலவியனார் | ✷ | | புறம்.18 |
| 7. | நப்பண்ணனார் | ✷ | | பரி.19 |
| 8. | நல்லந்துவனார் | ✷ | | பரி.11 கலி.118,138,139,143 |
| 9. | நல்லழுசியார் | ✷ | | பரி.17 |
| 10. | நல்லழுசியார் | ✷ | | பரி.13 |
| 11. | நல்வழுதியார் | ✷ | | பரி.12 |
| 12. | மதுரை மருதங்கிழார் மகனார் சொகுத்தனார் | | ✷ | நற்.329. |
| 13. | மாங்குடி கிழார் என்ற மாங்குடி மருதனார் | ✷ | | மது.197,471,200,582 495,698 |
| 14. | மாறோக்கத்து நப்பசலையார் | ✷ | | புறம்.174 |

## 4. கொங்குநாட்டுப் புலவர்களும் பாடல்களும் (அகரநிரல்)

| வ.எண் | புலவர் பெயர் | தோற்றம் | இலக்கியம் | நிரயம் | இலக்கியம் |
|---|---|---|---|---|---|
| 1. | ஔவையார் | ✷ | புறம்.93,392 | | |
| 2. | பரணர் | ✷ | அகம்.178,<br>புறம்.341, | ✷ | குறுந்.258,292 |

## 5. பிற புலவர்களும் பாடல்களும் (அகர நிரல்)

| வ.எண் | புலவர் பெயர் | துறக்கம் | நிரயம் | இலக்கியம் |
|---|---|---|---|---|
| 1. | காவிட்டனார் | ✷ | | புறம்.359 |
| 2. | சிறுவெண் டேரையார் | ✷ | | புறம்.362 |
| 3. | பரூஉ மோவாய்ப்பதுமன் | ✷ | | குறுந்.101 |
| 4. | பிரமனார் | ✷ | | புறம்.357 |
| 5. | மோசிகீரனார் | ✷ | | புறம்.50 |
| 6. | வெண்பூதன் | ✷ | | குறுந்.83 |

## அட்டவணை - 3
## 1.துறக்கம் செல்லும் நெறி

| வ.எண் | நெறி | பாடிய புலவர் | இலக்கியம் |
|---|---|---|---|
| 1. | வீரம் | 1.சாத்தந்தையார்<br>2.பரணர்<br>3.காக்கைப்பாடினியார் நச்செள்ளையார்<br>4.மாமூலனார்<br>5.ஔவையார் | புறம்.287<br>புறம்.341<br>பதிற்.52<br>அகம்.233<br>புறம்.93 |
| 2. | வடக்கிருத்தல் | 1.கோப்பெருஞ்சோழன்<br>2.மாமூலனார் | புறம்.214<br>அகம்.55 |
| 3. | கொடை | 1.உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்<br>2.காவிட்டனார் | புறம்.134<br>புறம்.359 |
| 4. | தவம் | நல்லந்துவனார்<br>நல்லந்துவனார்<br>மாங்குடி கிழார்<br>மாமூலனார் | கலி.138<br>கலி.139<br>புறம்.26<br>அகம் .61 |
| 5. | வேள்வி | மாங்குடி மருதனார்<br>பாலைக் கௌதமனார் | மது.468,474,493,499<br>பதிற்.3-ஆம் பத்து பதிகம் |
| 6. | ஆண்மக்கட்பேறு | செல்லூர்க் கோசிகன் கண்ணனார் | அகம்.66 |
| 7. | கணவனொடு இறத்தல் | 1.குட்டுவன் கீரனார்<br>2.நல்லந்துவனார்<br>3.பாலைக்கௌதமனார் | புறம்.240<br>கலி.143<br>பதிற்.3ம் பத்து பதிகம் |
| 8. | நல்வினையறம் | 1.நல்லந்துவனார்<br>2.மாறோக்கத்து நப்பசலையார் | கலி.118<br>புறம்.174 |

| | | | |
|---|---|---|---|
| | | 3.பிரமனார் | புறம்.357 |
| | | 4.ஆவூர் மூலங்கிழார் | புறம்.38 |
| | | 5.கோப்பெருஞ்சோழன் | புறம்.214 |
| | | 6.குடபுலவியனார் | புறம்.18 |
| | | 7.புல்லாற்றூர் எயிற்றியனார் | புறம்.213 |
| | | 8.நப்பண்ணனார் | பரி.19 |
| | | -- | பரி.தி.1 |
| 9. | புகழ் | 1.உறையூர் முதுகண்ணன் சாத்தனார் | புறம்.27 |
| | | 2.மோசிகீரனார் | புறம்.50 |
| 10. | இறைமை | நல்லெழுநியார் | பரி.13 |
| | | இளம்பெருவழுதியார் | பரி.15 |

## 2. நரகம் அடையும் நெறி

| வ.எண் | நெறி | பாடிய புலவர் | இலக்கியம் |
|---|---|---|---|
| 1. | அருளும் அன்பும் இல்லார் | நரிவெரூஉத்தலையார் | புறம்.5 |
| 2. | செய்ந்நன்றி கொன்றோர் | ஆலத்தூர் கிழார் | புறம்.34 |
| 3. | பெண்கொலை புரிந்தோர் | பரணர் | குறுந்.292 |
| 4. | பொய் பேசுவோர் | மதுரை மருதங்கிழார் மகனார் சொகுத்தனார் | நற்.329 |
| 5. | காதலுக்கு இடையூறு செய்வோர் | நம்பி குட்டுவனார் | நற்.236 |

# வைகுந்த வரவேற்பு

## வைகுந்த அழைப்பும் வரவேற்பும்

இந்தியத் திருநாட்டின் தென்கோடியில் பிறந்தருளிய பரஞானச்சுடர் சடகோபராவார். இளம் பருவத்திலேயே இறைவனருள் கைகூடி அவனை நேரே தரிசிக்கப் பெற்றுப் பரமஞானியாய் யோகத்தில் ஆழ்ந்து வேறு உலகச் சிந்தையற்று விளங்கியவர். இவர் தம் மெய்ஞ்ஞானத்தாலும் அன்பினாலும் இறைவன் அருளாலும் கண்ட மெய்ம்மைகளைத் திருவாய் மொழி திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்ற திவ்வியப் பிரபந்தங்களாக அருளிச் செய்தார். அந்த நூல்களில் திருவாய்மொழி மோக்கமாலை என்றும், தெய்வக் கவி என்றும் போற்றப் பெறும் திருவாய்மொழியிலுள்ள பத்தாம் பத்தில் ஒன்பதாம் திருவாய் மொழியில், வைகுந்தத்துக்குப் போவார் பெறுகின்ற உபசாரங்களைத் தொலைக்காட்சி நிகழ்சி போலப் படம்பிடித்துக் காட்டுகிறார்.

ஆழ்வாருக்குப் பலமான ஆவல் உண்டாவதற்காக அர்ச்சிராதி மார்க்கத்தாலே வைகுந்தத்துக்குப் போவதையும் அதில் போகிறவனுக்கு நடக்கும் உபசாரங்களையும் திருமால் அவருக்குக் காட்ட, அவற்றை ஆழ்வார் பார்த்து, ஒன்பதாம் திருவாய் மொழியில் பேசுகிறார். திருவாய் மொழியைத் தொடர்ந்து பாடிவந்த சடகோபர், ஆறாம் திருவாய் மொழியிலும் ஏழாம் திருவாய் மொழியிலும் திருமால் சடகோபரை வைகுந்தத்துக்கு அழைத்துக் கொண்டு போகப் பதறுவதாகக் கண்டார். அதைக் கண்டு எட்டாந்திருவாய்மொழியில் சடகோபர், 'திருமாலிருஞ் சோலை மலை என்று சொன்னதன்றி வேறேதும் யான் செய்யவில்லையே' என்று திருமால் தனக்கு அருளியதைக் கண்டு வியந்து நின்றார். இவ்வாறு நின்றவர், திருமால் கருணையால் வைகுந்தம்

போவதாய் உணர்ந்து அடுத்து அவர் ஒன்பதாம் திருவாய்மொழியில், வைகுந்த வரவேற்பு மரபுகளைப் பேசுகிறார். சடகோபர் திருவாய்மொழி பல பாசுரங்களில் திருமாலை அடையச் சொல்லி ஈற்றயலாக இதனை அமைத்திருப்பது கருத்து அமைப்பின் சிறப்பை உணர்த்துவதாகும்.

இதன்கண் முழுக்க முழுக்கச் சடகோபர், வைகுந்தச் செலவை முழுவதுமாக அனுபவிக்கிறார். பயண இலக்கியமாக இத்திருவாய்மொழி திகழுகிறது.

### வைகுந்தம் செல்லுவோர்

இன்பம் நிறைந்த இருப்பிடமே சொர்க்கம் என்பதாம். இங்கு மனிதன் விரும்புகின்ற அனைத்து நலன்களும் அமைந்திருக்கும். இதனையே வைணவர்கள் 'வைகுந்தம்' என்பர். திருமாலின் திருவருளால், அடியார்கள் வைகுந்தம் எய்துவர். வைகுந்தத்தில் திருமாமணி மண்டபத்தில் நித்திய சூரிகளுடன் கூடத் தொண்டர்கள் சூழப் பரமபதநாதன் வீற்றிருப்பர். கிட்டரிதாய வைகுந்தம் சென்று சேரும் வைணவர்களை மேலோர் வரவேற்பதையும் அவரகள் எய்தும் பேற்றையும் சடகோபர் பாசுரங்களில் வருணித்துரைக்கிறார். வைகுந்தம் செல்லும் அடியானாகச் சடகோபர் தன்னை வைத்துப் பாடாது, வைணவ அடியார்கள் அனைவரும் செல்வதாகப் பாடுகிறார் ; சடகோபர் பாசுரங்களைப் பாடினாலும், பொது நிலையில் 'கேசவன் தமர்' என்றே சொல்லுகிறார்.

### கண்டு வந்து சொன்ன பெருமை

சடகோபர் வரப்போகின்றவற்றையும் நடந்தவற்றையும் மிகவும் தெளிவாய்ப் பார்த்து, வேறொன்றின் கலப்பில்லாமல் ஒன்றன்பின் ஒன்று

வருவதைக் கண்டு, அவை வந்து விட்டதாகக் கருதி வைகுந்தம் சென்றதாக ஒன்பதாம் திருவாய்மொழியில் உரைக்கின்றார். வைகுந்தம் யாங்ஙனமிருக்கும் என்று கண்டு வந்து சொன்னவர் எவருமிலர்; ஆழ்வாரனைய அருளாளர்களே தம் ஞானத்தால் இத்தகைய எட்டாப்பதிகளைத் தம் திருவருளால் கண்டு மெய்யுரைக்க இயலும். இவற்றை ஓதி உணர்ந்த ஞானிகளும், பாசுரங்களிற் சொல்லியாங்குத் தாமும் அத்தகைய பேற்றைப் பெற ஸ்ரீவைணவராய் வாழ்ந்திடுவர்: அப்பேற்றை எய்த மக்களும் முனைவர் ; ஆதலின் வைகுந்த வரவேற்பு, மக்கள் வாழ்க்கைக்கு வழிகாட்டியாய் வைகுந்தம் அடைய ஒவ்வொருவரும் முயல வேண்டும் என்று அறிவுறுத்துவதாய் அமைகிறது.

**மண்ணக வழியனுப்பு**

நாராயணன் தமராகிய அடியவர், மண்ணகத் தொண்டராவார்; அவர்கள் வைகுந்தத்திற்கு மண்ணகத்திலிருந்து புறப்படுகின்றனர். மண்ணுலகத்திலிருந்து அடியார் புறப்படுதலை முதற்பாசுரம் பேசுகிறது. வைணவத் தொண்டர்கள், வைகுந்தம் செல்லுதலை உணர்ந்து, வானத்தைச் சூழ்ந்த மேகங்கள் தூரியம் (மங்கலப் பறை) போல முழங்கின: அந்த மங்கல ஒலிக்குத் தகக் கடலானது தன் திரைக் கரங்களால் நடனமாடின: ஏழு தீவுகளும் மங்கலம் நிறைந்த உயர்ந்த பொருள்களை ஏந்திக் கொண்டு நின்றன (பாசுரம்1). மன்னன் மகன் வெளியே புறப்பட்டுப் போனால் மன்னன் மகனுக்கு அம்மன்னனுடைய பரிவாரங்களும் படைகளும் அன்புடன் மரியாதை காட்டுமாறு, திருமாலின் தமர் வைகுந்தம் போகும்போத அவரைச் சேர்ந்தவர்கள் மரியாதை காட்டுகின்றனர். இவை மண்ணுலக நிகழ்ச்சிகள்.

வைகுந்தத்திற்கு வழியனுப்பும் நிகழ்ச்சிகள் வைணவ அடியார்களுக்குப் பெருமை தருவனவாக அமைகின்றன. இத்தகைய வரவேற்பு எல்லாருக்கும் கிட்டுவதில்லை: பேறுவாய்க்கப் பெற்றவர்களான, நாராயணன் தமர்களான வைணவத் தொண்டர்களுக்கே வாய்ப்பதாகும்.

## பூரணகும்ப மரியாதை

மன்னர்களும் சான்றோர்களும் சமயத் தலைவர்களும் ஊருக்கோ கோயிலுக்கோ வருவார்களேயானால், அவர்களை நிறைகுடம் (பூர்ணகும்பம்) வைத்து வரவேற்பது வழக்கம்: இக்குடம் வெள்ளியாலோ தங்கத்தாலோ ஆனதாக இருக்கும். இதனைப் 'பூரண கும்ப மரியாதை' என்று போற்றுவர். இத்தகைய வரவேற்பைப் பெருங்கதை 'பொன்னின் அடைப்பையும் பூரண கலசமும்' (உஞ்சை:32:73) என்று இயம்பும். அதற்கு முந்திய மணிமேகலை 'பூரண கும்பமும் பொலம் பாலிகைகளும்' (மணி 1:44) என்று சுட்டும். இந்த வரவேற்பு நிகழ்ச்சி பிற்காலத்திலும் தொடர்ந்திருந்திருக்கிறது; இதனால் இதனைச் சடகோபரும் குறிப்பர். வைணவத் தொண்டர் வருகின்றனர் என்பதை உணர்ந்து நீருண்ட மேகங்கள், வானத்தில் பொன்னால் செய்யப்பட்ட குடத்தில் நீரை நிறைத்து வரவேற்றன. இந்த வரவேற்பு மரியாதையை விளக்கும் பாசுரம்:

நாரணன் தமரைக்கண் டுகந்துநன் னீர்முகில்
பூரண பொற்குடம் பூரித்த துயர்விண்ணில்
நீரணி கடல்கள்நின் றார்த்தன நெடுவரைத்
தோரணம் நிரைத் தெங்கும் தொழுதனர் உலகே

(10:9:2)

பூரணகும்பத்தில் நீர் நிறைத்து மாவிலை செருகித் தேங்காய் வைத்து வரவேற்பது உலகியல்: அதனையே 'பூரண பொற்குடம்' என்று மட்டும் பாசுரம் பேசுகிறது: வரவேற்பு நிகழும் போது மங்கல வாத்தியங்கள் ஒலிக்கும்: அலைகளால் அழகு செய்யப் பெற்ற கடல்கள் ஆரவாரித்தன: வரவேற்பு நிகழுங் காலத்தே, நிகழுமிடத்தில் மாவிலைத் தோரணம் கட்டப்பட்டிருக்கும்: உயர்ந்த மலைகள் தோரண வரிசையாகக் காட்சி தருகின்றன. இத்தகைய அழகு செய்து வருவோரைத் தொழுது அந்தரலோகத்திலுள்ளவர்கள் (வானம்) மகிழ்ந்து வரவேற்கின்றனர். ஆழ்வார், மண்ணுலகத்திலிருந்து சிறிது சிறிதாக மேலே சென்று வைகுந்தம் அடைவதை இரண்டாம் பாசுரத்தில் தெளிவுறக் காட்டுகிறார்.

பூரண பொற்குடம், மங்கல ஓசை, தோரணம் கட்டுதல் போன்றவை இன்றும் சான்றோர் வரவேற்பில் காணப்படுவன.

### வரவேற்பாளரின் அன்புச் செயல்

கடவுகளின் படைப்புகளான இயற்கையெல்லாம் திருமாலினடியாரை வைகுந்தத்திற்கு மகிழ்ச்சியோடு வருக வருக என்று வரவேற்று மரியாதை கொடுத்து மதிக்கலாயின. அடுத்த பாசுரத்தில், வைகுந்தம் போகிறவர்களை அழைத்துக் கொண்டு போகின்ற ஆதவாகிகர்களின் வரவேற்பு சொல்லப்படுகிறது.

தொழுதனர் உலகர்கள் தூபநன் மலர்மழை
பொழிவனர் பூமியன்று அளந்தவன் தமர்முன்னே
எழுமினென்று இருமருங்கு இசைந்தனர் முனிவர்கள்
வழி இது வைகுந்தற்கு என்று வந்து எதிரே (10:9:3)

என்று பாடுகிறார் சடகோபர். சூக்கும உடல் பெற்றவர்கள் வாழுகின்ற உலகத்திலிருக்கின்ற ஆதிவாகிகர்கள், நாரணன் அடியார்களைக் கண்டு கைகூப்பி வரவேற்கின்றனர். மணப்புகை காட்டி நன்மலர் பொழிந்து வைகுந்தப் பெருமானைக் காண இது வழி என்று காட்டிநின்றனர்: முனிவர்கள் எதிரே வந்து 'இப்படி வரவேண்டும்' என்று இரண்டு பக்கங்களிலும் சொல்லி நின்றனர்.

இதற்கு அடுத்த பாசுரத்திலும், ஆதிவாகிகர்கள் திருமாலடியார்க்குச் செய்யும் உபசாரத்தையே சடகோபர் பேசுகின்றார். திருமாலடியார்களுக்கு வைகுந்தத்திற்குப் போகிற வழிகளில் தங்குவதற்குத் தோப்புகள் அமைத்தனர்: கதிர்களையுடைய அக்கினி, சூரியன், சந்திரன், மின்னல் ஆகியன தங்களின் ஒளிக்கரங்களால் கைகளை வரிசை வரிசையாகக் காட்டி வழியைத் தெளிவுபடுத்தினர். முரசங்கள் அலைகிற கடல் போல முழங்கின (10:9:4)

### மாதவன் தமர் பெறும் பேறு

இவர்களைக் கடந்து மின்னலுக்கு மேல் வருகிற வருணன், இந்திரன், பிரஜாபதி என்கின்ற ஆதிவாகிகர்கள், மாதவன் அடியார்க்குச் செய்யும் உபசாரங்களை அடுத்த பாசுரம் உரைக்கின்றது.

மாதவன் தமர்என்று வாசலில் வானவர்
போதுமின் எனது இடம் புகுதுக என்றலும்
கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்கள்
வேதநல் வாயவர் வேள்வியுண் மடுத்தே (10:9:5)

இவ்வாறு பலரும் மாதவன் அன்பர் என்று கருதித் தங்கள் இடங்களையும் செல்வங்களையும் பெற்றுக் கொள்ள வேண்டும் என்று வைணவர்

திருமுன்னிட்டனர். வேதம் ஓதி வேள்வி செய்த பயன் பெற்றவர்களும் தங்கள் பயன்களை மாதவன் அன்பருக்கு வழங்கினர். இவ்வாறு நடக்கும்போது கின்னரர் கிம்புருடர் கீதமிசைத்தனர். மிகச் சிறந்த முறையில் திருமாலடியார்க்கு இன்னிசை முழங்க வரவேற்பு நிகழ்வதைச் சடகோபர் எடுத்துரைக்கின்றார்.

## மங்கையரின் வரவேற்பு

அவண் உள்ள ஆடவரேயன்றி மகளிரும் இந்த இனிய வரவேற்பில் பங்கு பெறுகின்றனர். மங்கல மகளிர் முன்னே நின்று வரவேற்க வேண்டுவது இன்றியமையாதது. வேள்வி செய்தவர்களிற் சிலர் நல்ல மணமுள்ள தூபங்களால் புகையூட்டினர். பிறர் எல்லா இடங்களிலும் காளங்கள், வலம்புரிச் சங்குகளை ஊதி முழக்குகின்றனர். பெண்கள் மாதவனடியார் வைகுந்தமாகிய வீட்டை ஆளுங்கள் என்று வாழ்த்துகின்றனர்.

ஆள்மின்கள் வானகம் ஆழியான் தமர் என்று
வாள்ஒண்கண் மடந்தையர் வாழ்த்தினர் மகிழ்ந்தே
(10:9:6:4-4)

என்பது பாசுரப் பகுதி. மகளிர் வாழ்த்துதலைக் கண்ட ஏழு மருத்துவர்களும் எட்டு வசுக்களும் திருமாலடியார்க்குத் தொடர்ந்து எங்கும் தோத்திரம் சொல்லுகின்றனர். (10:9:7). இவ்வாறு பிரகிருதி மண்டலத்தில் நடந்த வரவேற்பு நிகழ்ச்சியை இப்பாசுரங்கள் விவரிக்கின்றன.

**ஆற்றிடை வரவேற்பு**

இம்மண்டலத்தை விடுத்து வைகுந்த உலகத்துக்குப் போகும்போது அளிக்கப் பெறுகின்ற வரவேற்பை அடுத்து வரும் பாசுரங்கள் பேசுகின்றன. வைகுந்தலோகத்தின் ஆத்தான வாயிலான கோபுர வாசலைச் சடகோபர் உரைக்கின்றார். 'கொடியணி நெடுமதில் கோபுரம்' என்பது பாசுரம். அவண் 'முடியுடை வானவர்' (நித்திய சூரிகள் - பரமபதத்து வாழும் நித்தர்) வரிசை வரிசையாக நின்று தாமோதரன் தமரை வரவேற்கின்றனர். மாதவன் தமர் வருவதை எதிர்பார்த்துப் பல்வேறு அலங்காரங்கள் கோபுர வாசலில் செய்யப்பட்டிருக்கின்றன. இக்கோபுர வாயில் வழியாக வைகுந்தத்துக்குள் நுழைவதாகச் சடகோபர் காட்டுகிறார். மன்னர்களுடைய அரண்மனை போல மதிளும் கோபுர வாயிலும் வைகுந்தத்துக்கு இருந்ததாகத் தெரிகின்றது.

**துவார பாலகரும் மண்ணுலகத்தவரும்**

கோபுர வாயிலைக் காவல் செய்யத் துவார பாலகர் இருப்பர்: வைகுந்த வாசலைக் காக்கின்ற வானவர்களும் ஏனையோரும் திருமாலடியார்க்கு உபசாரங்கள் செய்கின்றனர். இதனை

வைகுந்தம் புகுதலும் வாசலில் வானவர்
வைகுந்தன் தமர்எமர் எமதுஇடம் புகுதென்று
வைகுந்தத்து அமரரும் முனிவரும் வியந்தனர்
வைகுந்தம் புகுவது மண்ணவர் விதியே (10:9:9)

என்று பாசுரம் பாடுகின்றது. வைகுந்த வாசல் புகுந்ததும் வானவர் (துவார பாலகர் - நித்திய சூரி) "வைகுந்தனைச் சேர்ந்தவர்கள் எங்களுக்கும் தலைவர்" என்று இயம்பி 'உள்ளே வரவேண்டி' நின்றனர். எம்பெருமானுக்குக்

கைங்கரியம் செய்கிற நித்திய சூரிகளும் (வானவர்) அவன் குணங்களைத் தியானம் பண்ணிக்கொண்டேயிருக்கிற நித்தியசூரிகளும் (முனிவரும்) "மண்ணுலகிலுள்ளவர்கள் இந்த வைகுந்தத்துக்கு வரும்படி நாங்கள் என்ன பாக்கியம் பண்ணினோம்" என்று வியப்படைந்தார்கள். வைகுந்தனை வணங்கி அவன் தமராக வாழ்ந்தால் வைகுந்தப் பேறு கிட்டும்: மக்கள் வைகுந்தம் அடைவதற்கு இதுவே தகுந்த வழியாகும்.

**கோட்டைக்குள் மரியாதை**

வைகுந்தக் கோபுர வாயில் வழியே உள்ளே புகுந்து வீதிகள் வழியாகச் செல்லும் தொண்டர்களுக்கு உபசாரங்கள் நிகழ்கின்றன. நல்வேதியர்கள் "நம்முடைய பாக்கியத்தினால் மாதவன் தமராகிய வைணவ அடியார்கள் வந்து புகுந்தார்கள்" என்று தங்கள் வீடுகளில் தகுந்த முறைப்படி, அவருடைய பாதங்களைக் கழுவினர். சந்திரன் போன்ற முகமுடைய திருமாலின் தேவியரான திருமகள், நப்பின்னை ஆகியோர் ஸ்ரீ சூர்ணத்தையும் பூரண கும்பங்களுடன் கூடின தீபங்களையும் ஏந்தி நின்றார்கள்.

நிதியும்நற் சுண்ணமும் நிறைகுட விளக்கமும்
மதிமுக மடந்தையர் ஏந்தினர் வந்தே (10:9:10)

முதற்பாசுரத்தில் பூரண பொற்குடம் ஏந்தி வரவேற்றலைச் சொன்னவர், இங்கு நிறைகுடம் ஏந்தி வரவேற்றலைக் கூறுகிறார்.

இவ்வாறு உயர்ந்தோர் வந்து எதிர் கொண்டழைத்துச் செல்லத் திருமாமணி மண்டபத்திலே முடிவில்லாத பேரானந்தத்தையுடைய அடியாரோடு மாதவன் தமர் வீற்றிருக்கின்றனர். சடகோபரும் அவரைச் சார்ந்த வைணவப் பெருமக்களும் வைகுந்தம் சென்ற வகையையும்

பெற்ற வரவேற்பையும் திருவாய்மொழி உரைக்கின்றது. இத்திருவாய்மொழியின் ஆழ்ந்த கருத்தைச் சுருக்கமாகவும் நெருக்கமாகவும் பெருக்கமாகவும்,

சூழ்ந்துநின்ற மால்விசும்பில் தொல்லைவழி காட்ட
ஆழ்ந்த தனை முற்றும் அனுபவித்து - வாழ்ந்து அங்கு
அடியருடனே இருந்த ஆற்றை உரை செய்தான்
முடிமகிழ் சேர்ஞான முனி

என்று திருவாய்மொழி நூற்றந்தாதி உரைக்கின்றது. இவ்வந்தாதி, எல்லாவற்றையும் சடகோபர் அனுபவித்துணர்ந்தார் என்றுரைக்கின்றது.

**பாசுரத்தின் நோக்கம்**

வைகுந்தம் சென்று அங்குப் பரமபதநாதன் வீற்றிருக்கும் திருமாமணி மண்டபத்தில் அவனைத் தரிசித்து நின்றமையைத் திருவாய்மொழி படிப்படியாக விவரிக்கின்றது. மண்ணுலகிலிருந்து வானுலகம், அந்தர உலகம், வைகுந்தம் என்று அடியார் செல்லுவதாகப் பாசுரங்கள் காட்டுகின்றன. இவையனைத்தும் சொர்க்கம் என்ற பொருளிலமைந்தவை. ஒவ்வொரு இடத்திலும் வைணவருக்கு ஒவ்வொரு வகையான வரவேற்பு, மரியாதை கிடைக்கின்றன. இந்திரன், கதிரவன், ஏழு மருத்துவர், எண்வசுக்கள், முனிவர்கள், நித்தியசூரிகள் என்று பலரும் வைணவச் சான்றோரை அன்புடனும் போற்றுதலுடனும் மரியாதையுடனும் வரவேற்கின்றனர். வைகுந்தத்தில் திருமாலின் தேவியர் மூவரும் வரவேற்கின்றனர். 'பாதங்கள் கழுவினர்' என்பது பாசுர வாசகம். பரமபதநாதனுக்குச் செய்யும் சேவை மரபுகள் தொண்டருக்கும் செய்வதாகப் பாசுரம் கூறுகிறது. திருமாலின் திருவடிகளைத் தொழுது

பணிந்தாலும் அவனுடைய திருநாமத்தைச் சொன்னாலும் வைகுந்தம் அடையும் பேறு கிட்டும். இந்த மெய்யை உணர்த்திடச் சடகோபர் திருவாய்மொழியை இவ்வாறு பாடுகின்றார். வழிபாடு வீடு பேற்றைத் தரும் என்பதை வெளிப்படுத்தவே இந்த வகையாகத் திருவாய் மொழியின் ஈற்றயலில் ஆழ்வார் வைகுந்தம் புகுதலைக் கூறுகின்றார்.

சடகோபர் தாம் ஒருவரே வைகுந்தம் சென்றதாகவும் வரவேற்புப் பெற்றதாகவும் பாடாது, மாதவன் தமர் என்றும், நாரணன் தமர் என்றும், வைணவ அடியார் திருக்கூட்டத்தைக் கொண்டு பாடியது சிறப்பினது; வைணவ சமய அடிப்படையைக் காட்டவல்லது. இத்திருவாய்மொழி வைணவம் கூட்டமாகப் பாசுரங்களை ஓதியும் உரைத்தும் வளர்ந்த வளர்ச்சியைக் காட்டும் தகையது.

## வைகுந்தம் போகும் ஊர்தி

மாதவன் தமரெல்லாம் நாராயணன் திருவருளாலேயே மண்ணுலகிலிருந்து வைகுந்தம் புக்கனர். ஆனால் அவர்கள் எந்த ஊர்தியால் எவ்வகையாகப் போயினர் என்று தெரியவில்லை. கண்ணகி வானூர்தியில் விண்ணுலகம் போகிறாள்: திருநாவுக்கரசர் நீரில் மூழ்கித் திருவையாறு போந்து கைலாசக் காட்சி காண்கிறார். நபிகள் நாயகம் மிகுராஜ் போன போது ஏணியில் செல்கிறார். இவ்வண்ணம் ஒவ்வொருவரும் துறக்கத்தை எய்தியமையைச் சமய இலக்கியங்கள் சாற்றுகின்றன. சடகோபர் வைகுந்தம் போக நாராயணன் திருவருளே துணையாயிற்றன்றி வேறில்லை.

## தொன்று தொட்டு வரும் வரவேற்பு மரபு

வைகுந்தத்துக்குச் சென்ற போது, வைணவ அடியாருக்குக் கிடைத்த வரவேற்பு இன்றும் சான்றோர், அமைச்சர் வரவேற்பில்

காணப்படும் வரவேற்பு மரபாகும். தொடக்கத்தில் 'பூரண பொற்குடமும்' நிறைவில் 'நிறைகுட விளக்கமும்' இடம் பெறுகின்றன: மங்கல முழக்கம் சீரும் சிறப்புமாக முழங்குகின்றது. ஆழ்வார் காலத்தில் உலகியலிலிருந்த வரவேற்பு முறையினைத் திருவாய்மொழியிலும் காண முடிகின்றது. சடகோபர் திருவாய்மொழியின் முற்பகுதியில் பரமபதநாதனை அடைதற்குரிய நெறிகளைச் சொல்லி வந்தமையால், இத்திரவாய்மொழியில் வைகுந்தம் போதலும், அங்குக் கிட்டும் வரவேற்பும், பரமபதநாதனைத் தரிசித்தலும் பேசப்படுகின்றன.

**வைகுந்த நினைவும் வைகும் மண்ணுலக நினைவும்**

ஆழ்வார் வைகுந்தத்திலிருந்து, பரமபத நாதனைத் தெளிவாகப் பார்த்துத் தாம் இந்த மண்ணுலகில் இருப்பதை மறந்து தாம் வைகுந்தத்திலிருப்பதாகக் கருதி, நித்திய சூரிகளைப் போலத் தொண்டு செய்யத் தொடங்கினார்: ஆனால் பிரகிருதி உலகில் வாழும் மானிடர்க்கு அது முடியவில்லை. அக்காலச் சடகோபருக்குத் தம்முடைய இருப்பு நினைவு வந்தது. தான் வைகுந்தம் போக வேண்டும் என்று விரும்பி ஆழ்வார் எம்பெருமானைக் கூவி அழைக்கின்றார். இதனை எட்டுப் பாசுரங்களில் பாடிய ஆழ்வார் ஒன்பதாம் பாசுரத்தில் எம்பெருமான் ஆழ்வாரை அழைத்துக் கொண்டு போக எழுந்தருள அதனைக் கண்டு அன்புற்று அப்பாசுரத்தை நிறைவு செய்கிறார். இவ்வாறு அடுத்த பத்தாம் திருவாய்மொழியில் வைகுந்தப் பேறு சடகோபருக்குக் கிட்டிவிடுகிறது.

சடகோபர் மிகச் சிறந்த முறையில் பலநூறு பாசுரங்கள் பாடிமுடித்தபின் வைகுந்தச் செலவைப் பாடுகின்றார்: ஆனால் வைகுந்தக் காட்சிகளை இங்கே ஆழ்வார் பாடவில்லை. திரநாவுக்கரசர் கைலாயக்

காட்சியைக் கண்டு திருவையாற்றுப் பதிகத்தில் விவரித்துப்பாடுகிறார்: ஆனால் அவர் கைலாயம் சென்று வகைகையையும் அங்கு அவர்க்குக் கிட்டிய வரவேற்பையுமே தேவாரம் பாடுகின்றது. சடகோபரின் திருவாய்மொழி மாதன் தமராயின் அவர்க்கு எவ்வகையில் சிறப்பான வரவேற்பும் போற்றுதலும் கிடைக்கும் என்பதைக் காட்டித் திருமாலைத் தொழ அடியார்களை ஆற்றுப்படுத்துகிறது.